# அழிவற்ற வாழ்வு





ஜே. சி. குமரப்பா

# அழிவற்ற வாழ்வு



ஜே. சி. குமரப்பா
எழுதியது

மு. அருணாசலம்
தமிழாக்கியது

தமிழ் நூலகம்
திருச்சிற்றம்பலம்
1953

முதற் பதிப்பு 1-7-1953

விலை ரூபா இரண்டரை



தமிழ் நூலகம்

திருச்சிற்றம்பலம்

மரத்துறை தபால், குத்தாலம் S. R.



சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை - சென்னை.

# பொருளடக்கம்

# பதிப்புரை

காந்தியத்துக்குத் தர்க்க ரீதியான சாஸ்திர புத்தகங்கள் சிலவுள்ளன. அவற்றுள் ஸ்ரீ ஜே. சி. குமரப்பா எழுதியவை முதல் நூல்கள் எனத்தக்கவை. அவர் எழுதிய "கிராம இயக்கம்" என்ற புத்தகம். தமிழில் வெளியாகியுள்ளது. இப்போது வெளியாவது அதைப்போன்ற இரண்டாவது புத்தகம். காந்தியம் பற்றி அனேகர் நூல் எழுதியிருப்பினும், குமரப்பா எழுதியவையே மூல நூல்கள் என்றும் சாஸ்திரம் என்றும் சொல்லத் தக்கவை. பொதுவாக, மகாத்மா காந்தி சொன்னார் என்பதற்காக அவர் கருத்துக்களை யோசிக்காமலே ஏற்றுக்கொண்டவர்களும், ஏற்று நூல் எழுதியவர்களும், அனேகர். ஆனால், ஸ்ரீ குமரப்பாவோ காந்தியத்தைத் தாமாகத் தம் வாழ்வில் கண்டுணர்ந்து, தம் கூர்த்த அறிவினால் அதற்குப் புதுச்சாஸ்திரம் வகுத்தவர்.

இப்புத்தகம் அவர் எழுதிய "அழிவற்ற வாழ்வு" என்ற நூலின் முதல் பாகத்தின் மொழிபெயர்ப்பு. இதன்கண் உள்ள படங்கள் வர்தா அகில இந்தியக் கிராமக் கைத்தொழிற் சங்கத்தார் உதவியவை.

குமரப்பா அவர்களின் ஆங்கிலம், உணர்ச்சிவேகம் நிறைந்த நடை. மொழி பெயர்த்தல் எளிதன்று. பலவேலைகளுக்கிடையில் இந்நூலை மொழி பெயர்த்து அச்சிட்டமையால் குறைகள் காணப்படுவது இயல்பு. அன்பர்கள் பொறுக்க.

# முகவுரை

டாக்டர் குமரப்பா முன் எழுதிய 'ஏசுநாதர் போதனைகள்' என்ற சிறுபுத்தகம் போல, அழிவற்ற வாழ்வு என்ற இந்தச் சிறு புத்தகமும், சிறையில் எழுதப்பட்டது. ஆனால், அதைப்போல் இதை எளிதில் புரிந்துகொள்ள முடியாது. இதிலுள்ள கருத்துக்களைப் பூரணமாய் உணர்வதென்றால், இரண்டு மூன்று முறை இதைக் கவனமாய்ப் படிக்கவேண்டும். இதன் கையெழுத்துப் பிரதியை முதலில் நான் பார்த்தபோது, இதற்குள் என்னதான் இருக்கும் என்று அறிய அவா ஏற்பட்டது. முதல் அத்தியாயத்தைப் படித்ததுமே, என் அவா திருப்தி யடைந்தது. மேலும் மேலும் முடிவு வரையில் சோர்வில்லாமல் படித்தேன்; படித்து நன்மை யடைந்தேன். கிராமக் கைத்தொழிற் பண்டிதரான இவ்வாசிரியர், நம்மைச் சுற்றிலும் இப்போது நாம் பார்க்கிற நிலையற்ற செல்வத்துக்குப் பதிலாக நிலைத்த செல்வம் வேண்டுமானால், கிராமக் கைத்தொழில்களின் மூலம்தான் அது சாத்தியம் என்று காட்டுகிறார். ஆன்மாவை இந்த உடல் வென்று அதற்கு இடமில்லாதபடி செய்யுமா, அல்லது உடலின்மீது ஆன்மா ஆட்சி செலுத்தி, அழிகிற உடலுக்குள்ள சொற்பத் தேவைகளை ஆரோக்கியமான முறையில் பூர்த்திசெய்து, அழியாத ஆன்மாவின் லக்ஷ்யங்களுக்கு அதை உதவ வல்லதாக்கி, அதன்மூலம் தன்னுடைய பூரண விகாசத்தையும் வெளிப்படுத்த முடியுமா என்பது கேள்வி. இந்தக் கேள்வியை ஆசிரியர் இங்கு ஆராய்கிறார். 'எளிய வாழ்க்கையும் உன்னத சிந்தனையும்' என்று சொல்வது இதுவே.

பம்பாய் செல்லும் ரயிலில்,
20—8—1945

மோ. க. காந்தி

# முன்னுரை

முன்னமே நான் எழுதிய ‘கிராம இயக்கம்’ என்ற புத்தகத்தில், இந்தியாவிலுள்ள நிலைமைகளையும் முக்கியமான மேலைநாடுகளிலுள்ள நிலைமையையும் ஆராய்ந்தேன். இந்தப் புத்தகத்தில், இந்த நாட்டு மக்களின் பண்புக்கு ஏற்ற ஒரு வாழ்க்கை முறையைக் காட்டுவதற்கான முயற்சியைக் காணலாம்.

மதம் என்பது இன்று நடைபெறும் ரீதியில், கோயில் முதலான ஸ்தாபனங்களையும் சடங்குகளையும் ஒட்டியதாகவே இருக்கிறது. மக்களுடைய தினசரிக் காரியங்களில் மதத்துக்கு இருந்த ஆதிக்கம் போய்விட்டது. இதனால் அனேகர், மதத்திலேயே பற்றிழந்து, அதை ஒரு மூடநம்பிக்கை என்றும், நம்மை விட்டு அதை ஒதுக்க வேண்டுமென்றும் கருதுகிறார்கள். இப்படி வாழ்க்கையிலிருந்து மத உணர்ச்சிவிலகிப் போனதன் கிரமமான பலன் என்னவென்றால், பொருளாதாரம் அல்லது செல்வநிலை என்பது முழுமையும் நல்லொழுக்கத் தத்துவங்களுக்குப் புறம்பானது என்றாகிவிட்டது; விவகாரம் என்றால் விவகாரம் தானே என்கிறார்கள். அறிவு என்ற சம்பிரதாயமான பெட்டகத்தில், சமயம், சமூகவியல், பொருளாதாரம் என்பவற்றுக்கெல்லாம், தனித்தனியான, மற்றவற்றோடு கலப்பில்லாத அறைகளை ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். அப்படியே மனிதனும் ஒன்றோடொன்று கலக்க முடியாத பலவேறு பிரிவுகளாக இருக்கிறான். வலது கை செய்வதை இடது கை அறியலாகாது. ஆனால், இயற்கை இத்தகைய பிரிவுகளை ஒப்புக்கொள்வதில்லை. அது ஜீவியம் முழுமையும் பூரணமான ஒன்றாகவே கருதுகிறது. ஆதலால், மனிதனுடைய பல்வேறு பிரிவுகளையும் ஆள்கிற அனேக தத்துவங்களை ஒன்று சேர்க்கவும், மனிதனை வேறுபிரிக்க வியலாத ஒரே பொருளாய்க் கருதி அவனுடைய தினசரி வாழ்க்கையில் எழும் பிரசினைகளிலெல்லாம் அந்தத் தத்துவங்களைப் பொருத்திப் பார்க்கவும், இச்சிறு புத்தகம் முயலுகிறது.

இந்த ஆராய்ச்சியின் நோக்கங்கள் இரண்டு. ஒன்று, நம்முடைய ஆன்ம வாழ்வு அல்லது இகத்தைக் கடந்த வாழ்வை உலக வாழ்க்கையோடு மீண்டும் தொடர்பு படுத்தல்; இதன் பயனாய் நம்முடைய இக வாழ்க்கையின் தினசரிக் காரியங்கள் நம்மிடம் பொருந்தியுள்ள தெய்வப் பண்புகளை ஒட்டி நடத்தப் பெறுதல்

வேண்டும். இரண்டாவது நோக்கம்: இன்றைய சம்பிரதாய மத மானது அன்றாட லௌகிக வாழ்க்கையிலிருந்து முழுமையும் விலகி நின்று மறுமை ஒன்றையே கருதிக் கொண்டிருக்கிறது; அனேக ருக்கு இந்த மதத்தால் பயனில்லை; இவர்களுக்கு உயிர் வாழ்வதி லும் செயலிலும் பெரும் பயன் தரவல்ல புதிய வாழ்க்கை முறை ஒன்றை வகுத்துக் காட்டுவதாகும். பிரபஞ்ச மெங்குமுள்ள பெரு நியதியோடு வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் ஒரே அணியாக வகுத்துக் காட்டுவதே இப்புத்தகத்தில் செய்யும் முயற்சி. 'அழிவற்ற வாழ்வு' என்ற இந்தப் புத்தகத்தின் பெயரில், சமய பக்தர்கள் 'வாழ்வு' என்றும் 'கடவுளுடன் கலத்தல்' என்றும் சொல்பவற்றை மனிதனுடைய தினசரி வாழ்க்கையில் தொடர்புபடுத்திப் பொருள் பண்ணியிருக்கிறேன்.

இக்கருத்துக்களின் போக்குப் புதிதாய் இருக்கலாம். ஆனால், இதில் குறிப்பிட்டுள்ள நோக்கங்களை அடைவதற்கு உரிய வழி துறைகளை மற்றவர்களும் சிந்திக்கும்படி இது செய்யுமானால், இப் புத்தகம் எழுதியதன் பயன் கைகூடிற்றென்று கருதுவேன்.

இப்புத்தகம் இரண்டு பாகமாக உள்ளது. முதல் பாகம் தனி மனித வாழ்க்கையையும், இரண்டாம் பாகம் மக்களின் கூட்டு வாழ்க்கையையும் ஆராய்வது. முதல் பாகத்தை ஜப்பல்பூர் மத்திய சிறையில் இருந்தபோது எழுதினேன். இரண்டாம் பாகம் எழுது முன் உடல்நலக் குறைவினால் சிறையிலிருந்து என்னை விடுதலை செய்துவிட்டார்கள். அஹிம்சை என்ற அடிப்படையில் நிர்மாண ஊழியருக்கான புத்தகம் அவசரமாய்த் தேவையாயிருக்கிறபடியால், இந்த அளவில் இது இப்போது வெளி வருகிறது.

மகாத்மா காந்தி கூறிய யோசனைகளுக்காகவும் எழுதிய சிறு முகவுரைக்காகவும் என் நன்றி உரியது. மாதவ சத்வலேகர் என்ற ஓவியர் இதற்குச் சில விளக்கப் படங்கள் எழுதினார். அவருக்கும் நன்றி செலுத்துகிறேன்.

வர்தா,
24-8-1945

ஜே. சி. குமரப்பா

# அழிவற்ற வாழ்வு

## நூன்முகம்

### அழிவற்றதெது? அழிவுள்ளதெது?

கடவுள் ஒருவரே அழிவற்றவர். மற்றவை யாவும் அழிபவை தான். ஆதியும் அந்தமும் அற்ற பொருள் அவர் ஒருவரே. மனித அறிவு சிற்றறிவு ஆதலினால் நித்திய மானதைப் பூரணமாய் அறிய முடியவில்லை. அத்தகைய கருத்து காலமும் இடமும் கடந்து நிற்பது. கடவுளின் நியதிகளான சத்தியமும் அன்பும் பூர்ணநிலையில் உள்ளவை. மாறுதல் இல்லாதவை, அழிவு இல்லாதவை.

ஆனால் காலம் இடம் என்ற எல்லைக்குள் நித்தியமானது என்று ஒன்றுமில்லை. எல்லாம் ஓரிடத்தில் தோன்றுகின்றன. ஒரு காலத்தில் ஒடுங்குகின்றன. தோற்றம் ஒடுக்கம் ஆகிய இரு நேரங்களை வேறு பிரிக்கிற இடைக்காலம் பலவகையாய் இருக்கிறது. சில சமயம் அதிகமாய் இருக்கிறது. அழகிய மலர் ஒன்று காலையில் மலர்கிறது. மாலையில் குவிந்து அழிந்து போகிறது. அதன் ஆயுள் சில மணி நேரம்தான். ஆமைகள் அனேக நூற்றாண்டு வாழ்கின்றன என்று சொல்கிறார்கள். ஆனால் இந்தப் பிரபஞ்சத்தின் ஆயுளைக் கோடி வருஷக் கணக்கில்தான் சொல்லமுடியும். ஆதலால் ஒரு மலரைப் பார்க்கிலும் ஆமைக்கு அதிக ஆயுள் உண்டென்றும் இவற்றைப் பார்க்க உலகம் அழியாதது என்றும் ஒப்பிட்டுச் சொல்லலாம். இந்தக கூற்றுக்கள் பரஸ்பர சம்பந்தத்தையே காட்டும். பிரகிருதியானது காலத்தாலும் இடத்தாலும் வரையறை பெற்றது. மிகப் பழங் காலத்தில் அது தோன்றியது. எதிர்காலத்தில் ஒரு சமயம் இது அழிந்து போகும். மனித வாழ்வு நூறு வருஷத்தை எட்டிப் பார்ப்பது அபூர்வம். ஆனால் பிரகிருதியின் ஆயுளை எண்ணுவதற்கு, கோடி என்ற அளவையும் காணாது. ஆகவே மனிதரையும் பிரகிருதியையும் ஒப்பிட்டு மனித வாழ்வு அழிவதென்றும் பிரகிருதி அழியாததென்றும் சொல்லுவோம். அழிவற்ற வாழ்வு என்று நாம் பேசுவதும் இந்தக் கருத்தில்தான்.

# முதற் பிரிவு - பிரகிருதி

## அத்தியாயம் 1

### பிரகிருதி

இயற்கையில் காணப்படும் சில பொருள்கள் உயிர் உள்ளன வாய்க் காணப்படவில்லை ; அவற்றுக்கு வளர்ச்சியுமில்லை. ஆதலால் காலக்கிரமத்தில் குறைந்து குறைந்து அழிகின்றன அல்லது உப யோகத்தால் தீர்ந்து போகின்றன. இதற்கு உதாரணமாக நிலக்கரி, பெட்ரோல் எண்ணெய், சுரங்க தாதுக்களான இரும்பு, செம்பு, பொன் முதலியவற்றைச் சொல்லலாம். உலகத்தில் இவற்றின் இருப்பு என்பது குறித்த ஓர் அளவு இருக்கிறது. திட்டமான அள வாகத்தான் இவை கிடைப்பதால், இவற்றை அழிவுள்ளவை என்று சொல்வது பொருந்தும். அப்படியின்றி ஆற்றில் ஓடும் தண்ணீரை யும் காட்டில் வளரும் மரத்தையும் அழிவற்றவை என்று சொல்ல லாம். ஏனெனில் அவற்றை நாம் அளவாக எடுத்து உபயோகிக்கும் பட்சத்தில், அதாவது நீரின் ஓட்டத்தையும் வளர்ந்த மரத்தின் பெருக்கத்தையும் மட்டுமே உபயேகித்துக் கொண்டால், அவற்றுக்கு அழிவில்லை.

உயிர் வர்க்கத்தில், இயற்கையின் அழியாமையின் ரகசியம், வாழ்க்கைச் சக்கரம் என்ற தத்துவத்தில் இருக்கிறது : அதாவது இயற்கையின் அங்கமாயுள்ள பல்வேறு பகுதிகள் வாழ்க்கையின் தொடர்பு அறுமல் பார்க்கும் பொருட்டு பரஸ்பரம் நன்ருய் ஒத் துழைக்கின்றன. உதாரணமாக நெல்லை எடுத்துக் கொள்வோம். ஒரு நெல்மணி கதிரிலிருந்து கீழே விழுகிறது. விழுந்த நெல் ஈரமண்ணில் புதையுண்டு மண்ணில் நாலா பக்கமும் வேர்விட்டு வேர்களின் மூல மாக மண் ஈரத்தையும் சூரியவெப்பத்தையும் பயன்படுத்தித் தனக்கு வேண்டிய உணவுச் சத்துக்களைக் கிரகித்துக்கொள்கிறது. பின் அது முளைத்துச் செடியாகிறது. அதிலிருந்து பயிரின் தாள்கள் புறப்பட்டு மண்ணிலிருந்து வேர் சாரத்தைக் கிரகிப்பதுபோல, காற்றிலும் சூரிய வெளிச்சத்திலும் வேண்டிய சாரத்தைக் கிரகித்துக்கொள்ளுகின்றன. இந்தச் சாரம் அவ்வளவும் அடுத்த தலைமுறைக்கான பயிரைப் பேணி வளர்க்க உதவுகிறது. பூத்துள்ள பயிரில் தேனும் மகரந்த மும் உண்ணவரும் தேனீ முதலிய பூச்சிகள் பூக்கள் கருவடையச் செய்கின்றன. இதன் பயனுய்க் காலக்கிரமத்தில் மீண்டும் நெல்மணி

கள் உதித்து அடுத்த தலைமுறைப் பயிருக்கு ஆதாரமாகின்றன. கதிர் முற்றியதும் விதையானது கீழே சிதறி, முந்திய பயிரின் தாள் இலை முதலியன விழுந்து மடித்து உரமாகிய மண்ணில் முளைத்து உயிர் பெற்று மீண்டும் வளர்கிறது. இவ்விதமாக மற்றொரு புதிய வாழ்க்கைச் சக்கரம் தொடங்குகிறது. இயற்கையில் வாழ்க்கை நடைபெறும் விதம் இவ்விதமே. இந்தச் சக்கரத்தில் தடை எதுவும் நேரவில்லையானால், இயற்கையின் வேலை முடிவில்லாமல் தொடர்ந்து நடைபெறுகிறது. பிரகிருதியும் அழிவற்றதாகிறது.

## அத்தியாயம் 2

## பிரகிருதியில் உழைப்பும் கூலியும்

மேற்கூறிய வாழ்க்கைச் சக்கரத்தைப் பூர்த்தி செய்வதில் சேதனப் பொருளும் அசேதனப் பொருளும் ஒத்து உழைக்கின்றன. சேதனமும் அசேதனமும் சேர்ந்து செய்யும் முயற்சியையே இயற்கையில் உழைப்பு அல்லது வேலை என்று சொல்லுகிறோம். இந்தச் சக்கரம் எந்த இடத்திலேனும் அல்லது எந்தச் சமயத்திலேனும், தெரிந்தோ தெரியாமலோ பிளவுபட்டதானால் அதன் பயனாக ஹிம்சை விளைகிறது. இவ்விதம் ஹிம்சை குறுக்கிடும்போது, வளர்ச்சி அல்லது முன்னேற்றம் தடைப்பட்டு, கடைசியில் நாசத்தில் முடிகிறது. இயற்கையானது தாட்சண்யமில்லாதது, பிழை பொறுக்காதது. ஆதலால், வாழ்க்கைச் சக்கரத்தில் நாம் வலிந்து குறுக்கிடாமலும் அதைக் குறுக்கே முறிக்காமலும் அதன் சாசுவதத் தன்மையை வைத்து வளர்த்து வரவேண்டுமானால், அதன் பொருட்டுத் தன்னலத்துக்காகவும் தற்பாதுகாப்புக்காகவும் பூரண அஹிம்சையைக் கடைப்பிடித்து, இயற்கையோடு ஒத்துழைக்கவும் அதன் ஆட்சிக்கு உட்படவும் வேண்டும்.

அறிவுள்ள உயிர்கள் கூட, இனம் அழியாமல் வாழ்ந்துவர வேண்டுமானால், மேற்குறித்த எல்லைக்குள் தங்கள் அளவில் இவை கிரமமாக இயங்கி வரவேண்டும். மண்ணில் நாக்குப்பூச்சி தோன்றுகிறது. இதனால் மண் பொல பொலப்பு அடைந்து, காற்றையும் நீரையும் கிரகித்துத் தாங்கிநிற்கும் தன்மை பெறுகிறது. நாக்குப் பூச்சி மண்ணிலுள்ள தாவரக்கழிவை உண்ணும்போது, அக்கழிவின் பல்வேறு பகுதிகளைத் தன் வயிற்றில் நன்றாய்க்கலந்து புரட்டி, நன்றாய்த் தயாரித்த உரம் மிகுந்த மண்ணாக வெளியே தள்ளுகிறது.

இதை நாக்குப்பூச்சி மண் என்று சொல்லுகிருேம். இதிலிருந்து தாவரங்கள் தங்களுக்கு வேண்டிய உணவுச் சத்தை எளிதாக இழுத்துக்கொள்கின்றன. ஒன்று கவனிக்கவேண்டும். சாணம் குப்பை முதலிய இந்திரிய எருவுக்குப் பதிலாக இரசாயன எருவை உபயோகிக்கும்போது, தற்போதைக்கு அதிக மாசூல் கிடைக்கக் கூடும். ஆனல் இச்செயற்கை உரத்தையே தொடர்ந்து நெடுநாள் உபயோகத்தால், மண்ணிலுள்ள நாக்குப்பூச்சிகள் தங்களுக்கு உண்ண உணவின்றி மடிந்துபோகின்றன. இவை மடியவே மண் சாரமிழந்து வளம் குன்றிப்போகிறது. சாணம் குப்பை முதலிய இந்திரிய எருவை மண்ணில் இடாமையால், முற்கூறிய பிரகிருதி சக்கரம் பிளவுபடுகிறது. அழியாத செல்வம் என்ற நிலை ஏற்பட வழியில்லாமல் அழிகிற செல்வமே மிஞ்சிநிற்கிறது. இங்கு மண், தாவரம், பிராணி ஆகிய மூன்றுக்குமுள்ள ஜீவன் நிறைந்த ஒத்துழைப்பைப் பார்க்கிருேம். ஒருவகையில் இது பூக்களில் தேனீயும் வண்ணுத்திப் பூச்சியும் உண்டு பண்ணும் மகரந்தச் சேர்க்கையை ஒத்தது.

இவ்விதம் செய்கிற சேவை அல்லது உழைப்புக்குப் பதிலாக உழைப்பவர் தம் உணவைப் பெறுகிருர். இயற்கையானது காற்று நிலம் நீர் என்றதன் மூவகை அம்சங்களை ஒன்ருய்ச் சேர்த்து ஒத்தியங்கும்படிச் செய்வதில், தான் மற்றவற்றினிடமிருந்து பெறுகிற நன்மைக்குப் பிரதிபலனுக அல்லது ஊதியமாக உணவு தருகிறது.

தாவர உலகில் வாழ்க்கை அசைவற்றது. மரத்திலிருந்து விழுகிற விதை நேரே மரத்தடியில்தான் விழமுடியும். எல்லா விதைகளும் மரத்தடியிலேயே விழுந்து முளைத்துவிட்டால் அங்கு மர நெருக்கம் ஏற்பட்டு ஒன்றுகூடச் செவ்வையாக வளரமுடியாது. ஆதலால் விதைகளை வேறிடத்தில் கொண்டுபோய் நெருங்காமல் தெளிப்பது அவசியமாகிறது. இதன் பொருட்டு இயற்கையானது பறவைகள் ஆடு முதலான பிராணிகளின் சேவையைப் பயன்படுத்திக் கொள்ளுகிறது. இங்கு அசையும் பொருள்களான பிராணிகள் சிறப்பான ஒரு அலுவலைச் செய்கின்றன. ஒரு பறவை மரத்தில் வந்து உட்கார்ந்து பழத்தைத் தின்கிறது. ஆனல் அதன் விதையை எத்தனையோ மைல்களுக்கு அப்பால், தான் எச்சமிடும்போது வெளிப்படுத்துகிறது. இவ்விதம் மரத்தின் வாழ்க்கையில் ஒத்துழைக்கும் வேலையை இந்தப் பறவை மரத்துக்குச் செய்யும் கடமையாகச் செய்யாமல், தன் வாழ்க்கையில் ஓர் அங்கமாகவே செய்கிறது. தன் பசியைத் தீர்க்கத்தான் அது உண்ணுகிறது. இவ்வாறு தனது பிர

தான வேலையைச் செய்யும்போதே அது வாழ்க்கைச் சக்கரத்தில் தனக்குரிய பங்கையும் நிறைவேற்றுகிறது.

இவ்விதமாக இயற்கையானது தன் அங்கங்கள் அனைத்தின் கூட்டுறவையும் பெற்றுக் கொள்ளுகிறது. ஒவ்வொன்றும் தனக்காகவே உழைக்கிறது. அப்படி உழைப்பதில் மற்ற அங்கங்கள் தத்தம் வழியில் செல்வதற்குப் பரஸ்பரம் அவை உதவுகின்றன. அசைவது அசையாததற்கும் சேதனம் அசேதனத்துக்கும் உதவுகின்றன. இவ்வாறு பிரகிருதி முழுவதும், ஒரே பொது நோக்கத்துக்காகக் கூர்வாங்கிக் கோத்தமாதிரி பின்னிக்கிடக்கிறது. எதுவும் தனக்கென வாழ்வதில்லை. இதை இயற்கையில் அமைந்த லயம் என்று சொல்லலாம். இந்த லயம் இருந்து, சக்கரம் பிளவுபட்டு ஹிம்சை ஏற்படாமலிருந்தால், அழிவற்ற வாழ்வு கைகூடுகிறது.

## அத்தியாயம் 3

# இயற்கையிலுள்ள வாழ்க்கை விதங்கள்

எல்லாவித வாழ்க்கையிலும் பல்வேறு அங்கங்களிடையே பூரணமான இந்த அஹிம்சா பூர்வமான ஒத்துழைப்பு எப்போதும் அமைவதில்லை. சில அங்கங்கள் இயற்கையிலமைந்த பல்வேறு நிலைகளிலும் கிரமமாய்ச் சென்று பஞ்சபூதங்களிடத்திருந்தும் அசேதனப் பொருள்களிடத்திருந்தும் தங்களுக்கு வேண்டிய ஆகாரத்தைக் கிரகிக்காதபடிஉடனொத்த மற்றப் பிராணிகளை அடித்துத் தின்று, வாழ்க்கைச் சக்கரத்தைக் குறுக்கே முடித்து விடுகின்றன. இங்கும் ஹிம்சை ஏற்பட்டு அதன் வழியே நாசம் தொடர்கிறது.

நம் ஆராய்ச்சியின் பொருட்டு வாழ்க்கை முறையைப் பின்வரும் ஐந்து விதங்களாகப் பிரித்துக் கொள்ளலாம்.

1. **கொலை வாழ்க்கை:** சில செடி கொடிகள் மற்றவற்றின் சாரத்தை உண்டுவாழ்கின்றன. இவற்றைப் புல்லுருவி என்று சொல்லுகிறோம். தாய்மரத்தின் வேரிலிருந்து வரும் சாரத்தை வழியிலேயே புல்லுருவி இழுத்துக்கொள்வதால், தாய் மரம் பட்டுப் போகிறது. தாவர உலகில் இவ்விதம் புல்லுருவியால் ஹிம்சையும் சாவும் விளைகின்றன. இனி பிராணி உலகத்தைப் பார்ப்போம். ஆடு பச்சைப் புல்லைத் தின்று தண்ணீர் அருந்தி ஹிம்சை இல்லாமல்

வாழ்கிறது. ஆனல் புலியோ ஆட்டை அடித்துத் தின்று அதன் ரத்தத்தை உறிஞ்சுகிறது. இவ்விதம் அது ஹிம்சையை விளைவித்து



மற்றப் பிராணிகளை வதைத்து உயிர் வாழும் பறவை

ஹிம்சையாலேயே தான் உயிர்வாழ்கிறது. புலியின் வாழ்க்கையில் கொலையே முக்கிய அம்சமாகிறது.

2. கொள்ளை வாழ்க்கை: இயற்கையின் அங்கங்களில் ஒன்று மற்றோர் அங்கத்துக்குத் தான் நன்மை எதுவும் செய்யாமல் அதைக்



பிறர் பயிரிட்ட கதிரைக் கொய்து தின்னும் பறவைகள்

கொண்டு உயிர் வாழ்கிறது என்றால் இதைக் கொள்ளை வாழ்க்கை என்று சொல்லுகிறோம். ஒரு குரங்கு மாந்தோப்பினுள் நுழைந்து

காயையும் பழங்களையும் பறித்துத் தின்கிறது. அப்போது, அது மாங்கன்று நடுவதற்கு குழிதோண்டியோ செடி நட்டோ தண்ணீர் விட்டோ எவ்விதச் சேவையையும் செய்ததில்லை. அது தன்னலத்தைப் பார்க்கிறதே தவிர, பிரதி உழைப்பு ஒன்றும் தான் தரவில்லை. முந்தியதினும் பார்க்க இது ஹிம்சை குறைந்ததாய் இருக்கலாம். ஆயினும் இதுவும் நாசத்தில்தான் முடியும். இதைக் கொள்ளை வாழ்க்கை என்று சொல்வோம். வயலில் விளைந்திருக்கும் நெற்கதிரைக் கொய்துகொண்டு போகும் பறவைகளும் இக்குரங்கு போன்றனவே.

3. முயற்சி வாழ்க்கை : இன்னும் சில பிராணிகள் தங்களுக்கு வேண்டியவற்றைத் தாங்கள் எடுத்துக் கொள்ளும்போது திட்டமான புதில் உதவியும் செய்கின்றன. உதாரணமாக தேனீக்களைச் சொல்லலாம். இவை பூக்களில் உட்கார்ந்து தேனையும் மகரந்தத்



தானே கூடுகட்டி வாழும் பறவை

தையும் சேகரித்து, அவற்றைக் கொண்டுபோய், தங்கள் உடம்பிலிருந்து மெழுகு தோற்றுவித்து, அந்த மெழுகால் அடைகட்டி, அந்த அடையில் தேனை வைத்துக்கொள்கின்றன. இவை தேன் எடுப்ப

தால் பூவில் மகரந்தச் சேர்க்கை எளிதில் ஏற்படுகிறது. தாங்கள் நன்மை அடைந்த பூவுக்கு இவை உதவிசெய்வதால் இவ்வாழ்க்கை கொலை வாழ்க்கையல்ல. மேலும், உற்பத்தி செய்யும் பொருளாகிய தேனில் இவற்றின் உழைப்பும் கலந்திருக்கிறபடியால் இவற்றின் வாழ்க்கை கொள்ளை வாழ்க்கையுமல்ல. தங்களுக்கு இயற்கையாயுள்ள சொந்த முயற்சியால் இவை வாழ்கின்றன. பறவையானது தன் குஞ்சுகளுக்காகத் தானே முயன்று கூடுகட்டிவைப்பதும் இதே முயற்சி வாழ்க்கைதான்.

4. குழுவாழ்க்கை : தனிப்படத் தனக்கென்று மாத்திரம் உழைக்காமல் தன் கூட்டத்துக்காக என்று உழைப்பது இவ்வாழ்க்கையாகும். இதற்கும் தேனீக்களை உதாரணமாய்க் காட்டலாம். தேனீயானது தனக்கென்று மாத்திரம் தேன் தேடி வாழ்வதில்லை.



தனக்காகவன்றித் தன் கூட்டத்துக்காகத் தேன் சேகரிக்கும் தேனீ

தன் குடும்பம் முழுமைக்காகவும் தேன் தேடிவைக்கிறது. தனக்கென்று வாழ்வதாகிய முயற்சி வாழ்க்கையிலும் இது சற்றே உயர்ந்தது. தற்போதைக்கு வேண்டுவதை மட்டும் கருதாமல் பிற்பட்டு வேண்டியிருப்பதையும் இந்த வாழ்க்கை கருதிப் பார்க்கிறது.

5. **தாய்மை வாழ்க்கை :** எல்லா வகை வாழ்க்கையிலும் சிறந்தது சேவை வாழ்க்கை. தாய்க்கும் சேய்க்கும் உள்ள சம்பந்தத்தில் இந்த வாழ்க்கை முறையைக் காணலாம். தாய்ப்பறவையானது காடு முழுதும் தன் குஞ்சுக்கு உணவு தேடித் திரிகிறது. பகைப்பறவைகளிடமிருந்து தன் குஞ்சைக் காக்க உயிரையும் கொடுக்கிறது. அப்பறவை



பலன் கருதாமல் குஞ்சைப் பேணும் தாய்ப் பறவை

தன் தற்போதைய நலத்துக்காகவும் வாழவில்லை, தன் எதிர்கால நலத்துக்காகவும் வாழவில்லை. பிந்திய தலைமுறைகள் நலம் பெற வேண்டும் என்ற ஆசையோடு பிரதிபலன் எதிர்பாராமலே உழைக்கிறது. தன் தாயன்பு காரணமாக, தன்னலமில்லாமல், தனக்கு நன்மை வேண்டுமென்ற ஆசையில்லாமல் அது சேவை செய்கிறது. அஹிம்சா பூர்வமான அமரவாழ்க்கை என்று இதைச் சொல்வது ஓரளவுக்குப் பொருந்தும்.

இங்கு சொல்லிய இந்த ஐந்து முறைகளும் கிரமமாக ஒன்றைவிட ஒன்று அழிவற்றதாகவும் அஹிம்சா பூர்வமாகவும் அமைந்தவை.

எளிதாய் விளங்கவல்ல இந்த ஐந்துவகை வாழ்க்கை முறைகளிலிருந்து இன்னும் சிக்கலான பலவகை வாழ்க்கை முறைகளைக் கற்பித்துக் கொள்ளலாம்.

# இரண்டாம் பிரிவு - தனி மனிதன்

## அத்தியாயம் 4

## மனிதனும் சுய இச்சையும்

இயற்கையில் அனேக வகையான அங்கங்கள் இருக்கின்றன. அவை எல்லாவற்றையும் இங்கு ஆராயப் போவதில்லை. மனிதன் ஒருவனுடைய வாழ்க்கை முறையை மட்டும் ஆராய்ந்தால் போது மானது. பிரகிருதி ஒழுங்காகத் தன் வேலையைச் செய்யும்படி விடு வதும் அதைத் தடுப்பதும் மனிதன் கையில் இருக்கிறது. ஆனால் மனிதன் எவ்வளவு தடுத்தாலும் அதை எதிர்த்துச் சமாளித்துக் கொண்டு தன் வழியே இயங்கும் பேராற்றல் இயற்கையினிடம் அமைந்துள்ளது. எனினும் அவனுடைய தலையீட்டால் சிறிதள வுக்கு இயற்கை பாதிக்கப்படுவது உண்மை. அடிக்கடி மனிதன் நன்றாக வேலை செய்யும் இயற்கையில் தலையிட்டு, அது குலுக்கிப் போடும்படி செய்திருக்கிறான். இப்பொழுது நடந்த உலக யுத்தம் ஓர் உதாரணமாகும். இன்னும் நுட்பமாக ஆராய்ந்து, பிரகிருதி யானது தற்போது என்ன நியதியை வகுத்துக்கொண் டிருக்கிறதோ அதனோடுகூட இன்னும் திருப்திகரமாக ஒத்துழைப்பதற்கான வழி துறைகளை நாம் கண்டறிய முடியும்; இதன்மூலம் அனாவசியமான ஹிம்சையைத் தவிர்த்து, மனப்பூர்வமாக அழிவற்ற செல்வம் கை கூடும் துறையில் உழைப்பதால் மேலும் இன்பம் பெருகும்படி செய்ய முடியும்; அச்செல்வம் கைகூடவில்லையே என்று கவலைப்பட வேண்டியதில்லை.

இயற்கையின் நியதிகளுக்கு மற்றெல்லாப் பிராணிகளும் ஓரளவு கண்டிப்பாக ஒத்துவருகின்றன. தங்கள் சுய இச்சைக்கு இடம் கொடுப்பதற்காக அவை விசேஷ விலக்கு வைத்துக்கொள்ள வில்லை. இயற்கையின் வழி என்ன என்ன என்று அவற்றின் உள் ளுணர்வு காட்டுகிறது. அந்த வழியே அவை வேலை செய்கின்றன. வாழ்க்கையில் அவை செல்லும் பாதையானது ரயில் பாதையை ஒத்தது. தண்டவாளங்கள் ரயில் போகும் திசையையும் பாதையை யும் நிர்ணயிக்கின்றன. இவற்றைப் போன்றதே பிராணிகளின் உள்ளுணர்வு. அபாயம் எதுவும் ஏற்படாமல் ரயில் இன்ஜின் இயங் கிக்கொண்டிருக்கும் பட்சத்தில், ரயிலை ஓட்டவேண்டி யிராமலே, இரவும் பகலும் சமவெளியிலும் காட்டிலும் மேட்டிலும் பள்ளத்தி

லும் ஓடி ரயிலானது தான் போய்ச் சேரவேண்டிய இடத்தை அடைந்துவிடும்.

கோழிக்குஞ்சானது முட்டையை உடைத்துக்கொண்டு வெளி வந்த உடனே இரை தேடி அங்குமிங்கும் ஓடித் தன் பசிக்கு வேண்டிய தானியமணிகளைப் பொறுக்கிக்கொள்கிறது. பசி தீர்ந்ததும் தாயிடம் ஓடி, தேவையான கதகதப்புக்காகத் தாயின் சிறகுகளில் ஒண்டிக் கொள்கிறது. அபாயம் வரப்போவது அதற்கு இயற்கையாகவே தெரிகிறது. உடனே எங்கேனும் சென்று பதுங்கிக்கொள்கிறது. தின்னுகிற தீனி நன்ருய் இருக்கிறதென்று ஒருநாளும் அது அளவுக்கு மிஞ்சித் தின்பதில்லை. தன் புலன்களைத் திருப்தி செய்யவேண்டி அது இன்பம் தேடி அலைவதில்லை. அப்படிப்பட்ட உயிர் வாழ்க்கை எல்லாம் உள்ளுணர்வினுல் வரையறை செய்து நடத்தப்பெறுகிறது. புத்தி பூர்வமான இச்சையினுல் நடத்தப்பெற வில்லை.

இவ்வாறு இயற்கையை ஒட்டி வாழும் பிராணிகள் ஒருபோதும் நோயுறுவதில்லை. அபூர்வமாய் எப்போதேனும் உணவு செமிக்காமலிருந்தால், தாங்களாகவே இவை சில மூலிகைகளைத் தேடித் தின்கின்றன. வாந்தி எடுத்தோ பேதியாகியோ இவற்றின் உடம்பு தானே சரியாகி விடுகிறது.

ஆனுல் மனிதன் நிலைமை வேறு. சுய இச்சை என்பதாக ஒன்று இருக்கிறது. இதுவே அவனுக்குள்ள பெருந்துன்பம். இச்சுய இச்சை வெளிப்படுவதற்கு விரிவான சந்தர்ப்பங்களும் அமைந்துள்ளன. இந்த சுயஇச்சை என்ற தன்மையைச் சரியான வழியில் உபயோகித்தால் மற்றெந்தப் பிராணியையும்விட அதிகத் திறமையாக பல்வேறு அங்கங்களிடையே செம்மையான ஒத்துழைப்பை மனப்பூர்வமாய் உண்டுபண்ண முடியும். இதற்கு மாருக, இச்சுய இச்சையைத் தவருகப் பயன்படுத்திப் பிரகிருதி வாழ்க்கையில் ஒரு கலகத்தை உண்டுபண்ணித் தன்னையே அவன் அழித்துக்கொள்ளவும் முடியும்.

முன்னமே உள்ளுணர்வை ஓர் ரயில் பாதைக்கு ஒப்பிட்டேன். தண்டவாளங்கள் வண்டிகளை யெல்லாம் சிறிதும் பிறழாமல் கிரமமான பாதையில் செலுத்துகின்றன. ஏற்பட்ட பாதையைவிட்டு எப்புறமும் அசைய இடம் கொடுப்பதில்லை. இதற்கு மாருக சுயஇச்சை என்ற பண்பானது இஷ்டம்போல் செல்ல இடம் கொடுக்கிறது. ஆனுல் எப்படிச் சென்ருலும் ஒன்றுதான் என்று சொல்ல முடியாது. செல்லுதல் என்பது ஓர் சைக்கிள் மீது இருப்பது போல. கருத்தள

வில் சொன்னால் சைக்கிள் விடுபவன் எங்குவேண்டுமானாலும் போகலாம். சைக்கிளை இயக்கும் கைப்பிடியானது அவன் வசத்தில்தான் இருக்கிறது. இருந்தாலும், அவனுடைய போக்கானது சைக்கிளாகிய கருவிக்குள்ள வரையறைகளாலும் அவனுடைய புத்தியின் போக்காலும் அளவுபட்டிருக்கிறது. அவன் ஆகாயத்தில் பறக்க முடியாது. நீரில் மிதக்க முடியாது. நிலத்தில்கூட நினைத்த இடம் போக முடியாது. ஏற்பட்ட பாதை அல்லது சாலை வழியே தான் அவன் போகவேண்டும். உழுத வயல் வழியே அவன் போக முயன்றால் முன்சக்கரம் மண்ணில் செருகி அவன் தலைகீழாக விழ நேரும். முட்புதர் உள்ள இடத்தில் அவன் போக முயன்றால் ரப்பர் டயர் பொத்துப் போகும். ஆதலால் கருத்தளவில் சொல்லுகிற இந்தச் சுதந்திரத்துக்கு எத்தனையோ தடைகள் இருக்கின்றன. புத்திசாலியாய் இருப்பவன் இந்தத் தடைகளுக்கு உட்பட்டே போவான். அவனுடைய போக்கில் ஏற்பட்டுள்ள இந்தத் தடைக்குக் கட்டுப்பாடும் அறிவும் தேவை. இவை இல்லாவிட்டால் அவனுக்கு உதவுவதற்காக ஏற்பட்ட இந்தக் கருவி பெரும் துன்பம் தருவதாக முடியும். தெரிந்த சாலைவழியே பகல் வெளிச்சத்தில் பிரயாணம் செய்வானானால் கால்நடையாக நடந்து செல்வதைவிடப் பலமடங்கு அதிக வேகத்தோடு அவன் போக முடியும்.

இதுபோல மனிதன் தன் சுய இச்சையை அதற்குரிய எல்லைக்குள் தான் உபயோகிப்பது என்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு, மனமானது புலன்களின் வழியேயும் ஆசைகளின் வழியேயும் ஓடாதபடி கட்டுப்படுத்துவானானால், உள்ளுணர்வினால் மட்டும் இயங்கும் பிராணிகளைவிடப் பல மடங்கு மேலான காரியங்களை அவன் செய்யமுடியும். தன் விதியைத் தானே தெரிந்து நிர்ணயிக்கும் ஆற்றல் வாய்ந்தவனாக அவன் இருப்பான். தனக்குள் அமைந்த சிற்றறிவையும் இறைவனுடைய தெய்வ ஒளியின் சிறு சுடரையும் கொண்டு அவற்றின் வழியே மனமார வெற்றியை நோக்கி அவன் செல்லமுடியும். அவ்வாறு சுயஇச்சையைக் கட்டுப்பாட்டுக்குள் செலுத்தாவிட்டால், இருளிலும் முட்புதரிலும் செல்லும் சைக்கிள்காரனைப்போல அவன் துன்பமடைந்து, தன் மனச்சாட்சிக்கு விரோதமாகவும் இயற்கைக்கு முரணாகவும் போனதற்குரிய தண்டனையை அனுபவிக்க நேரும். இயற்கையினிடத்தில் யார் மரியாதை காட்டுகிறார்களோ அவர்களிடம் இயற்கை விசுவாசமும் பணிவும் காட்டும். ஆனால், யார் தங்கள் சுயஇச்சையின் வழியே சென்று இயற்கையின் தேவைகளைப் புறக்கணிக்கத் துணிகிறார்களோ அவர்கள் விஷயத்தில் இயற்கையானது தருமத்தினும்

கண்டிப்பாக இருந்து, அவர்கள் இழைத்த தவற்றுக்குத் தண்டனை யாக ஹிம்சையும் நாசமுமாகிய பச்சாத்தாபம் இல்லாத பெரும் தண்டனை அளிக்கும். இதற்கு உதாரணங்களை அடுத்த அத்தியா யத்தில் பார்ப்போம்.

## அத்தியாயம் 5

## சுய இச்சையை உபயோகித்தல்

இன்றைய மனித வாழ்க்கை மிகவும் சிக்கலானது. சுய இச் சைக்கு இடம் கொடுப்பதால் ஏற்பட்டுள்ள எல்லாக் காரியங்களை யும் இச்சிறு புத்தகத்தில் நாம் பரிசீலனை செய்வதற்கில்லை. உயிர் வாழ்க்கையின் முதல் தேவைகளான பசி தாகம் முதலியவற்ருல் நேரடியாக ஏற்படுகிற நன்ருய்த் தெரிந்த சில உதாரணங்களை மட் டும் இங்கு நாம் ஆராய முயலலாம்; வாசகர் தம் கவனத்துக்கு வரு கிற மற்ற உதாரணங்களைத் தாமே ஆராய்ந்து, சுய இச்சையின் எவ் விதமான உபயோகம் சரியானது தேவை என்பதையும், சுய இச்சை யைத் தவருக உபயோகிப்பதால் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் என்ன கேடுகள் விளைகின்றன என்பதையும் தாமே கண்டறியவேண்டும்.

பசி. எல்லா உயிருக்கும் அடிப்படையான முதல் உணர்ச்சி பசிதான். பிராணியின் உடம்பு ஒரு யந்திரம் போன்றது. அதில் போதுமான சக்தி ஏற்பட்டு அது வேலை செய்வதற்கு விறகு வேண் டும். தேய்ந்துபோன பாகங்களைப் புதுப்பிக்கவும் நன்ருய் வேலை செய்யக்கூடிய நிலைமையில் இருக்கும்படி பழுது பார்க்கவும் வேண் டும். உராய்வினுல் வேகம் குறைவதைத் தவிர்க்கவேண்டி இயங்கு கிற பாகங்களுக்கெல்லாம் எண்ணெய் இடவேண்டும். இவை தேவை என்பதைப் பிராணியின் பசி உணர்ச்சி காட்டுகிறது. மோப்பம், ருசி என்ற புலன் உணர்ச்சிகளும் அதன் உடம்பை நல்ல நிலையில் வைத் திருந்து உதவவல்ல உணவு யாதென்று அதற்குக் காட்டுகின்றன.

பொதுவாக இயற்கையான வாழ்க்கை வாழ்கிற எல்லாப் பிராணிகளும் தங்கள் உள்ளுணர்வின் வழியே செல்கின்றன. உயிர் வாழவேண்டியே அவை தீனி தின்கின்றன; அதனுல் ஆரோக்கிய மாய் இருக்கின்றன. மனிதனும் இவ்விதம் செய்யலாம். ஆனுல் துர திர்ஷ்டவசமாகத் தன் பசியைத் தணிக்கவென்று மாத்திரம் அவன் உணவு கொள்வதில்லை; தன் சுய இச்சையை உபயோகித்து நாவுக்கு அடிமையாகி அளவுக்கு மிஞ்சி வெந்த உணவையும் அதிக வாசனை ஊட்டப்பெற்ற பண்டங்களையும் உண்கிருன். ருசியை மட்டும்

தேடுவதால் அவசியத்தைவிட அதிகமாகவே அவன் பல சமயம் உண்கிருன். உண்பதற்கென்றே உயிர் வாழ்கிருன். இப்படி நாவைத் திருப்திசெய்யவென்றே தன் சுய இச்சையைத் தவருக உபயோகிப்பது தான் இன்றைய மனிதனுக்கு வரும் அனேக விதமான நோய்களுக்கு முக்கிய காரணம். மிதமிஞ்சிய உணவு உடம்பின் ஜீரணக் கருவிகளை அதிகம் வாட்டிக் கேடுகளை விளைவிக்கிறது. மற்றும் சத்துள்ள உணவுகூட கிரமமான அளவைவிட அதிகமானல் கெடுதலாகி உடம்புக்கு விஷமாகிறது: நோய்களுக்கு இடமாகி அகால மரணத்திலும் கொண்டுபோய் விடுகிறது.

தாகம். உணவு ஜீரணமாகும்போது அது திரவ ரூபத்தில் உடம்பில் சேர்கிறது. உணவிலுள்ள சத்துப் பொருள்களை ரத்தக் குழாய்கள் தேவையான இடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றன. அன்றியும், இவை உடம்பில் சவ்வுக்கள் முதலியவற்றில் வெளிப்படுகிற கழிவுப் பொருளைச் சுவாசப் பைகளுக்குக் கொண்டு போகின்றன. நாம் மூச்சை உள்ளிழுக்கும்போது உட்புகுகிற காற்றிலுள்ள பிராணவாயு அக்கழிவுப் பொருளை எல்லாம் எரித்து விடுகிறது. இந்த வேலை நடைபெறும்போது இரத்தத்திலுள்ள நீர்ப் பகுதியில் ஒருபாகம் நாம் மூச்சுவிடுகிறபோது காணப்படுகிற ஆவியாக உடம்பிலிருந்து வெளிப்படுகிறது. அன்றியும் அந்த நீரில் மற்ருெரு பாகம் தோலிலிருந்து வேர்வையாகவும் வெளி வருகிறது. வேர்வை வருவதனுல் தான் உடம்பிலுள்ள உஷ்ணம் மாறுபடாமல் ஒரே அளவில் இருக்கிறது. இவ்விதம் இரத்தம் உலர்ந்துபோவதை நாம் தாகம் எடுப்பதனுல் கண்டுகொள்ளலாம். இந்தத் தாகத்தைத் தணிப்பதற்குச் சுத்தமான நல்ல தண்ணீரைத் தாராளமாக உட்கொள்வது நம் வாழ்க்கைக்கு அவசியமாயிருக்கிறது. இந்தத் தண்ணீர் உணவிலுள்ள சத்தை உடம்பின் பல பாகங்களுக்கும் கொண்டு போய்ச் சேர்க்க உதவுவதோடு, ரத்தத்தைச் சுத்தி செய்யும் கருவியாகவும் உதவுகிறது. அதிலுள்ள அசுத்தங்களை மூத்திரத்தின் மூலம் வெளிப்படுத்தி வேர்வை மூலம் உடம்புக்கு ஒருவகைக் காற்ருேட்டம் தரவும் செய்கிறது.

ஆனுல் மனிதன் தன் சுய இச்சையைத் தவருக உபயோகிப்பதால் தண்ணீர் செய்யவேண்டிய இந்த வேலையைக் கெடுத்துத் தாக சாந்திக்காகப் போதை தரக்கூடிய மதுபானங்களை அருந்துகிருன். இவை உடம்பில் பலவகை நச்சுப்பொருள்களைக் கொண்டு போய்ச் சேர்க்கின்றன. இந்த நச்சுப் பொருள்கள் நம் நரம்பமைப்பை உணர்விழக்கச் செய்து முடிவில் தேகாரோக்கியத்துக்குப் பெரும் கேடு ஆகின்றன. அன்றியும் இந்த மதுபானப் பழக்கம் மனிதனுக்கு அவ

மானத்தைத் தந்து குடும்ப வாழ்வையும் குலைக்கிறது. இன்றைய சமூகத்தில் காணும் அனேக கேடுகளுக்கு மூலகாரணம் மதுபானப் பழக்கம்தான்.

வாசனை. அதுபோலவே வாசனை உணர்ச்சியும் சாதாரண பிராணிகளுக்குத் தங்கள் இரையைத் தேட வழிகாட்டுவது போக, மனிதனிடத்தில் புகையிலை போடுவது பொடி போடுவது முதலான தப்பான பழக்கங்களுக்கு இடமாகிவிட்டது. இப்பழக்கங்கள் தற் போதைக்கு இதமாகவும் உற்சாகமாகவும் இருந்தபோதிலும் பிற் பட்டு இதயத்துக்கும் மூளைக்கும் பெருங்கேடு விளைவிக்கின்றன.

காம உணர்ச்சி. பிராணிகளிடத்தில் தங்கள் இனம் பெருக வேண்டும் என்ற உணர்ச்சி இருந்து அது காரணமாக இயற்கை யான ஆண் பெண் சேர்க்கை ஏற்படுகிறது. பிராணி இனத்தில் எல்லா விதமான முயற்சிக்கும் இதுவே பிரதான தூண்டுதல் என்று நாம் கருதலாம். ஆனால் பெரும்பான்மையான பறவைகளும் சில மிருகங்களும்கூட இந்தக் காம உணர்ச்சி வசப்பட்டு அதை ஒட்டியே தங்கள் அன்பு வாழ்க்கையை அமைத்துக்கொண்டு ஓர் ஆணும் ஓர் பெண்ணுமாகக் கூடி வாழ்ந்து கூட்டாகவே குஞ்சுகளை யும் குட்டிகளையும் வளர்க்கின்றன. இவற்றிடையே நாம் கவனிக்க வேண்டுவது என்னவென்றால், ஆணும் பெண்ணும் இயற்கையில் இனவிருத்தியின் பொருட்டுத்தான், அதுவும் சில பருவங்களில் மாத்திரமே, ஒன்றையொன்று சேர்கின்றன என்பதாம்.

ஆனால் மனிதனோ தன் சுய இச்சையை உபயோகித்துக் காட்டு மிருகங்களினும் கேடான கீழ்நிலைக்கு வந்துவிட்டான். இனவிருத்தி என்ற எண்ணம் அல்லது ஆசை சிறிதும் இல்லாமலே உடல் இன் பம் கருதியே காமவாழ்வு வாழ்கிறான். ஆண் பெண் சேர்க்கையின் ஒரே நோக்கம் குழந்தைப் பேறாயிருப்பது போக, அனேகருக்குக் குழந்தை என்றாலே வேண்டாதது என்றாகியிருக்கிறது. ஆனால் இயற்கையின் நியதிகளை விட்டு மனிதன் இவ்விதம் விலகியதற்கு இயற்கை சரியான தண்டனையும் கொடுக்கிறது. வெட்டை மேக வியாதி முதலான கொடுநோய்கள் சம்பவிக்கின்றன. துன்மார்க்கத் தில் சென்றவர்களை மட்டுமல்லாமல் அவர்கள் சந்ததிகளையும் கூட இயற்கை தண்டிக்கிறது.

மனோதர்மம் : புலன்களைக் கொண்டு அறிய முடியாத இடங் களுக்கும் சிந்தனையைச் செலுத்தும் திறன் பிராணிகளுக்கு இல்லை ; மனிதனுக்கு உண்டு. தன் மனோதர்மத்தை உபயோகித்துக் கலையைப் படைக்க மனிதனால்தான் முடியும். ஆனால் இயற்கையாக இந்தத் திறமையை அவன் உபயோகிக்காமல் கிளர்ச்சியூட்டும் பொருள்

களான கஞ்சா அபின் முதலியவற்றை உபயோகித்துத் தன்னிடத்தில் கொஞ்ச நேரம் செயற்கையான கிளர்ச்சியை உண்டுபண்ணிக் கொள்கிருன். மதுபானம் போலவே இந்தப் போதைச் சரக்கும் மனிதனை எந்த வேலைக்கும் தகுதியற்றவனுக்கி முடிவில் அவனையும் அவனைச் சார்ந்தவர்களையும் நாசத்தில் கொண்டு போய் விடுகிறது.

ஆக்கத் திறன்: மனிதன் தன் மூளையின் சக்தியை உபயோகித்துத் தன் நோக்கங்களை நிறைவேற்றுவதற்குப் பிரகிருதி சக்திகளைப் பயன்படுத்தும் போது தன்னைப் படைத்த கடவுளை ஒத்தவனுகிருன். ஆனல் இப்படிச் செய்வதால் அவனுக்கு கேடொன்றும் இல்லாமல் நன்மையே விளைவதானல் பிரகிருதியிலிருந்து பெரும்பயன் பெறுவதற்கு அவன் இயற்கையோடு இயைந்தே செல்லவேண்டியவன். முழுமையும் நம்மிஷ்டப்படியே இயற்கையின் ஒத்துழைப்பைப் பெற முடியாது. இதற்கென்று நாம் முயன்ருல் ஹிம்சையும் நாசமுமே பலனுகும்.

சூரியனிடத்திலிருந்து தானுக வரும் வெப்பமானது கடல்நீரை ஆவியாக்குகிறது. உப்பை மாத்திரம் விட்டு விட்டுச் சுத்தமான நீரானது சூரியன் கொடுக்கும் சக்தியால் மேலெழும்பிச் சென்று அங்கு மேகங்களாகத் திரண்டு குளிர்ச்சியைக் கண்ட இடத்தில் மழையாகப் பொழிகிறது. மலைமேல் பொழிந்த மழைநீர் அதிக உயரத்தில் திரள்வதால் இடத்தைப் பொறுத்த சக்தி அதனிடம் அதிகமாய் இருக்கிறது. ஏனெனில் பூமியின் ஆகர்ஷண சக்தியால் அது கீழ் நோக்கி ஓடிவந்து சமவெளியில் புகுந்து முடிவில் பள்ளமாயிருக்கிற கடலை நோக்கி ஓடவேண்டும். இவ்வாறு ஓடிக்கொண்டிருக்கிற ஆற்றை மனிதன் தன் சுய இச்சையின் மூலம் மூளையை உபயோகித்துத் தடுத்து அதனிடமுள்ள சக்தியைத் தனக்கு ஏவல் கொள்ள வழி செய்யலாம். மலையைக் கடந்து வரும்போது ஆற்றின் குறுக்கே அணைகட்டி நீரைத் தேக்கி அதன் சக்தியைக் கொண்டு மாவரைக்கும் மில்லுகளை இயக்கலாம். நம்முடைய நாட்டில் பலவிடங்களில் இப்படி நடக்கிறது. அல்லது அணையில் பிரம்மாண்டமான யந்திரங்களை நிறுத்தி நீரோட்டத்தின் மூலம் மின்சாரத்தைப் பிறப்பித்து அதை அவ்விடத்திலிருந்து நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் கொண்டு போய் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் விளக்குப் போடவும் தண்ணீர் இறைக்கவும் யந்திரங்களை ஓட்டவும் பயன்படுத்தலாம். இவ்வளவு செய்தாலும் அணையிலிருந்து ஓடுகிற தண்ணீரைக் கால்வாய்கள் மூலம் வயல்களுக்குப் பாய்ச்சலாம். கால்வாய்களில் படகு ஓட்டலாம். இவ்விதமாக இயற்கையின் போக்கில் எவ்வித ஹிம்சையும் ஏற்படாமல் ஆற்று வெள்ளத்தைத்

தடுத்து ஆயிரக் கணக்கான மக்களுக்கு நன்மையும் பொருளும் பெருகும்படி செய்யலாம்.

இங்கு மனிதன் தன் சுய இச்சையை உபயோகித்துத் தனக்குக் கிடைத்த சந்தர்ப்பங்களைப் பண்படுத்தி இயற்கை தன் வழியிலே தன் காரியங்களைச் செய்யும்படி விட்டு அதில் தனக்கு இயற்கையின் கூட்டுறவையும் பெறுகிருன். இது பாராட்டத் தக்கமுறை. இங்கு இயற்கையின் அனுக்கிரகத்தால் அவனுக்கு வளம் நிறைந்த பூரண மான வாழ்க்கை ஏற்படுகிறது.

இதற்கு மாருக மனிதன் தன் சுயஇச்சையை இயற்கையின் போக்கைத் தடைசெய்ய உபயோகிப்பது முண்டு. இயற்கையின் நியதிகளை சிறிதும் பொருட் படுத்தாமலே அவன் தன் போகத்துக்காக வேண்டி இயற்கையின் போக்கிலிருந்து விலகிப் போகிருன். உதாரணமாக அரிசியையும் கோதுமையையும் மில்லில் தீட்டுவதைச் சொல்லலாம். தன்னுடைய தப்பான அழகுணர்ச்சியைத் திருப்தி செய்யும் பொருட்டு அவன் அரிசியை முத்துப்போல் வெள்ளையாகும்படி தீட்டுகிருன். இப்படிச் செய்வதால் இயற்கையிலுள்ள அழகான லயத்தை அவன் குலைத்து விடுகிருன். இயற்கையானது ஒவ்வொரு தானிய மணியினுள்ளும் உடம்பின் போஷணைக்காக ஒரு முளையையும் சீரணத்துக்கு உதவியாக ஒரு தவிட்டுப் படலத்தையும் கவனமாக அமைத்து வைத்திருக்கிறது. மில்லில் தீட்டும்போது இந்த இரண்டும் பிரிந்து போகின்றன. தீட்டிய அரிசியைச் சாப்பிடுவது இயற்கையின் போக்குக்கு மாறு. சாப்பிடுபவர்களைப் பெரி பெரி நோய், பலவிதத் துன்பம் மரணம் முதலிய தண்டனைக்கு இயற்கை உள்ளாக்குகிறது.

இதுபோல, இயற்கையானது நமக்கு நல்ல பழங்களான பேரீச்சை, கொடிமுந்திரி முதலியவற்றை மிகுந்த கருணையோடு அளிக்கிறது. இவற்றைப் பழங்களாகவே உண்பதற்குப் பதிலாக, மனிதன் இவற்றிலிருந்து பலவகையான கள்ளும் சாராயமும் காய்ச்சித் தனக்குச் செயற்கையான உணர்ச்சி பெற எண்ணுகிருன். முன்னமே குறிப்பிட்டது போல, இவ்விதம் தன்னிடம் வேடிக்கை செய்பவர்களை இயற்கையானது, கடுமையாகப் பழிவாங்குகிறது. இனம் அழியாமல் காக்கும் பொருட்டு இன உற்பத்தி என்ற சக்தியை இயற்கை மனிதனிடம் கொடுத்திருக்கிறது. ஆனால் மனிதன் இயற்கையின் நோக்கத்தை நிறைவேற்ருமல் வெறும் சிற்றின்பம் தேடி உழன்று, தன் ஆக்கத்திறனை உபயோகித்துக் கர்ப்பத்தடைக் கருவிகளைச் செய்து கொள்ளுகிருன். இதன் பொருட்டு இரக்கம் இல்லாமல் அவனை இயற்கை பழிவாங்குகிறது. கருத்தடை முறைகளை

உபயோகித்து எல்லையின்றிச் சிற்றின்பத்தில் மூழ்கியவர்கள் முடிவில் வீரியம் இழந்து புத்திக் கோளாறு நரம்புக்கோளாறு முதலிய நோய்களுக்கும் இரையாகிறார்கள்.

இவ்விதம் இயற்கையின் போக்குக்கு முரணான உதாரணங்களை இனி பெருக்குவது அவசியமில்லை. தற்கால நாகரிக வாழ்க்கையில் இதற்கு ஏராள உதாரணங்கள் உள்ளன. மனிதனிடம் அபார திறமையும் முயற்சியும் இருப்பதில் சந்தேகமில்லை. இவற்றைக் கொண்டு அவன் உடலின்பத்தையும் சிறிது நேரத்தில் அழிகிற பிற இன்பங்களையும் தேடித் தலைகால் தெரியாமல் ஓடி முடிவில் தன் அழிவையே விளைவித்துக் கொள்ளுகிறான். சுய இச்சையை இவ்விதம் தப்பாகப் பயன்படுத்தி அழிவைத் தேடிக்கொள்வதெல்லாம் அழிகிற போகம் அல்லது நிலையற்ற வாழ்க்கை என்று சொல்லலாம். இது இயற்கையின் நித்தியமான போக்குக்கு மாறானது. சாசுவதமான அமைப்புக்கு இது ஹிம்சையை விளைவிக்கிறது.

மனிதனிடம் அளவின்றிக் கிடைக்கிற சிறந்த திறன் என்னவென்றால், அன்பும் அந்த அன்பைத் தன் சகோதர மக்களுக்குத் தன்னலமின்றிச் செய்யும் சேவை மூலமாக வெளிப்படுத்தும் தன்மையும் ஆகும். இயற்கையில் காணும் தாய்அன்பில் இவ்வித அன்பின் ஒரு சாயலைக் காண்கிறோம். சகோதரமக்களுக்கு அவன் சேவை செய்வதால் அவன் வாழ்க்கையில் அமைந்துள்ள உன்னதமான பண்பு தொழிற்படுகிறது. தெய்வ ஒளி மண்ணில் இறங்குகிறது என்றுகூடச் சொல்லலாம். யாருக்கு உதவியும் சேவையும் வேண்டுமோ அவர்களுக்குத் தன்னிடமுள்ள அதிக சக்தியை அவன் அர்ப்பணம் செய்கிறான்.

ஆனால், சுய இச்சையைத் தவறாக உபயோகிப்பதால், இந்த அரிய திறன்கூட, அன்புவழி ஆகிய சாசுவதமான அருள் வழியை விட்டு நீங்கி, சுயநலம் பேராசை என்ற வழியில் செல்லுகிறது; சென்று உலகப் பொருள்களைச் சம்பாதித்துச் சேர்த்துக் கொள்ளுதல் என்றாகிவிடுகிறது. மனிதனிடமுள்ள அதிகப்படியான சக்தியானது, அவனுடைய சொந்த சௌகரியங்களின் பொருட்டு, சொந்தச் சொத்தாகச் சேமிக்கப்பெறுகிறது. இந்தச் சொத்தை உடையவன் தானே சுகபோகம் அனுபவிக்கப் புகுந்தால், அவனுக்கு இது தீங்கு விளைவிக்கிறது; தன் சந்ததிகளுக்கு அவன் இதை விட்டுச் சென்றால், பிள்ளைகள் சொத்துக்காகச் சண்டைபோட்டுக் கொள்கிறார்கள்; பல சமயம் அவர்கள் குடும்பமே நாசமடைய அச்சொத்தே காரணமாயிருக்கிறது.

## அத்தியாயம் 6

### மக்கள் வளர்ச்சியின் பலநிலைகள் - தனிமனிதன்

தாவரங்கள் பிராணிகள் ஆகிய உயிர்வர்க்கங்களிடையே என்னென்ன விதமான வாழ்க்கை முறைகள் உள்ளன என்பதை முன்னமே விரிவாகப் பார்த்திருக்கிறோம். இந்த அத்தியாயத்தில் அம்முறைகளையும் அவற்றுக்கான சோதனைகளையும் மனிதன் வாழ்க்கையில் பொருத்தி, அவனுடைய நிலை என்ன வென்பதைப் பார்ப்போம்.

மற்றெல்லாப் பிராணிகளும் தங்கள் உள்ளுணர்வின் வழிச் செல்வதால், அவைகளுடைய வாழ்க்கை ஒரு திட்டமான முறையில் அமைந்து விட்டது. ஆதலால் அவை தாங்களாக முயன்று ஒரு முறையிலிருந்து மற்றொரு முறைக்குத் தங்கள் வாழ்க்கையை மாற்றிக் கொள்ள முடியாது. பிறப்புமுதல் இறப்பு வரையில் அவை வாழும் விதமானது குறித்த ஓர் அமைப்பில் அடங்கிவிட்டது. கொலை வாழ்க்கையுடைய ஒரு பிராணி தன் வாழ்வு முழுமையும் கொலை வாழ்க்கையிலேதான் இருக்கவேண்டும். இதற்குப் பரிகாரமில்லை. புலி தன் மேலுள்ள வரிகளைப் போக்க முடியாதது போல, தன் குணத்தையும் மாற்றிக்கொள்ள முடியாது. மற்றப் பிராணிகளைக் கொன்று தின்றாலொழிய அது மடியவேண்டியதுதான். தான் வாழ்கிற குறித்த வாழ்க்கை முறைக்குப் புலி பொறுப்பாளி யில்லை. இந்த வாழ்க்கை முறையை விட்டு, முயற்சி வாழ்க்கைக்கோ குழுவாழ்க்கைக்கோ புலி முன்னேறிச் செல்ல முடியாது.

ஆனால், மனிதன், முன்னமே நாம் குறிப்பிட்டது போல, சுய இச்சையுடையவன். ஆதலால் அவன் தனக்குக் கிடைத்துள்ள புத்தியைக் கொண்டு தன் சூழ்நிலையையும் சந்தர்ப்பங்களையும் மாற்றிக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவன். இந்த அம்சம்தான் மனிதனுக்கும் மற்றெல்லா உயிர் வர்க்கங்களுக்கும் உள்ள வித்தியாசம்.

வழிப்பறி செய்கிற கொள்ளைக்காரன் கொலைவாழ்க்கை முறையைச் சேர்ந்தவன். ஆனால் அவன் தான் வாழும் விதத்தைச் சற்று மாற்றிக் கொலை வாழ்க்கை முறையையே வேறுவிதத்தில் கடைப்பிடிக்கக்கூடும். தன் நிலத்தில் தன் அறிவைச் செலுத்தாமலும் உழைப்பைப் பயன் படுத்தாமலும் வெகுதூரத்தில் போய் இருந்து கொண்டு குத்தகையை மாத்திரம் வசூலித்து வரலாம். இந்த முறையில் ஹிம்சை சற்றுக் குறைகிறது. இதை, அடுத்ததாகிய கொள்ளை

வாழ்க்கைமுறை என்று சொல்லலாம். இப்படி யல்லாமல் அவன் தானாக முயற்சி செய்து உழவனாகவோ தொழில் வினைஞனாகவோ ஆகி, நெற்றிவேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு நேர்மையான வாழ்க்கை நடத்த முடிவு செய்யலாம். அந்த நிலையில் அவன் கொள்ளை வாழ்க்கையிலும் உயர்ந்து முயற்சி வாழ்க்கை உடையவனாகிறான்.

இன்னும் மேலாக, பாகமாகாத ஒரு ஹிந்துக் குடும்பத்தில் பொறுப்புள்ள அங்கத்தினனாக அவன் இருந்து, குடும்பத்துக்குத் தானும் உழைத்து, வரும் வருவாயைக் குடும்பத்தார் அனைவரோடும் அவன் கலந்து அனுபவிக்கலாம். இந்த நிலையில் அவன் நான்காவது படியாகிய குழுவாழ்க்கையை அடைகிறான்.

இன்னும் சகோதர மக்களுக்கு அளவற்ற அன்பு பூண்டு தான் சிக்கனமான எளிய வாழ்க்கை நடத்தி ஓர் உயர்ந்த லக்ஷயத்துக்காகத் தன் முயற்சிகள் அனைத்தையும் செலவிட்டுச் சிறந்த தேச ஊழியனாக அவன் ஆகலாம். அப்போது எல்லா வாழ்க்கையிலும் மேலான வாழ்க்கையாகிற தாய்மை வாழ்க்கையை அவன் அடைகிறான்.

இத்தனை வித வாழ்க்கைகளும் மனிதனுக்குச் சாத்தியமாகக் கூடியவையே. ஆனால் அவனுக்குத் தன்னடக்கமும் கட்டுப்பாடும் இருக்கவேண்டும் ; படைப்பின் நியதிகளுக்குத் தானாக அவன் உட்படவேண்டும். எல்லாவற்றினும் சிறந்ததெதுவோ அதை அடையும் வழியில் தன் இச்சா சக்தியை அவன் செலுத்தவேண்டும்.

முன்னே கூறிய ஐந்துவித வாழ்க்கை முறைகளையும் மனித வாழ்க்கையில் பொருத்தி அவற்றின் முக்கியமான தன்மைகளை மட்டும் இங்கே சுருக்கி உரைக்கலாம்.

1. **கொலை வாழ்க்கை :** முக்கிய உதாரணம் ஒரு குழந்தை போட்டிருக்கும் நகைகளை அபகரிக்க வேண்டிக் குழந்தையைக் கொல்லுகிற திருடன். இவ்வாழ்க்கையில் தன்மைகள் பின்வருவன :

க. பேராசையால் விளைந்த சுயநலம்.

உ. எண்ணம், தான் செய்யும் செயல்கள் பிறருக்கு என்ன துன்பம் செய்யும் என்பதைச் சிறிதும் கருதாமல் தான் மட்டும் நன்மை அடைய முயலுதல்.

ந. நன்மைக்கு ஆதாரமாயுள்ளதை அழித்தல், அல்லது அழிக்காவிட்டாலும் கெடுத்தல்.

ச. தன் சொந்த உரிமைகளையே பூரணமாக வற்புறுத்தல்.

ரு. தனக்குக் கடமைகள் உண்டு என்பதையே அங்கீகரியாதிருத்தல்.

சா. பரோபகார எண்ணம் சிறிதும் இல்லாமை.

எ. பயன் ஹிம்சை.



மணியைப் பறிக்க வேண்டிக் குழந்தையைக் கொல்லும் கொள்ளைக்காரன்

இதன் முக்கிய சோதனையாவது, தனக்கு நன்மை விளைவிக்கும் பொருளையே அழித்து விடுதல்.

2. கொள்ளை வாழ்க்கை : முக்கிய உதாரணம், ஒருவன் சட்டைப் பையில் உள்ள பொருளை அவனுக்குத் தெரியாமலே திருடிக்கொள்ளும் திருடன்.

தன்மைகள் பின் வருவன :

க. ஆசை காரணமாக எழுந்த சுயநலம்.

உ. தன் நன்மை ஒன்றையே எண்ணுதல்; முடியுமானால் யாரிடமிருந்து பொருளைக் கவர்கிறானோ அவருக்குத் தீமை விளைவிக்காமலே தன் நோக்கத்தை நிறைவேற்ற முயலுதல்.

ங. தன் உரிமைகளையே பெரிதாய்க் கருதுதல்.

ச. தன் கடமைகளைச் சிறிதும் உணராதிருத்தல்.

௫. பரோபகார எண்ணம் சிறிதும் இல்லாமை.

௬. பயன் ஹிம்சை.



ஜோபடித் திருடன் தொழில் நடத்துகிறான்

இதன் முக்கிய சோதனையாவது தான் எதுவும் செய்யாமல் லாபத்தை மாத்திரம் அடைய எண்ணுதல்.

3. முயற்சி வாழ்க்கை : முக்கிய உதாரணம் - ஒரு குடியானவன். இவன் நிலத்தை உழுது எருவிட்டு நீர் பாய்ச்சித் தேர்ந்த விதை விதைத்துப் பயிரைப் பாதுகாத்துப் பின் கதிர்களைக் கொய்து பலனைத் தான் அனுபவிக்கிறான்.

தன்மைகள் பின்வருவன :

௧. சுயநலமும் ஆசையும் இருந்தாலும் அவற்றுக்காக அறிவோடு வேலை செய்தல்.

௨. அவனுடைய சுயமரியாதை உணர்ச்சியானது, தன் உடல் உழைப்பையும் கவனத்தையும் முயற்சியையும் கொடுத்து இவற்றால் விளைகிற பயனை மாத்திரம் அனுபவிக்கச் செய்தல்,

ங. துணிவு-அபாயமான காரியங்களை மேற்கொள்ளச் சித்தமாயிருத்தல்.

ச. உடனுழைப்பவர்களுக்கும் முடியுமானால் மற்றவர்களுக்கும் நன்மை செய்ய விரும்புதல்.

ரு. எல்லோருக்கும் சமமான உரிமைகள் உண்டு என்ற நினைவு.



உழவர் கூட்டாகத் தங்கள் வயல்களை உழுகிறார்கள்

சு. பிறருக்குத் தான் செய்யவேண்டிய கடமைகள் உண்டு என்ற நினைவு பெருகுதல்.

எ. நியாயம் நேர்மை என்ற உணர்ச்சிகளை அடிப்படையாக வைத்தல்.

அ. அபூர்வமாய்ச் சில சமயம் ஹிம்சை நேர்ந்தாலும் நேரலாம்.

இதன் முக்கிய சோதனையாவது தான் பெறும் லாபமும் தான் செய்கிற சேவையும் ஒன்றையொன்று சார்ந்திருத்தல், துணிவோடு ஒன்றைச் செய்யச் சித்தமாயிருத்தல்.

4. குழு வாழ்க்கை : இதன் முக்கிய உதாரணம் - பிரிவினையாகாத குடும்பத்தின் அங்கத்தினர் ஒருவர் பொதுக் குடும்பத்தின் நன்மைக்காக உழைத்தல். கிராமப் பஞ்சாயத்து அல்லது கூட்டுறவுச் சங்கம் தன் அங்கத்தினரின் நன்மைக்காக வேலை செய்தல்.

இதன் தன்மைகள் பின்வருவன :

க. நோக்கம் சுயநலமல்ல, குறித்த தொகுதியின் பொதுநலம்.

உ. தொகுதியின் இச்சைக்குக் கட்டுப்படுதல். இதனால் தன்னல மறுப்பும் தன் சௌகரியங்களைத் தியாகம் செய்தலும் ஏற்படும்.

ந. தொகுதிக்குச் செய்யவேண்டிய கடமைகளை வற்புறுத்தல்.

ச. தான் பெறவேண்டிய நன்மைகளைப் பெறக் கருதாமல் தான்செய்ய வேண்டிய கடமையை முக்கியமாய்க் கருதல்.

ரு. அடிப்படை பரோபகார சிந்தனை.

சு. குறித்த தொகுதிக்குப் புறம்பே உள்ளவர்களுக்கு ஒரு வேளை ஹிம்சை விளையலாம்.

இதன் முக்கிய சோதனையாவது, தனிப்பட்டோர் நன்மையை விட்டுத் தொகுதியின் நன்மையைக் கருதல்.

**5. தாய்மை வாழ்க்கை :** இதன் முக்கிய உதாரணம் கஷ்டநிவாரண வேலை செய்யும் ஊழியன், பிரதிபலனை எதிர்பாராமல் வழிப்போக்கருக்குத் தண்ணீர்ப்பந்தல் வைத்து நடத்தும் ஊழியன்.



தன்மைகள் பின்வருவன :

க. செய்கிற வேலை தன்னுடைய நலத்துக்குப் பாதகமென்று தோற்றிய போதிலும் பிறருடைய நன்மையையே நோக்கமாய்க் கொள்ளுதல்.

உ. தன் உரிமைகளை மறந்து எப்போதும் தன் கடமைகளையே செய்ய முற்படுதல்.

ரூ. அன்பை ஆதாரமாய்க் கொண்டு பிரதிபலன் இல்லாமல் சேவை செய்ய ஆசைப்படுதல்.

சா. இது பூரணமான அஹிம்சையையும் சமாதானத்தையும் தந்து அழியாமையை விளைவிக்கிறது.

இதன் முக்கிய சோதனையாவது, தான் பெறப்போகும் நன்மையைச் சிறிதும் கருதாமலே உழைத்தல்.

எல்லாச் சமூகத்திலும் மக்களிடையிலும் நாடுகளிலும் பலவிதமான இந்த வாழ்க்கை முறைகளைச் சேர்ந்த மனிதர்களை நாம் பார்க்க முடியும். நம்முடைய நாட்டில் இந்த முறைகளை அடிப்படையாக வைத்தே பண்டைய வருணாசிரம தர்மம் ஏற்பட்டது. சூத்திரர்கள் எனப்படுவோர், தங்கள் உடலுக்குத் தேவையான சௌகரியங்களெல்லாம் கிடைத்து நிதானமான வாழ்க்கை யுண்டு என்ற உறுதி கொடுத்தால் விருப்பத்தோடு ஊழியம் செய்வார்கள்; இவர்கள் முதல் இருவாழ்க்கை முறைகளான கொலை முறைக்கும் கொள்ளை முறைக்கும் உரியவர்கள். துணிச்சலுடைய வைசியர்கள் முயற்சி வாழ்க்கையுடையவர்கள். நாட்டுப் பற்று நிறைந்த க்ஷத்திரியர்கள் நாட்டின் நன்மை ஒன்றையே ஓயாது சிந்திப்பவர்கள் ; இவர்கள் நான்காவது முறையாகிய குழுவாழ்க்கை உடையவர்கள். தங்களுக்கெனச் சொத்து எதுவும் வைத்துக்கொள்ளாமல், சமூகத்துக்குத் தன்னலமற்ற சேவை செய்து, தாங்கள் லாபமடையாமலே உயர்ந்த லக்ஷ்யத்தை மக்களுக்குச் சதா எடுத்துக்காட்டி வந்த பிராமணர்கள் உயர்ந்த முறையாகிய சேவை அல்லது தாய்மை வாழ்க்கை உடையவர்கள்.

ஆனால் இன்றைய சாதி முறையானது பூர்விகமான லக்ஷ்யத்திலிருந்து மிகவும் இழிந்த நிலைக்கு வந்துவிட்டது. அதனால் பழைய சாதிகளுக்குரிய தனிக் குணங்களை அதே பெயரோடு வழங்குகிற இன்றைய சாதிகளில் காணமுடியாது. இன்று பிராமணர் என்று சொல்லிக் கொள்பவர் ஹைகோர்ட் ஜட்ஜாகவோ, ஐ. சி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த ஜில்லா கலெக்டராகவோ இருக்கலாம். ராஜபோகம் போன்ற சம்பளத்துக்காக அவர் உழைக்கிறார். எவ்வளவு தான் மனச்சாட்சியோடும் திறமையோடும் அவர் உழைத்தாலும், வருமானம் போய்விடுமோ என்ற அச்சம் எதுவுமில்லாமல் நிலையான உத்தியோகம் பெற்றுத் திட்டமான சம்பளத்தோடு வேலை செய்வதால், அவர் பழைய வாழ்க்கை முறைப்படிக்கான சூத்திரரே ஆகிறார். சர்க்கார் ஊழியராக இல்லாமல் அவர் பெருந்தொழில் நடத்து

பவராக இருந்தால் அவர் வைசியராகிறர். லோகமான்ய திலகரைப் போல் எதையும் தியாகம் செய்து நாட்டுக்கு விடுதலையளிக்க வேண்டும் என்ற ஒரே எண்ணமுடைய தன்னலமற்ற அரசியல் தலைவராக இருந்தால், அவர் முதல்தரமான க்ஷத்திரியர் என்று சொல்லலாம். ஆனல் ஒருவர் பலனைச் சிறிதும் பொருட்படுத்தாமல் லக்ஷ்யத்துக் கென்றே சோர்வில்லாமல் உழைத்து, தம் நோக்கம் கைகூடுவது கூடப் பெரிதல்ல, அதற்காகத் தாம் கடைப்பிடிக்கும் மார்க்கத்தின் தூய்மையே பெரிது என்று கருதி ஒழுகுவாரானல் அவரையே பிராமணரென்று சொல்லலாம். காந்தியடிகள் அப்படிப்பட்டவர்.

வருணுசிரமத்தை ஏற்படுத்தினவர்கள் அப்போதிருந்த நிலைமைகளை சமாளிக்க வேண்டி வருணுசிரமம் பரம்பரையானது என்று ஏற்படுத்திவிட்டார்கள் போலும். இதனல் அந்த முறை சிறிதும் நெகிழ்ச்சியோ வளர்ச்சியோ இல்லாமல் போயிற்று. ஒருவன் குறித்த சாதியில் பிறந்தான் என்ற காரணத்தால் தன் சுய இச்சையை உபயோகித்துத் தனக்கு ஏற்ற ஒரு தொழிலையோ வேலையையோ தேடிக்கொள்வதற்கான சுதந்திரம் அனேகமாய் இல்லாமல் போய் விட்டது. ஆனல் தற்கால உலகத்தில் தொழிலும் உத்தியோகமும் பொறுத்தவரையில் யாரும் எதுவும் செய்ய முடியும். உழைப்பாளிகள் எதற்கு வேண்டுமானலும் கிடைப்பார்கள். போக்கு வரத்துச் சாதனங்கள் மிகுதி. தொழில் திறமை பெறுவதற்கான வசதிகள் அதிகம். கல்வி எல்லோருக்கும் உரியது. ஆகவே இந்த நிலைமைகளுக்கிடையில் பழைய வருணுசிரம தர்மம் சிறிதும் பொருந்த முடியாமல் போய்விட்டது. ஆயினும் எவ்விதமான நிலைமைகள் வழங்கினுலும், அவரவர் வேலை செய்யும் பக்குவத்தைப் பொறுத்து, நாம் முற்கூறிய ஆசிரமம் அல்லது வாழ்க்கை முறைகள் எப்போதும் கவனிக்கத் தக்கவை. தாழ்ந்த நிலையிலிருந்து உயர்ந்த வாழ்க்கை முறைக்கு வர எத்தனிப்பவர்கள் யாராய் இருந்தாலும் அவர்களுக்கு எல்லா ஆதரவும் தரவேண்டும்.

மேலே நாம் காட்டிய வாழ்க்கை முறைகள் மிகவும் துள்ளியமாய்த் தெரிந்தபோதிலும்கூட எப்போதும் அவ்வளவு துள்ளியமாய்க் காணப்படுவதில்லை. ஒரே மனிதர் பல வேறு சமயங்களில் எப்படி எப்படி மனத்தில் தோன்றுகிறதோ அப்படியப்படி வெவ்வேறு விதமாய் வேலை செய்யவும் கூடும். ஆயினும் அவருடைய செயல்களை மொத்தமாய்த் தொகுத்து எந்த அம்சம் மேலோங்கி இருக்கிறதென்றும் அவருடைய வாழ்க்கைத் தத்துவத்தையும் மனப்போக்கையும் எந்த லக்ஷ்யம் ஆட்கொண்டிருக்கிறதென்றும் பார்த்துத்தான் அவருடைய பொதுவான வாழ்க்கைமுறையை நாம் நிர்ணயிக்கவேண்டும்.

அத்தியாயம் 7

## மக்கள் வளர்ச்சியின் பலநிலைகள் (தொடர்ச்சி)

## மக்கள் தொகுதிகள் அல்லது நாடுகள்

தனி மனிதன் எப்படி ஒருவகையான வாழ்க்கை முறையிலிருந்து மற்றொன்றுக்கு மாறமுடியுமோ அப்படியே பல மனிதர் அடங்கிய சமூகமும் அல்லது ஒரு நாடு முழுமையும் அல்லது மக்களினம் முழுமையும்கூட ஒன்றாக ஒரு வகையான வாழ்க்கை முறையிலிருந்து மற்றொன்றுக்கு மாற முடியும். அவ்வாழ்க்கை முறையின் சிறப்பான அம்சங்கள் சமூகம் அல்லது நாட்டின் பொது வாழ்க்கையில் திட்டமாக வெளிப்படும். ஆதலால் ஒருமக்கள் சமூகம் அல்லது நாட்டின் பொது வாழ்க்கையில் என்ன தன்மைகள் வெளிப்படுகின்றன என்பதை மற்றச் சமூகங்கள் அல்லது நாடுகளோடு இது என்ன வகையான தொடர்பு வைத்திருக்கிறது என்பதையும் ஆராய்ந்து மக்கள் இனவளர்ச்சியில் இது என்ன நிலைக்கு வந்திருக்கிறது என்பதையும் கண்டு கொள்ள முடியும்.

நம்முடைய ஆராய்ச்சிக்காக மக்கள் நாகரிகம் வளர்ந்து வந்த சிக்கலான பாதையை மூன்று பகுதியாகப் பிரித்துக் கொள்ளலாம். முதல் பகுதி நாகரிகமற்ற அல்லது பிராணிநிலை. இரண்டாம் பகுதி தற்காலம் அல்லது மனிதநிலை. மூன்றும் பகுதி இன்னும் மேம்பட்ட அல்லது தர்மநிலை (ஆன்மார்த்த நிலை). முன்னமே ஐந்து வகையான வாழ்க்கை நிலையை நாம் குறிப்பிட்டிருக்கிறோம். அவற்றுள் கொலை வாழ்க்கையும் கொள்ளை வாழ்க்கையும் நாகரிகத்தின் பிராணிநிலைக்கு உரியவை என்று பொதுவாய்க் கருதலாம். முயற்சி வாழ்க்கையும் குழு வாழ்க்கையும் நாகரிகத்தின் தற்காலம் அல்லது மனித நிலையைக் குறிப்பிடும். கடைசி முறையான சேவை வாழ்க்கைதான் எல்லாவற்றினும் மேம்பட்ட ஆன்ம நிலையைக் காட்டும். இந்த மூன்று நிலைகளில் முதல் நிலை ஹிம்சை பொருந்தியது, அழிந்து போவது; இரண்டாவது நிலையில் அழியாமைக்கும் அஹிம்சைக்கும் ஆர்வம் பெருகிக் காணப்பட்டாலும், ஹிம்சை அதிகமாயுள்ள அழிவுள்ள நிலைதான்; கடைசி நிலையானது சாந்திக்கும் அஹிம்சைக்கும் அழியாமைக்கும் இடமாயுள்ளது.

**புராதன காலம் அல்லது பிராணி நிலை :** இந்த நிலையில் உள்ளவர்கள் மற்ற மக்கள் தொகுதியினரோடும் அல்லது நாடுகளோடும் தொடர்பு வைத்துக் கொள்ளும்போது கொலை வாழ்க்கையின் தத்துவங்களை

மேற்கொள்வார்கள். புல்லுருவியானது தான் சாரமிழுக்கிற தாய் மரத்தின் உரிமைகள் என்ன, தனக்கு வேண்டிய சத்தை அம்மரம் எப்படிக் கிரகிக்கிறது, தான் சத்தை இழுத்துக் கொண்டால் அம்மரம் என்ன ஆகிறது என்றெல்லாம் எண்ணிப் பார்ப்பதில்லை. அப்படியே மாட்டின்மேல் பாயப்போகிற புலியானது சற்று நிதானித்து அந்தத் தருணத்தில் ஆட்டின் மனம் என்ன எண்ணுகிறது என்று கவலைப் படுவதில்லை. தற்போதைக்குத் தனக்கு ஏற்பட்டுள்ள பசியைத் தீர்த்துக் கொள்ளவே அது பார்க்கிறது. அதுபோல, வேடனும் மீன் பிடிப்பவனும் மனத்தில் எவ்விதப் பச்சாத்தாபமும் இல்லாமல் தன் பசியைத் தீர்த்துக்கொள்ள வேண்டி வேட்டையாடுகிறான் அல்லது மீன் பிடிக்கிறான். இதேபோல, ஒரு தேசத்தின் பொருளாதார அமைப்பானது, அந்தத் தேசம் நன்றாய் வாழும் பொருட்டு மற்றொரு தேசத்துக்குத் தீங்கிழைத்தோ அல்லது அத்தேசத்தை நாசமாக்கியோ தான் வாழ நேர்ந்தால், அந்தத் தேசத்தின் தன்மை புல்லுருவி அல்லது கொலை வாழ்க்கை என்று சொல்லலாம்.

முற்காலத்தில் இப்படிப்பட்ட நாடுகள் பல இருந்தன. கிரேக்க சாம்ராஜ்யம் ரோம சாம்ராஜ்யம் முதலியன உதாரணங்கள் ஆகும். பிற நாடுகள் தந்த கப்பத்தை வாங்கியும் மற்றவர்களை அடிமைகளாக வைத்துக் கொண்டும் இவை ஆடம்பரமாக இருந்தன. ஆகவே இவற்றின் வாழ்க்கை கொலை வாழ்க்கைதான்.

இக்காலத்தில் குடியேற்ற நாடுகளிலிருந்து வரும் சரக்கைக் கொண்டும் அயல்நாட்டுக் கூலிகளைக் கொண்டுவந்து வைத்தும் தங்கள் பிழைப்பை நடத்திவருகிற எல்லா நாடுகளும் கொலை வாழ்க்கை உடையன. பிரிட்டன் தேசம் சீனத்தில் அபினி வியாபாரம் நடத்தி வருகிறது ; தென் அமெரிக்க நாடுகளில் அடிமை வியாபாரம் நடத்தி வருகிறது. பெல்ஜியம் தேசம் மேற்கு ஆப்பிரிக்க நாட்டுச் செல்வத்தைச் சுரண்டிப் பிழைக்கிறது. இங்கிலாந்தில் சாமான் உற்பத்தி செய்பவர்கள் சாமான்களை இந்தியாவில் கொண்டுவந்து விற்றே பிழைப்பு நடத்த வேண்டி இருக்கிறது. இவர்கள் யாவரும் தங்கள் கையில் அகப்பட்ட பிற நாட்டாருக்கு நாசம் விளைவிப்பதால் கொலை வாழ்க்கை உடையவர்களே.

மற்றும் சிலர், குரங்கானது தான் எந்த உழைப்பும் செய்யாமலே மரத்திலிருந்து பழத்தைப் பறித்துத் தின்பது போல, பிழைப்பு நடத்துகிறார்கள். குரங்கின் வாழ்க்கை கொள்ளை வாழ்க்கை. இது தான் பழம் பறிக்கிற மரத்துக்கு எவ்வித கெடுதியும் செய்யாமல் மேலும் அது காய்த்துப் பழுக்கும்படி விட்டுவிடுகிறது. இதற்கு

உதாரணமாக இந்தியாவுக்கு வந்த நாதர்ஷா போன்ற கொள்ளைக் காரர்களைச் சொல்லலாம். இவர்கள் இந்தியாவுக்கு வந்து கோயில் களையும் உபயோகமில்லாமல் தேங்கிக் கிடந்த செல்வத்தையும்




தாங்கள் செல்வம் உற்பத்தி செய்யாமல் முதலாளிகள் வாழும் ஆடம்பர வாழ்க்கை

கொள்ளை யடித்துச் சென்றார்கள். மக்கள் மேலும் பொருள் உற் பத்தி செய்வதற்கிருந்த சக்திக்கு இவர்கள் கேடு உண்டாக்கவில்லை. இவர்கள் படையெடுப்பெல்லாம் வெறும் கொள்ளை தான்.

அமெரிக்கப் பட்டணமாகிய நியூயார்க்கில் இருந்து கொண்டு தென் அமெரிக்கக் குடியரசு நாடுகள் பலவற்றைத் தங்களுக்குக் கப் பம் கட்டும்படிசெய்து வருகிற தற்காலப் பெரும் முதலாளிகள் இந்தக் கொள்ளை முறையைச் சேர்ந்தவர்கள். இக்காலத்துக் கூட்டுமூலதனக் கம்புனிகளில் பணம் போட்டிருப்பவர்கள் பொருள் உற்பத்தியில் தாங்கள் எந்த வேலையிலும் பங்குகொள்ளாமல் லாபத்தில் மாத் திரம் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். இதுவும் கொள்ளைமுறை. உழைப்பில் இவர்களுக்குப் பங்கில்லை; ஊதியத்தில் மாத்திரம் பங் குண்டு. இப்படியே பெரிய வியாபார ஸ்தாபனங்கள் அனேகம் ஏக போக உரிமைகளைப் பெற்று, செய்வது கொஞ்சமாயிருந்தாலும் அள வில்லாத லாபத்தைப் பெறுகிறார்கள். இதுவும் கொள்ளைமுறை.

**தற்காலம் அல்லது மனிதநிலை:** முந்திய நிலையானது சுயநலம் என்ற மனப்பான்மையையும் உரிமைகளை மட்டுமே அடிப்படை

யாகக் கொண்டிருந்தது. அதனினும் மேம்பட்ட இந்த மனித நிலையில்தான் செய்யவேண்டிய கடமைகளை அறிந்ததற்கு அறிகுறிகள் காணப்படுகின்றன. உரிமைகள் கேட்கிற அளவுக்குக் கடமைகளைச் செய்வதற்கான ஒரு பிரயத்தனமும் இங்குக் காணப்படுகிறது. இந்த நிலைக்கு வந்த நாடுகள் அயல்நாடுகளுக்குத் தீங்கு இழைக்காமல் தங்கள் சொந்த முயற்சியால் வரும் பலனைக் கொண்டு திருப்தியோடு வாழ முயல்கின்றன. இந்த முயற்சி வாழ்க்கையிலுள்ள நாடுகளுக்கு உதாரணமாகப் பயிர்த்தொழில் நாகரிகம் பெற்ற நாடுகளான இந்தியாவையும் சீனத்தையும் குறிப்பிடலாம். இந்நாடுகள் திறமையுள்ள தொழிலாளரைக் கொண்டு அமைதியாக அவர்கள் நன்மைக்கென்று தொழில் நடத்துவித்து அதன்மூலம் வாழ்ந்தன.

இஸ்லாமிய நாகரிகத்தில், ஒரே மக்களினமாய் ஆதியிலிருந்த காரணத்தால், ஒருமைப்பாடும் ஒற்றுமையும் இருந்தன. கறுப்பன் சிவப்பன் வெள்ளையன் என்ற நிற வேறுபாடு அங்கில்லை. சொத்துக் காரணமாக வரும் ஆண்டான் அடிமை என்ற வேறுபாடும் அங்கில்லை. இது குழு வாழ்க்கைக்கு உதாரணமென்று சொல்லலாம். ஜெர்மானிய நாஜிகளையும் இத்தாலிய பாசிஸ்டுகளையும் புதிதாக இந்த நிலையில் சேர்க்கலாம். இவர்களுள் தொகுதி உணர்ச்சி மிகவும் அதிகம். தங்கள் தொகுதிக்குப் புறம்பாயுள்ளவர்கள் விஷயத்தில் இவர்கள் ஹிம்சை விளைவிக்கத் தயங்குவதில்லை.



ஜலமின்சார நிலையம் போன்ற பொதுஜன உபகாரத்திட்டங்கள்

ஆயினும் இவர்களின் பொதுத்தன்மை குழுவாகத் திரளுதல்; தங்கள் இன மக்களுக்குக் கடமை செய்ய வேண்டும் என்ற உணர்ச்சி அதிகம். ஒவ்வொரு தனி மனிதனும் முழுத் தொகுதியின் நலமே தன் சொந்த நலமென்று எண்ணுகிறான்.

**பிரகிருதி**

- நிலையில்லாதது - அழிவு தருவது
  - உரிமைகளை அடிப்படையாகக் கொண்டது - பரோபகாரச் சிந்தனை இல்லாதது
    - மனிதன் உள்பட, எல்லாப் பிராணிகளும்
      - கொலை வாழ்க்கை
        - தான் செய்வது ஒன்றுமில்லை
          - நன்மை தந்த பொருளுக்குத் தீங்கு
      - கொள்ளை வாழ்க்கை
        - தான் செய்வது ஒன்றுமில்லை ; செய்திருந்தால், தான் பெற்றதை விட அதிகமாயுள்ளதில் தனக்குப் பங்கில்லை.
      - முயற்சி வாழ்க்கை
        - தான் செய்வதும் உண்டு பெறுவதும் உண்டு
      - குழு வாழ்க்கை
        - தான் பெறுவதை விடச் செய்வது அதிகம் (shared with the குழு வாழ்க்கை below)
- சாசுவதமானது - ஆக்கந் தருவது
  - கடமைகளை அடிப்படையாகக் கொண்டது - பரோபகாரச் சிந்தனையுடையது
    - பண்பாடு வாய்ந்த மனிதன்
      - குழு வாழ்க்கை
        - தான் பெறுவதை விடச் செய்வது அதிகம்
      - சேவை வாழ்க்கை
        - பலன் பெறுவது பற்றிய எண்ணம் சிறிதும் இல்லாமல் சேவை செய்தல்.

ஆன்ம நிலை : இங்கு தன் தொகுதிக்கு மாத்திரமல்லாமல் எல்லா உயிர்களுக்குமே தொண்டு பூணவேண்டும் என்ற சேவை உணர்ச்சி வியாபித்திருக்கிறது. சமயம் என்று சொல்வதெல்லாம் இந்தப் பண்பு வருவதற்கான ஒரு பயிற்சிக்கூடம்தான். சமயங்கள் யாவும் உயிர்களுக்கு அன்பு காட்டவேண்டு மென்றும் திக்கற்றவருக்குச் சேவைசெய்யவேண்டுமென்றும் போதிக்கின்றன. அன்றியும் அவை மனிதன் இந்தத் தெய்வ நெறியிலிருந்து பிறழ்ந்தால் பாவம் சம்பவிக்கிறதென்றும் கடவுள் தீர்ப்புக்குப் பதில் சொல்லவேண்டு மென்றும் எடுத்துக் காட்டுகின்றன. ஆசைகளின் மாயவலையில் சிக்காமல் சிறிது நேரம் இருந்து அழிகிற உலக இன்பங்களைத் தேடுவதிலேயே நம் இச்சையைச் செலவிட வேண்டாமென்று அவை நம்மை எச்சரிக்கின்றன.

இதுவரையில் இந்த நிலைக்கு உதாரணமாகச் சொல்லத் தக்க பெரிய சமூகம் எதையும் நாம் தோற்றுவிக்கவில்லை. பண்டைக்



ஜனசமூகத்தின் நன்மைக்காக உழைக்கும் விஞ்ஞானி

காலத்திலிருந்த லக்ஷ்ய பிராமண சமூகமானது இந்த நிலைக்கு எடுத்துக்காட்டாகும். ஆனல் பிராமண சமூகம் என்று இந்தக் காலத்தில் சொல்லுகிற சாதிக்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

மகாத்மா காந்தி தம்முடைய சக்தி அனைத்தையும் உபயோகித்து இப்படிப்பட்ட ஓர் நிலையைத்தான் தோற்றுவிக்க முயன்று வந்திருக்கிறார். அவர் தோற்றுவித்த ஸ்தாபனங்களாகிய அகில இந்திய சர்க்கா சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழிற் சங்கம் முதலியவை தம் லக்ஷியங்களைச் செயலில் கொண்டு வருவதற்காக அவர் மேற்கொண்ட முயற்சிகள் என்று சொல்லலாம். அவர் முயற்சி வெற்றிபெற்றால் அஹிம்சா பூர்வமான அழியாத செல்வம் அல்லது நித்தியமான வாழ்க்கைமுறை இந்த நாட்டில் நிலைபெற்றதாகும். அது இந்த மண்ணுலகில் வானுலக ஆட்சியை அதாவது ராம ராஜ்யத்தை அல்லது சாசுவதமான சாந்தியைத் தோற்றுவிக்கும்.

## அத்தியாயம் 8

## பொருள் மதிப்புக்கு அளவுகோல்

பலவகைப்பட்ட பொருள்களை நாம் மதிப்பிடும்போது நன்றாய்த் தெரிந்த அல்லது எல்லோரும் ஒப்புக்கொள்கிற சில அளவைகளோடு ஒப்பிட்டு மதிப்பிடுகிறோம். மதிப்பிடுவதற்கும் அளப்பதற்கும் சரக்குக் கேற்றபடி வெவ்வேறு வழிகள் உள்ளன. சிலவற்றை எண்ணாலும் சிலவற்றை எடையாலும் பரிமாணத்தாலும் நீளத்தாலும் இன்னும் பலவகையாலும் அளக்கிறோம். அரிசி இத்தனை படி என்கிறோம். சர்க்கரை இத்தனை வீசை என்கிறோம், இரும்பு இத்தனை டன் என்கிறோம். மரத்தைக் கன அடிக் கணக்கிலும், துணியைக் கெஜக் கணக்கிலும் காகிதத்தை ரீம் கணக்கிலும், மூங்கிலை எண்ணிக்கையாலும் எண்ணெயைச் சேர்க் கணக்கிலும் அளக்கிறோம். ஒவ்வொன்றுக்கும் உரிய அளவையானது திட்டமாக ஏற்பட்டு எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பெற்றுள்ளது. தவிர இன்ன சரக்குக்குத்தான் இன்ன அளவை, என்ற வரையறையும் எல்லோரும் அறிந்தது. கடையில் போய் ஆயிரம் அரிசி கொடு என்று யாரும் கேட்பதில்லை.

ஒரு பொருளால் நமக்கு என்ன பயன் என்பதை யொட்டி அதை மதிப்பிடும்போது இது சுயநலமுறை ஆகிறது. வேறொரு லக்ஷ்யத்தை வைத்தோ அல்லது பிறருக்கு இது எப்படி உதவும் என்பதை வைத்தோ மதிப்பிடும்போது இது பரோபகார முறை ஆகிறது. பிராணிகள் பெரும்பான்மையும் தங்களுக்கு வேண்டியதைத் தங்களே நிர்ணயிக்கின்றன. குறித்த ஒரு பொருள்

தற்போதைக்குத் தாங்களுக்கு என்ன பயன்தரும் என்று மட்டும் அவை பார்ப்பதால் அது சுயநலமுறை ஆகிறது. பரோபகார முறை அவற்றிடம் இல்லை. அதுபோல, புராதனமான காட்டுமிராண்டி மனிதனுக்கும் பரோபகார மதிப்பு என்பது இல்லை. நாகரிகம் பெற்ற முன்னேற்றம் வாய்ந்த மனிதன்தான் தன்னை மறந்து பொருளை மதிப்பிட முடியும். உண்மையில் பொருள் மதிப்புக்கு மனிதன் என்ன அளவை உபயோகிக்கிறானோ அதை வைத்தே அவனுடைய உயர்வை அறியவேண்டும்.

### சொந்த மதிப்பு அல்லது சுயநல மதிப்பு

**மதிப்பின் வகைகள் :** வாழ்க்கையின் பல வேறு துறைகளில் அனேக சமயம் நாம் மக்களையும் வஸ்துக்களையும் மதிப்பிட வேண்டி இருக்கிறது. கிணற்றுநீர், புதுநீர், தூய்மையானது என்கிறோம். ஒரு பூ அழகானது என்கிறோம். ஒரு மனிதனுடைய நடத்தை மிகவும் கௌரவமானது என்கிறோம். இந்த மதிப்புக்களுக்கு அடிப்படையில் சில அளவுகோல்கள் உள்ளன. ஒருவன் செய்கிற மதிப்பு தவறின்றி எப்போதும் திருத்தமாக இருந்தால், தராதரம் தெரிந்தவன் அல்லது கூர்மையான அறிவுடையவன்என்று சொல்லுகிறோம். அதாவது, அவன் அந்தந்த வஸ்துவுக் கேற்ற சரியான அளவுகோலை உபயோகிக்கிறான் என்று பொருளாகிறது. இந்த அளவுகோல்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். ஒன்று ஸ்தூலமானது வஸ்துவைப் பொறுத்தது. இரண்டு, நாகரிகத்தை அல்லது மனத்தைப் பொறுத்தது. மூன்று, ஒழுக்கத்தை அல்லது ஆன்மாவைப் பொறுத்தது.

ஒரு வியாபாரியானவன் வியாபாரத்தில் தனக்கு வரும் லாபத்தை வைத்தே எதையும் மதிப்பிடுவான். வயிற்றுக் கில்லாது வாடும் தொழிலாளி ஒருவன் எதைப் பார்த்தாலும் அதனால் தன் பசி தீருமா உடுக்கத் தனக்குத் துணி கிடைக்குமா இருக்க நிழல் கிடைக்குமா என்றுதான் ஆராய்வான். ஓவியன் எந்தப் பொருளிலும் கலைஅழகு இருக்கிறதா என்றுதான் பார்ப்பான்.

**வேறு வகையான மதிப்புக்கள் :** காலத்தாலும் பிரசித்தியாலும் செல்வத்தாலும் மதிப்பு வேறு வகையாகவும் ஏற்படுவதுண்டு. எகிப்திய நாட்டின் தலைநகரான கெய்ரோ நகரின் பொருட் காட்சிச் சாலையில் இருக்கும் ஊழியன் அங்குள்ள பொருள்களைக் காலத்தை வைத்து மதிப்பிடுகிறான். 'டூடன்காமன் என்ற சக்கரவர்த்தியின் இந்தப் பதுமை இத்தனை ஆயிரம் வருஷங்களுக்கு முற்பட்டது' 'இந்தப் பதுமை கிறிஸ்து பிறப்பதற்கு இத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது' என்றெல்லாம் எடுத்துக்காட்டி, வருபவர்கள்

அப்பொருள்களின் பழமையைக் கண்டு மலைக்கவேண்டுமென்று அவன் எதிர்பார்க்கிறான்.

இத்தாலி தேசத்திலுள்ள ரோம் அல்லது பிளாரன்ஸ் நகரிலுள்ளவன் காட்சிச் சாலையிலுள்ள சித்திரங்களைக் காட்டி இவை மைக்கேல் ஏஞ்ஜலோ, ரூபன் முதலான ஓவிய நிபுணர்கள் தீட்டியவை என்று பெருமிதமாகச் சொல்வான். பார்ப்பவர்கள் இப் பெயர்களை அரிய வேலைப்பாட்டுக்கு அடையாளமாக ஏற்றுக் கொள்ளவேண்டும்.

பிரெஞ்சுத் தலைநகரான பாரிஸ் நகரத்துக்குப் போனால் அங்குள்ளவர்கள் சிங்காரத் தோட்டம், கட்டிடம், கலை, இலக்கியம் முதலியவற்றில் தங்களுக்கு மிஞ்சியவர்கள் இல்லை என்று பெருமை பாராட்டிக் கொள்வார்கள்.

அதைவிட்டு இங்கிலாந்து தேசத்துப் பொருட்காட்சிக்குச் சென்றால் இன்னின்ன பொருள்கள் சீனத்திலிருந்தும் இந்தியாவிலிருந்தும் பாரசிகத்திலிருந்தும் பெருவிலிருந்தும் கொண்டு வரப்பட்டவை என்று காட்டுவார்கள். பார்க்கிறவர்கள், பிரிட்டிஷ்காரர் உலகம் முழுமையிலுமிருந்து பொருள்களைத் திரட்டியிருக்கிறார்கள் என்று திகைப்படைய வேண்டும்.

அமெரிக்காவுக்குப் போனால் நியூயார்க் நகரத்தில், வீதியிலுள்ள கட்டிடங்களின் உச்சியைக் காணவேண்டித் தலைப்பாகை கழன்று விழும்படியாகக் கழுத்தை வளைத்து அண்ணாந்து பார்க்கவேண்டும். பார்க்கையில் அங்கு வைத்துள்ள கருவி, இந்தக் கட்டிடம் கட்ட இத்தனை கோடி டாலர் செலவாயிற்று என்று சொல்லும். கோடிக்கணக்கில் பொருளோடு பழகி இராத நம் போன்றவர்கள் இதைக் கேட்டுப் பிரமிப்போம். அமெரிக்கர்கள் பெருமை பாராட்டிக் கொள்வது தங்கள் பழம் பெருமையல்ல, தங்கள் சிற்பத் திறமையல்ல, பொருளின் அழகோ அபூர்வமோ அல்ல: ஆனால் தங்கள் குபேர சம்பத்தைக் காட்டித்தான் பெருமை கொள்கிறார்கள்.

குறித்த ஒரு சந்தர்ப்பத்தில் ஒரே அளவுகோல் பொருந்தும் என்பதில்லை. இருந்தாலும் எந்த அளவுகோலை அதிக முக்கியமென்று கருதுகிறார்கள் என்பதை வைத்து, குறித்த மக்களுக்கு எது பிரதானம் என்று நாம் அறியலாம். தாஜ்மஹாலைப் பார்ப்பவர் அதில் உபயோகித்துள்ள சலவைக் கல்லின் தரத்தை எடுத்து வியந்து கொள்வதில்லை. அதனினும் மேலான சலவைக் கற்கள் மற்ற இடங்களில் இல்லையா? இதைக் கட்டிய சிற்பியின் பெயர் கூடத் தெரியாமல் இருக்கலாம். இக்கட்டிடம் கட்டி இன்னும் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகவில்லை; ஆனால் இதில் பெருமை

என்ன என்ருல், அதனுடைய பொதுவான தோற்றம் ; அதனுடைய அமைப்பு ; வெளியே இருந்து பார்ப்போர் மனத்தில் அது உண்டாக்கும் பெருமித உணர்ச்சியே, அதன் சிறப்புக்களை எடுத்து யாரும் புகழ்மாலை பாடாமலே, அதனிடத்து ஒரு பரவச உணர்ச்சி தருகிறது.

இது வரையில் பொருள் மதிப்புக்கான பலவகை அளவுகோல்களையும், பொருளின் ஸ்தூலமான மதிப்பு இல்லாமல் வேறு வகையான காரணங்களை வைத்து மதிப்பு ஏற்படுகிறது என்பதையும், உதாரண மூலமாய்ப் பார்த்தோம். இன்னும், ஒரு வியாபாரியின் பெட்டியில் வைரமிழைத்த மோதிரம் விற்பனைக்காக காட்டி வைத்திருப்பதைப் பார்க்கலாம். அதன் மதிப்பு அதிலுள்ள வைரத்தையும் தங்கத்தையும் விட அதிகமானது. அப்படியே ஓர் ஓவியன் எழுதியுள்ள அழகிய படம், அதற்கு உபயோகித்த துணியையும் வர்ணத்தையும் விடப் பல மடங்கு மதிப்புடையது. பிள்ளையானவன் தன் தகப்பனுர் நெடுங்காலம் உபயோகித்திருந்த கைப்பிரம்பைக் கிடைத்தற்கரிய செல்வமாக வைத்துப் பாதுகாக்கிருன். பிரம்பு அடுப்பெரிக்கவும் தகுதியற்றதாக இருக்கலாம். ஆனுல் அதன் மதிப்பு, பிள்ளையைப் பொறுத்த வரையில் விசேஷமானது.

சொந்த மதிப்பு அல்லது சுயநலத்தால் வந்த மதிப்பைப்பொறுத்த வரையில், குறித்த ஒரு பொருளினிடம் எல்லோருக்கும் ஒரேவிதமான விருப்பம் இராது. பொருளின் மதிப்பு அவரவரைப் பொறுத்து மாறுபடும். பணம் எல்லோருக்கும் பொதுவானது. ஆயினும் அது கூட எல்லோருக்கும் ஒரே விதமான திருப்தியை அளிக்கும் என்பது நிச்சயமில்லை. குடியானவனிடம் ஒரு ரூபா பணம் கிடைத்தால் அது அவன் குடும்பத்துக்கு ஒரு நாளைய சாப்பாட்டுச் செலவுக்கு ஆகும். பட்டணத்தில் வாழ்கிற ஒரு குமாஸ்தா கையில் அதே ரூபா கிடைத்தால், ஒரு சினிமாவுக்கு ஆகிறது. பணக்காரன் கையில் அந்த ரூபா இருந்தால் ரயிலடியில் போர்ட்டருக்குக் கொடுக்கும் கூலியாகும். இவற்ருல், பணக்காரனிடமிருந்து ஒரு ரூபா நாணயமானது ஒரு குடியானவன் கைக்கோ ஏழை கைக்கோ மாறின மாத்திரத்தில், அதே ஒரு ரூபாயால் வரக்கூடிய இன்பம் பலமடங்கு அதிகமாவது தெரிகிறது. இவ்விதமே ஏழையிடமிருந்து பிடுங்கிப் பணக்காரனிடம் சேர்க்கிற ஒவ்வொரு ரூபாயாலும் வரக்கூடிய இன்பம் குறைகிறது.

அன்றியும், ஒரே பொருளானது ஒரே மனிதன் கையில் எல்லாச் சமயத்திலும் ஒரே மதிப்புடையதாக இருப்பதில்லை. ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். ஒரு பையனிடம் ஏழு லட்டு உருண்டைகள் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். ஏழும் ஒரே அளவும் சுவையும் உள்ளன. ஆனுல் ஒரு லட்டு சாப்பிடுவதனுல் வரும்

இன்பம் அடுத்த லட்டு சாப்பிடுவதால் வராது. பையன் முதல் லட்டை அளவற்ற ஆசையோடு சாப்பிடுகிறான். இரண்டாவது மூன்றாவது லட்டுகளையும் சுமாரான ஆசையோடு சாப்பிடுவான். ஆனால் பிற்பட்டவற்றைச் சாப்பிடும்போது அவனுடைய ஆசை பெரிதும் படிப்படியாக குறைந்து விடும். சில லட்டுகள் ஆனதும் ஆசை எல்லாம் முடிந்து, தெவிட்டுதல் ஏற்பட்டு, இனிமேல் கொஞ்சமும் வேண்டாம் என்ற நிலைமை வந்துவிடும். ஆகவே அதிகமான லட்டு தின்பதென்றால் அதனால் வரும் இன்பம் குறைகிறது. பணக்காரன் கையில் போய்ச் சேர்ந்த ரூபாயின் மதிப்பும் இவ்விதமே. கையில் அதிகம் சேரச்சேர ஒவ்வொன்றின் மதிப்பும் குறைந்து போகிறது.

இன்னும் பார்ப்போம். நம் பையன் ஆறு லட்டு தின்று விட்டான். மேலும் தின்ன வேண்டுமென்ற ஆசை குறைந்துபோய் விட்டது. ஆனால் தண்ணீர் குடிக்கவேண்டுமென்ற ஆசை அதிகமாயிருக்கிறது. அடுத்தாற் போலுள்ள ஒரு பையன் இவனுக்கு ஒரு குவளை தண்ணீர் கொடுத்தால் அதை வாங்கி மிக்க ஆவலோடு இவன் குடிப்பான். ஆகவே இவனுக்கு ஏழாவது லட்டு தரக்கூடிய இன்பத்தைவிட ஒரு குவளை தண்ணீர் அதிக இன்பம் தருகிறது. மற்றப் பையனுக்கோ அந்த ஏழாவது லட்டுத்தான் அவன் உண்ணும் முதல் லட்டு ஆனபடியால், இது மிக்க இன்பம் தருகிறது. இந்தப் பண்ட மாற்று, அதாவது ஏழாவது லட்டும் தண்ணீரும் என்பது, பரஸ்பரம் இருவருக்கும் இன்பம் அல்லது லாபம்தருகிறது. ஆரம்பத்தில் இருந்தது ஒரு குவளை தண்ணீரும் ஏழாவது லட்டும் தான். அப்போது இன்பம் இல்லை. ஆனால் இந்தப் பண்ட மாற்றின் பின் முந்தி இருந்ததைவிடப் பலமடங்கு இன்பம் ஏற்பட்டிருக்கிறது. உண்மையான, எல்லா வியாபாரத்துக்கும் அடிப்படை இதுவே. வியாபாரத்தில் பரஸ்பரம் இருவருக்கும் லாபம் வரவேண்டும். ஒருவருக்கு நஷ்டமும் அதுவே மற்றவருக்கு லாபமும் ஆகக்கூடாது.

### பரோபகார மதிப்பு

பணத்தையே அளவுகோலாக வைத்து அல்லது பொருள் மதிப்பையே அளவுகோலாக வைத்து ஏற்படுகிற வாழ்க்கை முறையானது காலத்தையும் இடத்தையும் சரியான நோக்குடன் பார்க்கவில்லை. இந்தக் குறைபாடு எப்புறமும் போக வழியில்லாத ஹிம்சை நாசம் என்ற முட்டுச்சந்தில் கொண்டுபோய் விடுகிறது. மனிதன் எவ்வளவுக் கெவ்வளவு நாகரிகத்தில் மேம்படுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு முற்கூறிய விரிவில்லாத அழிந்து போகிற பொருள் மதிப்பை அவன் மேற்கொள்ள மாட்டான். பொருள் மதிப்பென்பது இவ்விதமாக சுயநலம் இல்லாததாய்ச் சொந்த உணர்ச்சிகளால்

பிறக்காததாய் சாசுவதமான அமைப்பில் வேர்கொண்டுள்ள லக்ஷ்யங்களை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். இதுவே சுய நலம் இல்லாத அல்லது பரோபகாரமான மதிப்பு. இதுவே உண்மையான நம்பத் தகுந்த வழிகாட்டி. நித்தியமான வாழ்க்கை எய்தவேண்டுமானல் முன்னதாக இவ்விதமான மதிப்பை ஆதாரமாய்க் கொண்ட வாழ்க்கை வேண்டும்.

### அறமதிப்பு

தருமம் என்ற வழியிலே நடப்பவன் உபயோகிக்கிற அளவுகோல், பொருள் மதிப்பை யொட்டியதாக இராது. திருடனொருவன், ஒரு குழந்தையைக் கொன்று அதன் கழுத்திலிருந்த சங்கிலியைத் திருடி விற்பனைக்குக் கொண்டுவருகிறான். சங்கிலி எப்படி வந்தது என்ற விவரம் தெரிந்தால், யாரேனும் அதை விலைக்கு வாங்க முன்வருவார்களா? அந்தச் சங்கிலி, எத்தனைப் பவுன் எடை என்பதை மட்டும் காட்டவில்லை; பச்சைக் குழந்தையின் வதை என்பதையும் காட்டுகிறது. குழந்தை வதையைக் கண்டு அஞ்சுபவன் எவனும், சங்கிலி மலிவாகக் கிடைக்கிறதென்பதற்காக அதை வாங்கத் துணியமாட்டான்.

இதுபோலவே, கடையில் விற்பனைக்காக வைத்திருக்கிற ஒவ்வொரு சரக்கிலும் தர்ம ரீதியான பண்புகள் சில அமைந்திருக்கின்றன. 'வியாபார மென்றால் வியாபாரந்தான்' என்று சொல்லிக்கொண்டு, இந்தப் பண்புகளை நாம் புறக்கணித்துவிட முடியாது. மற்றவர்களை அடிமை நிலையில் வைத்தும், பிறர் உழைப்பால் தான் உயிர் வாழும் பொருட்டும் தயாரித்து விற்பனைசெய்கிற சாமான்களில், பிறரை ஹிம்சைப் படுத்துதல் என்ற கறை படிந்திருக்கிறது. அந்தச் சாமான்களை நாம் வாங்கினால், அவற்றை உற்பத்தி செய்வதற்கான எந்த அடிமை நிலைகள் ஏற்பட்டிருக்கின்றனவோ அவற்றில் நாமும் பங்கு கொள்பவர்களாகிறோம். ஆதலால், நாம் வாங்கும் சாமான் விலை ஒரு பைசாவாயிருந்த போதிலுங்கூட, அந்தச் சொற்ப பேரத்திலும் நமக்குப் பெரும் பொறுப்பிருக்கிறது; எந்த அடிமைத் தனத்தை நாம் ஆதரிக்கமாட்டோமோ அல்லது பார்த்துக்கொண்டு சும்மா இருக்கமாட்டோமா அந்த அடிமைத்தனத்துக்கு இந்தச் சிறிய பேரத்தின் மூலங்கூட நாம் ஆதரவளிப்பவர்களாக ஆகிவிடாமல் பார்த்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம்.

### சமூக மதிப்புக்கள்

தான் பெறுகிற நன்மையைச் சமூகமே மதிப்பிட்டுக் கொள்ள முடியும். தனிப்பட்டவர்களும் மக்கள் தொகுதிகளும் தனக்குச்

செய்யும் சேவைக்காக, அவர்களுக்குத் தான் அளிக்கும் கௌரவத்தின் மூலம் சமூகமானது அந்த மதிப்பை வெளிப்படுத்துகிறது.

வருணாசிரம முறையை உதாரணமாகச் சொல்லலாம், அந்த முறைப்படி, கௌரவம் என்பது, குறித்த ஒருவகுப்பு சமூகத்துக்குச் செய்யும் சேவையைப் பொறுத்தது. சூத்திரன் என்று சொல்லப் பட்டவன், பிறரைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், தனக்கு வேண்டியவற்றைத் தேடிக்கொள்ளவே உழைத்தான். வைசியன், தனக்கென்று செல்வம் தேடிக்கொள்ள முயன்றான்; அந்த முயற்சியில்கூட, சொற்ப சேவையும் அடங்கியிருந்தபடியால், இவன் இன்னும் சற்று மேற்படிக்கு உரியவனானான். அடுத்தவனான க்ஷத்திரியன் தனக்கு உட்பட்ட மக்கள் அனைவரையும் பாதுகாக்கும் கடமையுடையவனாகி, தன் உயிரைவிடத் தன் கடமையை நிறைவேற்றுவதே பெரிதென்றெண்ணினான்; ஆதலால், இவனுக்கு உயர்ந்த ஸ்தானம் இருந்தது பொருத்தமே. கடைசியாக, இம்மையில் தனக்கு நேரும் இன்ப துன்பங்களையோ உடற்சிரமங்களையோ சிறிதும் பாராட்டாமல், பிராமணனவன் தனக்கென்று ஒரு லக்ஷ்யத்தை வைத்துக் கொண்டு, அதையே பின்பற்றிவந்தான். ஆதலால், சக்கரவர்த்திகள் கூட அவன் காலடியில் விழுந்து வணங்கினார்கள். இத்தகையவோர் ஒப்பற்ற வாழ்க்கை மதிப்புமுறை சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நம் நாட்டில் வழங்கியது. ஆனால் துரதிர்ஷ்டவசமாய்ப் பார்ப்பதற்குப் பகட்டாய் விரைவில் அழிந்து போகக் கூடியதாயுள்ள பொருட்செல்வமென்பது அந்த மதிப்பு முறையை அடியோடு மறைத்து விட்டது: எனவே, அத்தகைய மேன்மையான லக்ஷ்யங்களையடைய முழு முயற்சியும் செய்யவேண்டும். அந்த வழியில் நாம் சென்றால்தான் அழிவற்ற வாழ்வு நமக்குக் கிட்டும்.

**ஆன்மார்த்த மதிப்புக்கள்:** யூதர்களில் சிறந்த மன்னனாகிய தாவீது மன்னனைக் குறித்த வரலாறொன்று இங்கு ஞாபகம் வருகிறது. அவனுடைய தலைநகரானது பெத்திலஹேம் என்பது. அவனுடைய பகைவரான பிலிஸ்டயினர்கள் அவனுடைய படைவீட்டுக்கும் நகரத்துக்கு மிடையே வந்து சூழ்ந்து கொண்டார்கள். அரசன் தன் பாசறையில் இருந்தபடியே, பகைவர் அணிவகுப்பைக் கடந்து அப்பால் நகரை ஒட்டியிருந்த தண்ணீர்க் கிணற்றைச் சுட்டிக்காட்டி, இந்தக் கிணற்றுத் தண்ணீர் குடிக்கக் கிடைக்குமாவென்று ஏக்கம் கலந்த தொனியில் சொன்னானாம். கேட்டிருந்த படைவீரர்களில் சிலர் அரசனின் ஆவலைத் தீர்க்கவேண்டி, தங்கள் உயிரையும் பொருட்படுத்தாது, பகைவர் படையுட் புகுந்து அப்பா

விருந்த கிணற்றையடைந்து அதிலிருந்து ஒரு குடத்தில் தண்ணீர் கொண்டுவந்து அரசன் முன்னே வைத்தார்கள். அவன் உள்ளம் உருகியது. அந்தக் குடத்திலிருந்த நீரை அவன் வெறும் தண்ணீராகக் கருதாமல், அந்த வீரர்களின் இரத்தமென்றே கருதினான். "இந்த நீரை நான் எவ்வாறு குடிப்பேன்! இது நீரல்ல; தீரமிகுந்த என்னுடைய படைவீரர்களின் இரத்தமல்லவா இது! இதைக் குடிப்பது பாவம். கடவுளுக்கே இதை ஆகுதியாகச் சொரிகிறேன்" என்று அதைச் சொரிந்துவிட்டான்.

எனவே, ஆன்மார்த்தமாகப் பார்க்கும்போதுதான் பொருள்களின் உண்மையான நிலையும் காட்சியும் நமக்குப் புலப்படும். எந்த அளவுக்கு நம் செயல்கள் இப்படிப்பட்ட ஆன்மார்த்த மதிப்புக்களைத் தழுவி அமைகின்றனவோ அந்த அளவுக்கு நம்முடைய வாழ்க்கையும் புனிதமடையும்; அழியாத வாழ்வை நோக்கி நம்மைச் செலுத்தும் பாதையும் அந்த அளவுக்கு உறுதியான அடிப்படை கொண்டதாகி, அஹிம்சை மூலமாக மக்களினத்துக்கே இன்பமும் சாந்தியும் அளிக்கும்.




## அத்தியாயம் 9

## மதிப்பிடுதல்

மக்கள் பொருள்களையும் காரியங்களையும் மதிப்பிடுவதற்கு உபயோகிக்கும் அளவுகோலின் சாயலையும் மதிப்பிடும் முறையின் சாயலையும் அவர்களிடமே காணலாம். ஒரு மக்கட் கூட்டத்தாரிடையே வாழ்க்கையில் என்ன பிரதான மதிப்பிருக்கிறதோ அதன்

சாயல் பல நூற்றுண்டுகள் வரையில் அவர்களுடைய நாகரிகத்தைப் பாதிக்கும். ஆதலால் பொருளையும் செயலையும், அதாவது வாழ்க்கையை மதிப்பிடுவதற்கான அளவுகோலை நாம் புத்தி பூர்வமாகவும் திட்டமாகவும் தெரிந்து தேர்ந்து கொள்வது மிகவும் முக்கியமானது.

எகிப்து, பாபிலோன், கிரீஸ், ரோம் முதலான நாடுகளிலிருந்த புராதன நாகரிகம் அழிந்துபோய்விட்டது; அவற்றின் கதை யாதென்று நாம் அறிய வழியில்லை. கோலாகலமாய்க் கொஞ்சகாலம், சில நூறு வருஷங்கள், நிலவியிருந்துவிட்டு அவை அடியோடு அழிந்து போயின; காரணம், அவை சுயநலமே பிரதானமாய்க் கொண்டு அழியுந்தன்மை யுள்ள வாழ்க்கைத்தரம் பெற்றிருந்தமையும், சென்ற அதிகாரத்தில் நாம் குறிப்பிட்டுள்ளபடி தங்கள் ஆதிக்கத்துக்குட்பட்ட மக்களை அடிமைகளாக்கியும் அவர்களை ஹிம்சித்துக் கப்பம் வாங்கியும் வந்த ஆட்சி முறையால் அந்நாடுகளின் அமைப்பே சீர்கெட்டிருந்தமையும் ஆகும். கிரேக்கர்களும் ரோமர்களும், தங்கள் கலையிலும் இலக்கியத்திலும் சிற்பத்திலும், சுயநலநோக்கமும் உணர்ச்சியும் நிறைந்த தங்கள் மனப்போக்கின் சாயலையும் வாழ்க்கை மதிப்பின் சாயலையும் அழியாதபடி காட்டி வைத்துச் சென்றிருக்கிறார்கள் என்பது உண்மை. அவர்களுடைய சந்ததியார் பழம்பெருமை பாராட்டிக் கொள்வதற்கான உயிரற்ற பழமையைத் தவிர இவை வேறொன்றுமில்லை. அவர்களுடைய நாகரிகம் இன்று ஜீவன் நிறைந்த ஒரு சக்தியாயில்லை.

இவற்றுக்கு மாறாக நாம் காட்டக்கூடியவை, இவைபோலப் புராதனமானவை அல்லது இன்னும் அதிகம் புராதனமானவை என்று சொல்லக்கூடிய சீன நாகரிகமும் இந்திய நாகரிகமும் ஆகும். இவை கொண்ட வாழ்க்கை மதிப்பானது, தன்னலத்தை மறப்பதே பிரதானமாகவுள்ள பரோபகார மதிப்பைக் கொண்டவை; தங்கள் ஜீவன் நிறைந்த ஆற்றலையும் அழியாமைக்கும் அஹிம்சைக்கும் அடிப்படையான பண்புகளையும் இவை இன்று வரையில் தங்கள் வாழ்க்கையமைப்பில் வெளிப்படுத்தி வருகின்றன. இன்றைய லௌகிக வாழ்க்கையில் அதிகம் தோய்ந்த புத்திசாலிகள், கீழைநாடுகள் மதப் பித்தம் கொண்டிருக்கின்றன, மறுவுலகத்துக்கே திட்டம் போடுகின்றன என்று ஏளனம் செய்யலாம். இதைப்பற்றி வெட்கப்படுவதற்கு நியாயம் ஒன்றுமில்லை. ஏனெனில் இந்த அம்சம்தான் கேவலம் இரைதேடுகின்ற பிராணியிலிருந்து முன்னேற்றமுள்ள மனிதப் பிறவியை வேறு பிரித்துக் காட்டுகிறது. நம் முன்னோர் அழியாத ஒரு சமூகத்துக்கு அடிப்படை கோலினார்கள். கோலுவதற்கு எவ்வளவு சிறந்த தூரதிருஷ்டி பொருந்திய வாழ்க்கை

மதிப்பை அவர்கள் கருதியிருந்தார்கள் என்பதை இந்த இரண்டு நாகரிகங்களுடைய நித்தியமான பண்புகள் நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகின்றன. நாமும் அவர்களுடைய போக்கை ஒட்டி அழியாமை யும் அன்பும் பொருந்திய வழியில் சமூகத்தை நிர்மாணிப்பதானால், நம்முடைய வாழ்க்கை மதிப்புங்கூட புறநோக்கு உடையதாகவும் பரோபகார நோக்குடையதாகவும் இருக்க வேண்டுமேயன்றித் தற் போதைய தேவைக்கு மட்டும் பயன்படக் கூடியனவாக இருக்க முடியாது. மேலும் இப்போதைய அரசியல் நிலைமையானது அரசி யல் ஸ்தாபனங்களுக்கெல்லாம் ஒரு சோதனைக் காலம்; எதிர்காலத் துக்குத் திட்டம் போடுவதில் மிக்க சிந்தனை செலவாகிறது. இந்த நிலையில் நாம் எச்சரிக்கையா யிருக்கவேண்டும்.

ஆனால் இக்காலத்தைப் பிடித்த துரதிருஷ்டம், உலக அரங்கில் பிரதான பாத்திரமாக நடிக்கும் நாடுகள் பண மதிப்பு ஒன்றையே முக்கிய அளவுகோலாக உபயோகிக்கின்றன; ஆனால் இந்தப் பண மதிப்பின் பயனும் இதன் செல்வாக்கும் கணத்துக்குக்கணம் மாறிக் கொண்டு போகின்றன. "வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவேண்டும்", "தேச வருமானத்தைப் பெருக்கவேண்டும்", "உற்பத்திச் சக்தியை யும் வேலைத் திறனையும் பெருக்கவேண்டும்", "போட்டி நிறைந்த இன்றைய உலகத்தில் லாபம் பெறவேண்டும்" என்பன போன்ற எண்ணற்ற கவர்ச்சிகரமான கோஷங்கள் இப்போது ஏற்பட்டிருக் கின்றன. லாபம், விலை, வாங்கும் சக்தி, அன்னியநாட்டு வர்த்தகம் என்ற திடமற்ற சதுப்பு நிலத்தின்மேல்தான் இன்றைய பொருளா தார தத்துவம் நிறுவப் பெற்றிருக்கிறது. மற்றப் பிராணிவர்க்கத்தி லிருந்து மனிதனைத் தனியே பிரித்துக் காட்டவல்ல வாழ்க்கையின் அடிப்படையான தத்துவங்களில் யாரும் சிந்தனை செலுத்துவதில்லை. அல்லாமலும், உயர்வான மனிதத் தத்துவங்களையோ ஆன்மதத்து வங்களையோ குறிப்பிடுவது கூடக் கேவலம் என்று கருதுகிற அபாய கரமான போக்கு இன்று காணப்படுகிறது. ஆகவேதான் எச்சரிக்கை வேண்டியிருக்கிறது.

புராதனமான அரும்பெரும் கலைச் செல்வங்கள் பலவற்றை நாம் பெற்றிருக்கிறோம். தற்கால மதிப்பு முறையைக் கொண்டு இவற்றை மதிப்பிட்டுப் பார்த்தால் அந்தத் துறையில் இம்முறைகளை உபயோ கிப்பது எவ்வளவு முட்டாள்தனமானது என்பது விளங்கும்.

சீன தேசத்து மண் வட்டில்களில் அழகான சித்திரம் தீட்டப் பட்டிருக்கும். இப்படிப்பட்ட அபூர்வமான ஒரு வட்டிலைப் பார்த்து, "அடடா, இதைக் கையால் செய்வதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும்! ஒரே மாதத்தில் இப்படிப்பட்ட வட்டில்கள் நான் ஆயிரக்கணக்காகச்

செய்யமுடியும்" என்று மண்பாண்ட உற்பத்தி இலாகாவின் டைரக்டர் சொல்லக்கூடும்.

ஆனால் எழுத்துக்களையும் படங்களையும் லிதோகிராப் முறையில் ஒன்று நூறாக பெருக்க வல்லவர் குகைச் சித்திரங்களைப் பார்த்து விட்டு மற்றொருவிதம் சொல்வார். அஜந்தா குகைகளில் உலகத்திலே காண முடியாத அபூர்வமான வர்ண வேலைச் சித்திரங்கள் காணப்படுகின்றன. இவற்றைத் தீட்டுவதற்கு அனேக வருஷங்கள், ஏன் பல நூறு வருஷங்கள் கூட ஆகியிருக்கும். ஆனால் மேற்கூறிய லிதோ நிபுணர் சிலவாரத்தில் இப்படிப்பட்ட ஒப்பற்றசித்திரங்களை ஆயிரக்கணக்கில் செய்து தருவேன் என்றும் சொல்லக்கூடும்.

சாலிமார் தோட்டங்களில் வளமான அனேக ஏக்கரா நிலம் இருக்கிறது. இதை வேர்க்கடலை பயிரிட உபயோகித்தால் ஆயிரக் கணக்கான மூட்டைகள் பயிரிடலாமே என்று எண்ணெய் விதை வியாபாரி அங்கலாய்ப்பார்.

நம் நாட்டுப் பழைய நூல்கள் எத்தனையோ பிரிவான வேதாந்தக் கருத்துக்களை எடுத்துக் கூறுகின்றன. அழியாத நாகரிகங்கள் பலவற்றை இவை உருவாக்கியிருக்கின்றன. பனையோலையில் எழுத்தாணி கொண்டு எழுதப்பெற்றுள்ள இந்தப் பண்டை நூல்களைப் பார்த்து, இவ்வளவு மட்டமான ஏட்டில் இவை எழுதப்பெற்றுள்ளனவே என்று நூல் வெளியீட்டாளர் இதைப் பரிகசிப்பர். நல்ல பாண்டு காகிதத்தில் அச்சிட்டுப் புத்தகம் ஒன்று ஐந்து ரூபா விலைக்குக் கொடுக்க முன்வருவதாகவும் அவர் முன்வருவார்.

ஹோட்டல்களில் உபயோகிக்கிற மேஜைக்குச் சலவைக்கல் ஒப்பந்தம் செய்கிற வியாபாரி ஆக்ராவில் தாஜ்மஹால் கட்ட எவ்வளவு சலவைக்கல் வீணாயிற்றே என்று வருத்தப்படுவார். அது கட்டுவதற்குப் பல்லாயிரம் டன் சலவைக்கல் உபயோகப்பட்டிருக்கிறது. அதிலிருந்து எத்தனை மேஜைகள் செய்யலாம் என்று அவர் கணக்கிடக்கூடும்.

எல்லோராவில் மலைகளைக் குடைந்து மூன்றடுக்குக் கோயில்கள் அமைக்கப் பெற்றுள்ளன. தூண்களில் இணையற்ற சிற்ப வேலை காணப்படுகிறது. சிமெண்ட், கான்கிரீட் வேலைகளில் கைதேர்ந்த நியுயார்க் கட்டிட நிபுணர் இவற்றைப் பார்த்தால் எவ்வளவு காலம் இக்கோயில் செய்வதில் வீணாய்ப் போயிற்று என்று துக்கப்படுவார். சிற்ப வேலைக்கென்று இந்தப் பாறைகளைத் தேர்ந்தெடுத்த நம் முன்னோருக்கு சிற்பத் திறனோடு கூட தரைநூல் அறிவும் இவற்றைச் செய்யத் தேவையான ஆழ்ந்த பக்தியும் எவ்வளவு அதிகம் இருந்தன என்பதை அவர் ஒருபோதும் உணரமாட்டார். நியுயார்க் நகரத்தில்

60 மாடிக் கட்டிடங்களெல்லாம் காணப்படுகின்றன. இவை மண்ணெண்ணெய்த் தகரத்தை ஒன்றின் மேல் ஒன்ருக வானமளாவி அடுக்கி வைத்ததைப் போலத் தோற்றும். நம் குகைக் கோயில் ஒன்றை நிர்மாணிக்க ஆன நேரத்தில் மிகச் சிறுபாகம் கூட இவற்றுக்கு ஆகியிருக்காது. ஒரு வேளை அவர் இந்தக் கோயில்களுக்கு ஆன செலவில், எல்லோரா கைலாசநாதர் கோயிலின் உருவம் ஒன்றை அப்படியே அச்செடுத்து மூன்று மாதத்தில் செய்து முடிப்பதாகவும் இவர் சொல்லக்கூடும்.

சேவாக்கிராமத்துக்குப் போகிற பந்தயக் குதிரை வியாபாரி மகாத்மா காந்தியை மதிப்பிடுவதற்காக அவர் வாயைப் பிளந்து பல்லைப் பார்க்கிருர். அங்கே பல்லைக் காணவில்லை. ஆகவே வயதாகி விட்டது, பிரயோசனமில்லையென்று அந்த வியாபாரி, சாகப்போகிற பிராணிகளைப் பாதுகாத்து வைத்திருக்கிற தருமசாலைக்கு அவரைப் போகச் சொல்வார்.

தட்டார் ஒருவர் ரோஜாத் தோட்டத்துக்குப் போகிருர். உரை கல்லில் உரைத்துப் பார்ப்பதுதான் அவருக்குத் தெரிந்த மதிப்பு முறை. ஆகவே ரோஜா இதழையும் உரைத்துப் பார்க்கிருர். மேற்சொன்ன மதிப்பு முறைகள் யாவும் இதேபோல முட்டாள்தனமானவையே. இவற்றில், ஒரு வாழ்க்கைக்குப் பொருந்தமான மதிப்பு முறையை மற்ருென்றுக்குப் பிரயோகித்துப் பார்த்தமையால் மேற்சொன்ன கேலிக்கிடமான நிலைமைகள் ஏற்பட்டன. குதிரை வியாபாரியோ பிடுங்கித் தின்னும் வாழ்க்கை முறையைப் பின்பற்றுபவர். இந்த முறையின் அளவுகோல்தான் இவருக்குத் தெரியும். இதை இவர் சேவை முறை என்கிற அளவுகோல் கொண்டு அளக்க வேண்டிய ஒருவருக்குப் பிரயோகம் பண்ணுகிருர். ஆகவேதான் மேற்சொன்ன விபரீத நிலைமை விளைந்தது.

மேலே காட்டியவை இவ்வளவு நகைப்புக்கிடமாய் இருத்தலால் வாஸ்தவமாக இருக்க முடியாதென்று நாம் ஒருவேளை எண்ணக்கூடும். உண்மை வேறு. வாழ்க்கையில் அனேகர் இவ்வித மதிப்பு முறையைக் கடைப்பிடிக்கிருர்கள்; அறிவில்லாத தொழில்காரர் அல்ல, உலகத்தில் புகழ்பெற்ற சர்வகலாசாலையிலிருந்து வெளிப்படும் பண்டிதர்கள். சர்வகலாசாலைகள் இப்படிப்பட்ட வெறும் பேச்சுக்காரர்களின் பிறப்பிடமாய் இருக்கின்றன. கொலை வாழ்க்கை, கொள்ளை வாழ்க்கை, முயற்சி வாழ்க்கை என்ற முதல் மூன்று முறைகளைச் சேர்ந்தவர்களான தற்கால யந்திர முதலாளிகளின் வேலையை அறிவுக்குப் பொருத்தமென்று காட்டுவதும் அதற்கு ஆதரவு தருவதுமே இப்பண்டிதர்களின் வேலை.

இவர்கள் எந்தப் பிரசினையையும், "இதனுல் லாபமென்ன ?" என்ற பொதுவான கேள்வியை வைத்தே சோதிக்கிருர்கள். தாய் ஒருத்தி தன் குழந்தைகளுக்காக வீட்டில் கலப்பில்லாத சுத்தமான நெய்யில் ஹல்வா கிண்டுகிருள். அவளிடம் இந்தப் பிரகஸ்பதி பண்டிதர் போய், "சுத்த நெய்யுடன் தாவர நெய்யைக் கலந்து செய்யாவிட்டால், செலவு அதிகமாகுமே, கடையில் விற்கும் பொருளுடன் போட்டி போடுவது சாத்தியமா?" என்று கேட்பார். ஹல்வா செய்வதற்கான செலவைக் கணக்கிடும்போது, அதற்கென்று தாய் செலவிட்ட நேரத்தின் கூலி மதிப்பையும் சேர்த்துக் கொள்ளச் சொல்வார். கணக்கு மிகவும் திட்டமாயும் திருத்தமாயும் இருக்க வேண்டும் என்ருல், இம்மதிப்பையும் கூட்டியாக வேண்டும் என்பது அவர் கூற்று. இவ்விதம் கணக்கிட்ட விலையைக் கடை விலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கச் சொல்லுவார். பாவம், தாய் என்ன சொல்வாள் ? "கடை என்ருல் எங்கேயிருக்கிறது ? கடை விலை என்ருல் என்ன ? குழந்தை தின்னத்தான் நான் பட்சணம் பண்ணுகிறேன். குழந்தைக்குச் சுத்தமான நெய் வேண்டாமா ? கடை விலையைப் பற்றியும் ஒரு சேருக்கு எவ்வளவு அடக்கம் என்பது பற்றியும் எனக்குக் கவலை இல்லை. என் உழைப்புக்குக் கூலி கேட்க முடியுமா ? என் குடும்ப க்ஷேமத்துக்காக என் வாழ்நாள் முழுமையும் நான் செலவிடவில்லையா ?" என்றே அவள் கேட்பாள். ஆனுல் நம் பண்டிதரோ, "பேதையான இந்தப் பட்டிக்காட்டு ஸ்திரீக்குப் பொருளாதார சாஸ்திரத்தில் அ, ஆ கூடத் தெரியவில்லையே !" என்று அங்கலாய்ப்பார்.

வீட்டில் நிலவுவது சேவை வாழ்க்கையின் தத்துவம். இந்த வாழ்க்கையுடைய தாயானவள் தன் செய்கையைச் சேவைத் தத்துவத்தை வைத்தே அளந்து பார்க்கிருள். ஆனுல் நம் பண்டிதரோ, கொலை வாழ்க்கையின் தத்துவத்தை இங்குப் பொருத்திப் பார்க்கிருர். சூழ்நிலையைச் சிறிதும் உணராமல், சோதனைச் சாலையிலிருப்பது போல, மற்றெல்லா அம்சங்களையும் விலக்கிவிட்டு, குறிப்பிட்ட ஒரு தத்துவத்தை மட்டுமே ஆராய்கிற முறையில் அவருக்குப் பழக்கம். அது மூளைக்கு எவ்வளவுதான் சிறந்த பயிற்சியாயிருந்த போதிலும், சோதனைச்சாலை போன்ற செயற்கையான சிக்கலற்ற சூழ்நிலை இல்லாத வெளியுலகத்தை அளக்க அவருக்குத் தகுதியில்லை.

மற்றொருவர் பௌதிக சாஸ்திர பண்டிதர். பௌதிக சாஸ்திரத்தின் சகல தத்துவங்களையும் தம்முடைய உபகரணம் நிறைந்த சோதனைச்சாலையில் செயற்கையான நிலையில் சோதித்துப் பார்த்து முடிவு கண்டவர். வானத்திலிருந்து பூமியை நோக்கி விழும் எந்தப்

பொருளும்—கனத்த இரும்பாயினும் சரி, லேசான காகிதமாயினும் சரி—ஒரே வேகத்தோடுதான்—அதாவது வினடிக்கு 32 அடி வீதம் என்ற வேகத்தோடு—விழுகின்றது என்று சொல்லக்கூடும். ஆனல் பள்ளிக்கூடத்தில் படிக்கிற எந்தச் சிறு பையனும் இவர் கூறுவது பிழை என்று இவருடன் சண்டைக்குப் போவான். அவன் சொல்வான் : "சரிதானய்யா, நீங்கள் பேசுகிற காரியம் உங்களுக்குத் தெரியாது. நான் கிணற்றில் கல்லைப் போட்டுத் தண்ணீரைத் தொடுகிற வரையில் பார்த்திருக்கிறேன், காகிதத்தையும் கிழித்துப் போட்டுப் பார்த்திருக்கிறேன். கல்லோ, நேரே விழுந்து தண்ணீருக்குள் போய்விடுகிறது. காகிதத்துண்டு நேரே விழுவதில்லை ; பறக்கிறது. சில சமயம் கிணற்றுக்கு வெளியில் கூட வந்துவிடுகிறது. காகிதத்தால் நான் பட்டம் செய்து விடுவேன். அது பறந்து கண்ணுக்குப் புலப்படாத தூரம் போகும். இரும்பினல் பட்டம் விடமுடியுமா?" என்று கேட்பான்.

செயற்கையான சோதனைச்சாலையின் சூழ்நிலையில் இந்த ஆசிரியர் கூறும் அபிப்பிராயம் சரியானதுதான். அங்கு காற்றின் தடையில்லாத ஏற்பாடு இருக்கிறது. அதனல் இந்தப் பையன் கூறும் வார்த்தைகள் சிக்கலான அமைப்புடைய வெளியுலகத்தில் பிறந்தவை. எந்தப் பிரசினையை ஆராய்ந்தாலும் அதில் நூற்றெட்டு விதமான தன்மைகள் சம்பந்தப்படுகின்றன. முடிவு செய்வதற்கு முன் இவை அனைத்தையும் நாம் கவனித்து அறிவது அவசியம். பல சமயங்களில் வெளியே புலப்படாத மதிப்புக்களே சாஸ்வதமாக இருக்கின்றன. மிகவும் நன்ருய்த் தெரிய வருகிற பண மதிப்புப் போன்றவை வேறு நோக்குடன் பார்க்கும்போது முக்கியமல்லாமல் போகின்றன.

விலை விவகாரம் என்பதுதான் ஒரு பொருளின் உற்பத்தியையும் அதற்குள்ள கிராக்கியையும் நிர்ணயிப்பது என்று பொருளாதார பண்டிதர் சொல்லக்கூடும். சாமான் மலிவானல் கிராக்கி அதிகம் என்று அவர் சொல்வார். எப்போதுமே இப்படித்தான என்ன ? வெளி உலகத்தில் "பொருளாதார மனிதன்" என்பவன் இல்லை. புடவை வாங்கக் கடைக்குப் போகிற பெண் எது மலிவு என்று மட்டும் பார்ப்பதில்லை. புடவையின் வர்ணம், நெசவு முதலியவற்றைக் கவனித்து, விலை மலிவைக் கவனிக்காமல் தன் மனத்துக்குப் பிடித்ததை எடுத்துக் கொள்ளுகிருள். அதே போல ஒரு ராஜாவானவர் தான் கழுத்தில் கட்டிக்கொண்டிருக்கும் நெக்டை என்னும் கழுத்துப் பட்டியைப் போல மற்ற யாரும் கட்டிக்கொள்ளக் கூடாது என்று எண்ணினல், கடைத்தெருவில் உள்ள அதே மாதிரியான எல்லாப் பட்டிகளையும் வாங்கி வைத்துவிடலாம். அது போல,

கடைத்தெருவில் புதுமாதிரியான மண்ணெண்ணெய் விளக்குக்குப் பதிலாக மலிவாக எரிக்கக் கூடிய தாவர எண்ணெய் விளக்கு ஏதாவது புதிதாக ஒருவர் செய்து விற்பனைக்குக் கொண்டு வந்தால், பெட்ரோல் கம்பெனிக்காரர்கள் அவசியமானல் அதற்கு ஏராள விலை கொடுத்தாகிலும் அந்த விளக்குச் செய்வதற்கான பேடண்ட் உரிமையைத் தாங்களே வாங்கி வைத்துக் கொள்வார்கள். காரணம், அந்த விளக்கு வந்தால் தங்கள் மண்ணெண்ணெய்க்குக் கிராக்கி இருக்காது என்பதுதான். ஆகவே பொருளாதாரத் துறையில் சாஸ்திரோக்தமான அளவுகோல் என்பதில் இப்படிப்பட்ட மாறுதல்கள் இருப்பதனல், அவற்றை அப்படியே பூரணமாக ஒப்புக்கொள்ள முடியாது.

மேலும், இந்த அளவையானது குறிப்பிட்ட விஷயத்துக்கு மட்டும் அல்லாமல் வாழ்க்கை முழுவதற்குமே பொருந்தத்தக்கதாக இருக்கவேண்டும். மேலைநாட்டு முறையில் உடை உடுப்பவர் மில்துணி கெஜம் 12 அணு விற்கும்போது கதர்த் துணிக்கு ஒரு ரூபாய் கொடுப்பது அதிகம் என்று எண்ணலாம். இங்கு விலை மதிப்பிடும்போது அவர் விலைக்கான சூழ்நிலையைக் கவனிக்கவில்லை. கதர் அன்பர், கிராமத்தவராய் இருக்கும் பட்சத்தில், அவர் தாமே தமக்கு வேண்டிய பருத்தியைப் பயிரிட்டுப் பருத்தியை எடுத்திருப்பார். அதைச் சுத்தம் செய்து பஞ்சரைத்துப் பட்டைபோட்டு நூற்றிருப்பார். தம் ஊரிலுள்ள ஒரு நெசவுகாரரிடம் கொடுத்து அதைத் துணியாக்கியும் இருப்பார். கிராம வாழ்க்கைக்குப் பொருத்தமான எவ்விதக் காரியங்களையும் அவரே செய்து கொள்வார். தம் துணியைத் தாமே வெளுப்பார். நாற்காலி தேடாமல் தரையிலேயே உட்காருவார். மற்றக் காரியங்களையும் அது போலவே செய்வார். இவை எல்லாம் சரியல்ல என்று சொல்லுபவர், தேர்ச்சி உடைய தையல்காரன் தமக்கு வேண்டிய உடையைத் தைப்பதற்கு அதிகமான கூலி கொடுக்க வேண்டியிருக்கும். காலை மடித்துத் தரையில் உட்கார்ந்தால் கால் சட்டை கசங்கிப் போய்விடுமாதலால், அவருக்கு உட்கார நாற்காலி வேண்டியிருக்கிறது. மற்றவரை உட்காரச் சொல்லவும் நாற்காலி வேண்டியிருக்கிறது. வேலை செய்ய மேஜை வேண்டியிருக்கிறது. இவ்விதம் அவர் வாழும் முறையே எளிமை குன்றிச் செலவு மிகுந்ததாக ஆகிறது. இவற்றை எண்ணிப் பார்க்கும்போது கதருக்கு மில்துணியை விடக் கொஞ்சம் பணம் கொடுத்தால், மற்றச் சமூக நன்மைகள் ஒருபுற மிருக்க, செலவு அதிகம் என்று எப்படிச் சொல்ல முடியும்? அதனதன் நிலைமையை விட்டு ஒரு செலவை மட்டும் தனியே பிரித்தெடுத்து மற்றென்றேடு ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. ஒவ்வொரு

வாழ்க்கை முறையின் அடிப்படை முழுமையும் ஒன்ருகவே தொகுத்துப் பார்க்கவேண்டும்.

இதுவரை சாமானை வாங்குபவர் உபயோகிப்பவருடைய நிலைமையை ஒட்டி மதிப்பு முறையை ஆராய்ந்தோம்.

யந்திர உலகத்தில் கிராமக் கைத்தொழில் இருக்க முடியாதே என்று அனேகர் கேட்கிருர்கள். இந்தக் கேள்வியைப் பின்னேர் சந்தர்ப்பத்தில் விரிவாக ஆராய்வோம். ஆனல் கிராமக் கைத்தொழில் அல்லது குடிசைத்தொழில் என்று சொல்லும்போது இது வெறும் உற்பத்தி முறை மட்டும் அல்ல: ஒரு புதிய வாழ்வின் வகையே ஆகும் என்பதை உணரவேண்டும். யந்திர உற்பத்தி என்பது மற்ருெரு விதமான வாழ்வு முறையின் அங்கம். அது போல இதுவும் ஒருவிதமான வாழ்வு முறையின் பிரிவுபடாத அங்கமாகும். மேற்குறிப்பிட்ட கேள்வியை வேறுவிதமாகவும் சொல்லலாம். "எவ்விதமான வாழ்வு முறை நல்லது?" இதற்கு விடை சொல்வதானல் அது நம்முடைய நோக்கங்கள் யாவை என்பதைப் பொறுத்திருக்கும். இதன் பொருளாவது, வாழ்க்கையில் நாம் கொள்ளும் மதிப்பு முறைகள் எத்தகையன என்பதே. ஆதலால், மக்கள் வாழ்வின் முன்னேற்றம் என்ற ரதத்தை மதிப்பு மதிப்பிடுதல் என்ற இரு குதிரைகள் இழுத்துச் செல்லுகின்றன. இன்னும் அலசிப் பார்த்தால் இவைகளே நாம் செல்லவேண்டிய திக்கையும் நிர்ணயிக்கின்றன. அழிவற்றதும் அகிம்சா பூர்வமானதுமான வாழ்வை நாம் நாடுகிருேமா, அழியப்போவதும் ஹிம்சை நிறைந்ததுமான வாழ்வை நாடுகிருேமா என்பதை இவைகளே காட்டும். ஆதலால் இவ்விரண்டையும் பற்றி நாம் மிகவும் தெளிவான அபிப்பிராயம் கொள்ளவேண்டும். நம்முடைய மதிப்பு முறையிலும் நோக்கத்திலும் குழப்பமிருந்தால் முடிவில் நாசம்தான்.

திருவாங்கூர் சமஸ்தானத்தில் தாழை ஓலையைக் கிழித்து மிருதுவான அழகு பொருந்திய வெண்ணிறப் பாய் செய்கிருர்கள். அந்த நாட்டில் ஒவ்வொரு சிறு வீடும் தனக்குரிய சொந்தமான தோட்டத்தின் மத்தியிலிருக்கிறது. அதைச் சுற்றித் தாழ்ந்த மண் சுவர், சுவரின் மேல் தாழை வளர்கிறது. அங்கு நான் போயிருந்தபோது இந்தப் பாய் செய்திருந்ததைக் கவனித்தேன். அந்தக் கிராமத்தில் பாய் முடைபவர்களில் தலைமையானவர் ஒரு முஸ்லிம். பாய் முடையும் வேலையை அவர் எங்களுக்குக் காட்டினர். இந்த வேலையில் குடும்பத்திலுள்ள ஆடவர், பெண்டிர், குழந்தைகள் அனைவரும் ஈடுபட்டார்கள். அங்கிருந்து அவர் இவ்வேலை நடந்த பல வீடுகளை எங்களுக்குக் காட்டினர். எங்களோடு அவர் சுற்றி வந்தபோதெல்

லாம் ஒரே கேள்வியைக் கேட்டுக்கொண்டு வந்தார். "எங்கள் முன்னோர் இதே பாய்த் தொழில்தான் செய்து வந்தார்கள். தொழில் நன்றாய் அப்போது செழித்திருந்தது. மாடி வீடுகளெல்லாம் அவர்கள் கட்டினார்கள். அவர்களுக்குப் பின் வந்தவர்களாகிய எங்கள் காலத்தில் இத்தொழில் மிகவும் நசித்துப்போய், அவர்கள் கட்டின வீட்டைப் பழுதுபார்க்கக்கூட எங்களால் முடியவில்லை. இது ஏன் ?" இந்தப் பல்லவியை அவர் பாடிக் கொண்டேயிருந்தார்.

நடுப்பகலாயிற்று. காட்டவேண்டியதெல்லாம் காட்டிய பின் சாப்பிட அழைத்தார். என்னுடன் வந்தவர்களில் இருவர் பிராமணர். சாப்பிட அவர்களும் வருவார்களா என்று கேட்டேன். சாப்பாடு சைவ உணவாய் இருக்கும் பட்சத்தில் தங்களுக்கு ஆட்சேபம் இல்லை என்றார்கள். இதை எங்கள் நண்பரிடம் சொன்னேன். அதற்கு அவர், மாமிச உணவு தமக்கு விருப்பமானதென்றாலும் தாம் மிகுந்த ஏழையாதலால் தமக்கு மாமிசம் உண்ணுவது கட்டாது என்றும் எப்போதும் சைவ உணவேதான் உண்கிறார் என்றும் அவர் கூறினார். மேலும், நாங்கள் வருவதாக அவருக்கு முன்னதாய்த் தெரிவிக்கவில்லை, ஆதலால் வீட்டிலுள்ள எளிய உணவைத்தான் நாங்கள் உண்ணவேண்டியிருக்குமென்று அவர் சொன்னார். வெறுஞ் சாதமும் பருப்பும் ஊறுகாயுந்தானிருக்குமென்றும் அதை நாங்கள் உண்ண இசைந்தால் அவருக்கு மிகவும் மகிழ்ச்சி என்றும் அவர் சொன்னார். அவருடைய பிடிவாதத்தால் நாங்கள் இசைந்தோம். பசி இல்லாவிட்டாலும்கூடத் தம்முடைய வீட்டில் அவர் எவ்விதம் வாழ்ந்தார் என்று அறிவதே எங்கள் நோக்கமாதலால், அவர் வீட்டுக்குச் சென்றோம்.

நாங்கள் கைகால் அலம்பியபோது சாப்பிட உட்காருவதற்காகத் தாழ்வாரத்தில் ஏற்பாடு செய்தார். பாய்த் தொழிலின் அழிவைப் பற்றியே அவர் எந்நேரமும் பேசிக்கொண்டிருந்தார். அவருக்கு என்ன பதில் சொல்வது என்று மிகவும் யோசித்துக்கொண்டிருந்தேன். அந்த நேரம் அவர் எங்களை உட்காரச் சொன்னார். நான் பிரதான விருந்தினன் ஆதலால், நடுவில் இடமளித்தார். நண்பர் இருபுறமும் அமர்ந்தார்கள். அவர்களுக்குத் தாழம்பாய் ஆசனமிடப்பட்டிருந்தது. ஆனால் எனக்கோ வேறுவகை ஆசனம்.

எனக்கிட்டிருந்த ஆசனத்தைப் பார்த்த மாத்திரத்தில் நான் சொன்னேன்: "உம்முடைய பாய்த் தொழில் ஏன் க்ஷீணமடைந்திருக்கிறது என்று எனக்கு இப்போது புரிகிறது. வாழ்க்கையில் நீங்கள் வைக்கிற மதிப்பில்தான் குறைபாடு இருக்கிறது" என்றேன். இதை அவர் விளக்கிக் கூறும்படி கேட்டார்.

“ இந்த நண்பர்களுக்கு இட்ட ஆசனம் எங்கிருந்து கிடைத்தது ?” என்று நான் அவரைக் கேட்டேன்.

“ இந்தக் கைகளால் அவற்றை நானே செய்தேன் ” என்ருர் அந்த வியாபாரி.

பிறகு, “எனக்கென்று விசேஷப் பாய் விரித்திருக்கிறீரே! இதில் புலி போட்டிருக்கிறது. இது ஏது ?” என்றேன்.

“ இது ஜப்பான் பாய். கடையில் வாங்கினேன்.”

பின்னர் அவருக்கு நான் விளக்கிச் சொன்னேன் : “ ஐயா, என்னை நீங்கள் முக்கிய விருந்தினனுகப் பாவித்து, ஜப்பான் பாய் ஆசனம் விரித்தீர்கள். இதனுல் என்னைக் கௌரவித்ததாக எண்ணிக்கொண்டீர்கள். மற்ற நண்பர்களுக்கு உங்கள் கையால் நெய்த பாயை விரித்தீர்கள். உங்கள் பாயைவிட ஜப்பான் பாய் உயர்வென்று நீங்களே மதிக்கிறீர்கள். இப்படியிருக்க, பிறர் அப்படி மதிப்பதில் என்ன தவறு ? அன்னியச் சாமானே உயர்வு என்று உங்களைப்போல் அனேகர் மதிக்கத் தொடங்கிவிடும் பட்சத்தில், இங்கேயே தயாராகிற தாழம்பாயை அவர்கள் வாங்குவதும் நின்று போகும். உங்களிடம் பாய் வாங்கினவர்கள் எல்லாரும் இப்படி மாறிவிடும்போது, உங்கள் தொழில் எப்படிச் செழிக்கும் ? உங்கள் தொழிலை அழிக்கிற பிரதான குற்றவாளி நீங்களே அல்லவா ?” என்று நான் கேட்டேன்.




அன்னியப் பொருள்கள் உபயோகிப்பதால் நம்மவர்கள் வேலையில்லாமல் திண்டாடுகிருர்கள். [விளம்பரத்தில், எல்லாம் பிரிட்டிஷ் சரக்கு, ஜப்பான் சரக்கு என்று எழுதியிருக்கிறது.]

கூப்பிய கையோடு, நான் கூறியது சரி என்று அவர் ஒப்புக் கொண்டார் ; உடனே அந்த ஜப்பானியப் பாயைச் சுருட்டிவிட்டுத் தாம் செய்த பாய் ஒன்றை விரித்தார்.

நாடு முழுமையும் நடைபெறும் கேட்டுக்கு இது ஒரு சிறிய உதாரணம். பொருள்களைச் சீர்தூக்க நாம் உபயோகிக்கும் அளவு கோல்கள் போதுமான விரிவுடையனவாயில்லை. பல சமயம் விலை மலிவாயிருக்கிறதே என்பதொன்றைமட்டும் கவனித்து நாம் மயங்கி விடுகிறோம் : இப்படிக் குறுகிய நோக்கோடு நாம் செய்யும் முடிவி னால் சமூக அமைப்பிலும் பொருளாதார அமைப்பிலும் ஏற்படுகிற பெரும் கேடுகளை அப்போது நாம் கவனிப்பதில்லை. நம் அயலவர் உற்பத்தி செய்யும் பொருளுக்குரிய மதிப்பு முழு மையும் அதன் பணமதிப்பாகிய விலையில் வெளிப்பட வில்லை. கருத வேண்டிய எல்லா மதிப்புக்களுள்ளும் பணமதிப்புத் தான் பெரும்பான்மையும் முக்கியத்தில் குறைந்தது. ஆயினும், நம்முடைய விவகாரத்தில் முடிவு ஏற்படக் காரணமாயிருப்பது பெரும்பாலும் பணம்தான். இவ்விதம் பணமதிப்பு ஒன்றையே கருதுவது நம் சமூக அமைப்பின் அங்கங்கள் அனைத்தையும் சித றுண்டுபோகச் செய்து எங்கும் நாசத்தையே விளைவிக்கும். சமூக ரீதியாக நமக்கு இருக்கவேண்டிய தூரதிருஷ்டியைப் பணமதிப்பு மறைக்கிறது. இதனால் மனிதன் மரத்தின் நுனிக்கிளையில் நின்று கொண்டு அடிக்கிளையை வெட்டுபவனாகிறான். தன்னுடைய வீழ்ச் சியையும், நாசத்தையும் அவன் தானே தேடுபவனாகிறான். நிலையான வாழ்வு தரவல்லதாகிய வரையறையில்லாத நீண்டகால நோக் குடைய திட்டம் வேண்டுமானால், அதற்குக் குறிப்பிட்ட பிரசினைக் குத் தற்போதைய பரிகாரம் என்ன என்று பார்த்தால்மட்டும் போதாது. அதைத்தொடர்ந்து பின்னால் நிலையாக என்ன விளைவுகள் ஏற்படும் என்பதையும் ஆராய்ந்தாக வேண்டும். தனி ஒருவர் செய் கிற எந்தச் செயலும் தனித்து விவகாரமாக நின்று போவதில்லை. அதன் விளைவுகள் சமூகம் முழுமையும் ஊடுருவிக் காணப்படுகின் றன. அவற்றைக் கூர்ந்து காண்பதற்கு நம்மில் பலர் நம் பார்வை யைப் பழக்கிக் கொள்ளவில்லை என்பதுதான் குறை.

ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் காரியதரிசி ஒருவர் சங்க அங்கத் தினர்களைத் தேனீ வளர்க்கச் செய்து அதனால் அவர்கள் பெற்ற நன்மையை விவரித்துச் சொல்லிக்கொண்டு வந்தார். பழைய மண் பானைகளை வைத்து, எளிய முறையில் சுமார் 30 தேன்கூடு வரையில் அங்கு தயாரித்து வைத்திருந்தார்கள். அவர் இவற்றை எனக்குப் பெருமையோடு காட்டினார். தேனீக்கள் சுறுசுறுப்பாக வேலை செய்

தன. குறிப்பிட்ட அந்தத் தேனீப் பண்ணையின் சொந்தக்காரர் நூற்றுக்கணக்கான பவுண்டு எடையுள்ள தேன் எடுத்துச் சங்கத்தின் மூலம் விற்பனைக்கு அனுப்பியிருந்தார். இந்தச் சாதனை எல்லாம் பார்த்து இதனால் வந்த பண லாபத்தையும் நான் தெரிந்துகொண்டேன். அந்த நேரம் அத் தேனீப் பண்ணைக்கு உரியவரின் மகள், ஒரு சிறுபெண், அங்கு ஓடிவந்தாள். "இந்தத் தேனீக்கள் இவ்வளவு சுறு சுறுப்பாக என்ன செய்கின்றன?" என்று நான் அவளைக்கேட்டேன். "இவை தேன் சேகரிக்கின்றன" என்று அவள் பதில் சொன்னாள். "உனக்குத் தேன் பிடிக்குமா" என்று கேட்டேன். அவள் என்னைப் பார்த்து விழித்தாள். என்னுடைய கேள்வி ஒருவேளை புரியவில்லையோ என்று எண்ணி, "தேன் இனிப்பாய் இருக்கும் அல்லவா?" என்று அவளைக் கேட்டேன். "அது எப்படியிருக்குமென்று எனக்குத் தெரியாது" என்று அவள் பதில் சொன்னாள். தந்தை பக்கத்தில் இருந்தார். "குழந்தைகளுக்கு நீர் தேன் கொடுப்பதில்லையா?" என்று கேட்டேன். "சங்கத்தில் தேன் ஒரு ராத்தல் ஒரு ரூபா விலை விற்கிறதே! வீட்டில் தேனை உபயோகிக்க எனக்குக் கட்டுமா?" என்று அவர் பதில் சொன்னார். சங்கத்தைப் பற்றி நான் கொண்ட பெருமை எல்லாம் பறந்து போயிற்று. சங்கத்தின் காரியதரிசியைப் பார்த்து, "இந்தக் குழந்தை தேனை ருசி பார்த்ததில்லை. இந்த நிலையில் நீர் தேன் வியாபாரம் பண்ணுவது வெட்கக்கேடானது. அதிக விலையைக் காட்டி இந்தக் குழந்தை உண்ண வேண்டிய தேனைப் பறித்துக்கொண்டுபோய் ஏற்கெனவே வயிறு நிறைந்திருக்கும் பணக்காரர் வயிற்றில் கொட்டுகிறீர்" என்று நான் சொன்னேன்.

எங்கு பார்த்தாலும் இதே கதைதான். சத்து நிறைந்த உணவுப் பொருள்களான கோழிமுட்டை பால் முதலியவற்றின் நிலைமையும் இப்படியே. வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் முன்னொரு காலத்தில் கோழிமுட்டை ஏராளமாக உற்பத்தியாகி அந்த மக்களே இவற்றை உபயோகித்தும் வந்தார்கள். ஆனால் சமீபத்தில் ராவல்பிண்டி, குவெட்டா, அம்பாலா முதலிய இடங்களில் உள்ள ராணுவ அதிகாரிகள் இவற்றை வாங்க ஆரம்பித்தபின், இங்கு மக்கள் கோழிமுட்டையை உபயோகிப்பது மிகவும் குறைந்து போயிற்று.

உயர்ந்த தத்துவங்களை உணர்ந்து போற்றும் தகுதியைப் பண மதிப்பானது மரத்துப் போகச் செய்கிறது. இதனால் ஒருவருக்கு லாபமாயும் மற்றவருக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டமாயும் உள்ள விவகாரங்கள் ஏற்படுகின்றன. சென்ற அத்தியாயத்தில் லட்டுத் தின்ற



கிராமத்தில் உற்பத்தியாகும் பாலைக் குழந்தைகளுக்குக் கொடுக்காமல் பட்டணத்தில் விற்பனைக்காகக் கொண்டுபோகும் காட்சி

பையனை இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். மேற்கூறியபடி உபரியாய் உள்ளதை உபயோகிப்பதற்குப் பதிலாக, இந்தப் பண மதிப்பானது ஜீவாதாரமாய் உள்ளதை எடுத்துச் செலவிடுகிறது. இதனால் சமூகரீதியாகப் பெருத்த நஷ்டம் விளைகிறது. இந்த நஷ்டத்தைச் சம்பந்தப்பட்டவர்கள் தற்போதைக்கு உணர்வதில்லை. 1943 ஆம் வருஷத்தில் ஏற்பட்ட பயங்கரமான வங்காளப் பஞ்சத்துக்கு அடிப்படையில் காரணமாயிருந்தது இந்தப் பண மதிப்புமுறையாகும். இந்த முறையானது வங்காளத்தில் பட்டினியால் வாடின ஏழை மக்களிடம் மதிப்பில்லாத வெறும் காகித நோட்டைக் கொடுத்து விட்டு அவர்களுடைய ஜீவனுக்கே ஆதாரமான பொருள்களைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டது. இதை அவர்கள் அச்சமயம் உணரவும் முடியவில்லை. அந்தக் காகித நோட்டுகளுக்கு ஈடாக லண்டன் நகரத்

தில் அப்போது நாணயம் வைத்திருந்தார்கள். அந்த நாணயமும் செலாவணிக்கு வராமல் தடுக்கப்பட்டிருந்தது. இந்தப் பெருங் கொடுமையை நாம் ஞாபகத்தில் இருத்தி அதனல் வரும் படிப் பிணயை நாம் கற்க வேண்டும்; வாழ்க்கை மதிப்புக்களை அளவிடுவ தற்குப் பணத்தைவிட இன்னும் முக்கியமான, ஜீவாதாரமான மதிப் புக்கள் இருக்கின்றன என்பதை நாம் அடிக்கடி ஞாபகத்துக்குக் கொண்டுவர வேண்டும்.

## அத்தியாயம் 10

### வாழ்வு, ஜீவனம், காலம் தள்ளுதல்

வாழ்க்கைக்கு ஏதேனும் பொருள் உண்டா? வாழ்வு என்ருல் என்ன அர்த்தம்? எதை வாழ்வு என்று சொல்லுகிருேம்? வெறும் காலம் தள்ளுதலையா?

மனிதனுக்கும் மிகத் தாழ்ந்த நிலையில் உள்ள பிராணி வர்க்கங்களுக்கும் இடையில் உள்ள வேற்றுமை சுய இச்சை உடைமைதான் என்பதை முன்னமே பார்த்தோம். ஆகவே, ஒரு மனிதன் எத்தகையவன் என்பது வாழ்க்கை மதிப்புக்களை அளக்கத் தன் சுய இச்சையை அவன் எவ்விதம் உபயோகிக்கிருன் என்பதி லிருந்து காணலாம். இவ்வாறு அவன் எவ்விதம் இருக்க விரும்பு கிருனே முடிவில் அவ்விதமே ஆகிருன். மனிதன் தன்னுடைய வாழ்க்கை மூலமாகத் தன் திறன்களை வெளிப்படுத்துகிருன். இவற் ருல் அவனுடைய குணச்சிறப்பு உருவடைகிறது என்று சொல்லு கிருேம். வாழ்க்கை என்பது மனிதன் தன்னை அபிவிருத்தி செய்து கொள்ளுகின்ற வழியாகும். தன்னுடைய ஆக்கத் திறன்களை வெளிப்படுத்துவதற்கும் வாழ்க்கையே அவனுக்குச் சந்தர்ப்பம் அளிக்கிறது. ஆகவே மக்கள் வாழ்கிற அல்லது வாழவேண்டிய விதம் முக்கியமானது என்று நாம் கருதி வருகின்ருேம்.

இப்படிப் பார்த்தால் வாழ்க்கை என்பது ஒரு பெரிய கிழி அல்லது திரையாகும். அதில் மனிதன் என்ற ஓவியன் தனக்குச் சொந்தமான பலவேறு மதிப்புடைய விசித்திரமான வர்ணங்களா லும், சுய இச்சை என்ற தனது எழுதுகோலினல் வரையும் உறுதி யான கோடுகளாலும், அழிக்கமுடியாத தனது ஓவியத்தை உரு வாக்குகின்ருன். அவனுக்குப் பின் உலகில் அவன் விட்டுச் செல் வது இந்த ஓவியமாகும். இது மக்கட் குலத்தின் முன்னேற்றத் திற்கு உதவிசெய்யலாம்; அல்லது முட்டுக் கட்டையாக இருக்க

லாம். வர்ணங்களில் தண்ணீர் பட்டால் அழிந்து போகின்றவையும் நாள் ஆனல் மங்கிப் போகின்றவையும் உள்ளன. சுயநலமே பிரதானமாகக் கொண்ட வாழ்க்கை மதிப்புக்கள் இந்த வர்ணம் போன்றவை. இவற்ருல் படம் எழுதினுல் அந்த ஓவியருடைய படமானது சாசுவதமாக இராது. ஹிம்சையினுல் அது விகாரப்பட்டுப் போகும். மற்றபடி அஜந்தா குகைச் சித்திரங்களைப் பார்க்கிருேம். இவை மண்ணுலான வர்ணங்கள். பலநூறு வருஷங்கள் ஆகியும் இன்னும் அவை பளிச்சென்று இருக்கின்றன. பரோபகார மதிப்புக்கள் இப்படிப்பட்டவை. இவற்றைக் கொண்டு எழுதிய ஓவியங்கள் சாசுவதமாகவும் அஹிம்சா பூர்வமாகவும் தலைமுறை தலைமுறையாக நிலைபெற்று இருந்துவரும்.

மனிதனுக்குக் கிடைத்துள்ள சந்தர்ப்பமும் பொறுப்பும் இத்தகையவை. ஆகவே, அவன் உறுதியில்லாமல் தன் வாழ்க்கையின் போக்கைப் பிறர் நிர்ணயிக்கட்டுமென்று விட்டுவிடக் கூடாது. தான் வாழும் வாழ்க்கைக்கு அவனே பொறுப்பாளி. தானுக எழுத வேண்டிய சொந்தச் சித்திரத்திற்குப் பதிலாக யாரும் கடைக்காரர்கள் சட்டம் உள்படப் போட்டுத் தயாராய் விற்கிற மலிவான அச்சடித்த படங்களை எடுத்துக் காட்ட முடியாது.

இன்றுள்ள ஆலைத் தொழில்களில் நடைபெறுகிற ஒரே தரமான பெருவாரியான பொருள் உற்பத்தி முறையானது மக்கள் வாழ வேண்டிய விதத்தை ஏறக்குறைய வகுத்துவிடுகிறது. கிரமமாய்ப் பணங்கொடுத்து வாங்குகிறவர்கள் இன்ன சரக்கு வேண்டுமென்று உத்திரவு இட அதிகாரமுடையவர்கள். ஆனுல் அதற்குப் பதிலாக இன்று சாமான் உற்பத்தி செய்பவர்கள் தாங்கள் செய்வது எதுவாயிருந்தாலும் அதை ஏமாந்த பொதுமக்கள் தலையில் சுமத்துகிருர்கள். இப்படி ஏமாந்துபோய் வந்ததை வாங்கிக்கொள்வதால் நம்முடைய பொறுப்பை நாம் நிறைவேற்றமுடியாது. நாம் விழித்தெழுந்து நம் கடமையைச் செய்ய வேண்டும்.

நம்முடைய தலைமுறையில் இரண்டு பெரிய உலக யுத்தங்களைப் பார்த்துவிட்டோம். புது யந்திர யுகத்தின் சாதனைகள் எப்படி நாசத்தைத் தருகின்றன என்பதற்கு இந்த யுத்தங்கள் சான்று பகரும். விஞ்ஞானமானது புறவிஷயங்களைப் பற்றியதாகவும் ஆக்கவேலை நடத்துவதாகவும் இருப்பது அதன் இயல்பு. அதுவும்கூட இக்காலத்தில் அழிவு தருகிற வெறுக்கத்தகுந்த ஒரு கருவியாக ஆக்கப்பட்டிருக்கின்றது. அழியாமை அஹிம்சை என்ற உறுதியான பாதையின்மீது திடமாக நிற்பதற்குப் பதிலாகப் புகழ் வாய்ந்த விஞ்ஞானிகள் வெள்ளமாகப் பெருக்கெடுத்தோடுகின்ற ஹிம்சையினுல்

சூழப்பட்டிருக்கிறார்கள். இந்த வெள்ளம் மக்கள் நாகரிகத்திலும் வளர்ச்சியிலும் அழிவையும் நாசத்தையும் கொடுத்து வருகிறது. விஞ்ஞானிகள் ஹிம்சையிலும் சேரவில்லை அஹிம்சையிலும் சேர வில்லை என்று சொல்லிக் கொள்கிறார்கள். இது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதை ஒக்கும். இரண்டிலும் சாராமல் இருத்தல் என்பது இல்லை. ஒன்று நாம் ஆக்குகிறோம் அல்லது அழித்து வரு கிறோம். இவர்கள் தங்கள் சுய இச்சையை அழித்தலுக்கே சேவை செய்ய முன் வந்திருக்கிறார்கள். ஆகவே உண்டாகிற அழிவு மிகவும் பெரிது.

பொருள் நாசம் என்பது மிகவும் பெரிதுதான். ஆயினும் நாசத் தில் அது மிகவும் குறைந்த பாகமே. அரிய காரியங்களைச் சாதிக்க வல்ல இளைஞர் இறந்து போனால் அந்த அழிவுக்கு எவ்வகையிலும் ஈடுசெய்ய முடியாது என்று எல்லோரும் வருந்திக் கூறுகிறார்கள். சிறந்த விஞ்ஞானி ஒருவரை ஒரு புலி கொன்று தின்று விட்டதானால் அதனால் புலிக்கு ஏற்படுகிற லாபம் எவ்வளவு, மனித குலத்துக்கு ஏற்படுகிற நஷ்டம் எவ்வளவு? புலிக்குக் கிடைப்பதெல்லாம் சுமார் 120 பவுண்டு எடையுள்ள சதையும் எலும்பும் ரத்தமுமாகும். இந்த ஆகாரத்தில் கிடைக்கும் சத்தை, புலியின் ஜீரணக் கருவி பொருத்த மாய் இருக்கும் பட்சத்தில் காய்கறி உணவைக் கொண்டே ஈடு செய்துகொள்ளவும் முடியும். ஆனால், மனித குலத்துக்கு நஷ்டமாகி உள்ளது இந்த அளவு சதையும் ரத்தமும் மட்டும் அல்ல, அனேகத் தலைமுறைகளாக வளர்ந்து வந்து வாழ்க்கையிலும் செயலிலும் மாறி வருகின்ற மதிப்புகளாக வெளிப்பட்டுள்ள நாகரிகத்தையும் பண் பாட்டையும் தோற்றுவித்த உயர்ந்த அறிவின் திறன்கள், சாசுவத மான வாழ்வுக்காகப் பாடுபடுகின்ற உயர்வும் விழுப்பமும் பொருந்திய பண்புகள், புலியின் கொலைச் செய்கையால் அழிந்து போயின. புலி பெற்ற லாபமோ சொற்ப நேரம்தான். சதையும் ரத்தமும் அதன் பசியைச் சிலமணி நேரத்துக்குத் தணித்தன. ஆனால் சாசுவதமான பரம்பரைச் செல்வத்தை மனித சமூகம் இழந்தது. விஞ்ஞானியின் வாழ்க்கையில் மிகவும் சிறப்புப் பொருந்திய பண்புகளான அறிவு ஆக்கம் அன்பு ஆகியவற்றால் கொன்று வாழும் அக் கொடிய விலங் குக்கு எந்தப் பயனும் இல்லை.

இதுபோலவே இந்த யுத்தங்களில் அழிந்துபோன லக்ஷக் கணக்கான உயிர்களால் மனித குலத்துக்கு ஏற்பட்டுள்ள நஷ்டங் களை நம் முயற்சியால் கணக்கிட முடியாது. மக்கள் நாகரிகத்தின் அபிவிருத்தியும் வளர்ச்சியும் இந்தப் பெருவாரியான பலிகளால் எத் தனையோ நூறுண்டுகள் பின்நோக்கிப் போய்விட்டன.

இனி அடுப்புக்கு விறகில்லையே என்று நல்ல ஜாதிப் பழம் பழுக்கின்ற ஒட்டுமாமரத்தை எந்தத் தோட்டக்காரராவது வெட்டித் தள்ளுவாரா? ஆனால் இன்றைய மனிதன் இவ்வளவு முட்டாளாகத்தான் இருக்கின்றான். துப்பாக்கிக் குண்டுக்கு இரையாகத் தன் பிள்ளைகளைக் கொடுப்பது மட்டும் அன்றி அப்படிக் கொடுப்பதில் அவன் பெருமையும் கொள்ளுகின்றான். இவ்வளவும் ஹிம்சையைப் போற்றுகிற பிரசாரத்தின் மகிமைதான்.

ஹிம்சை அஹிம்சை என்ற கொள்கைகளும் மனப்பற்றும் சமய உணர்ச்சிகளும் ஒருபுறம் இருக்க, மேற்கூறிய நியாயத்தால் உணவுக்காகப் பிராணிகளை வதைப்பது மிகவும் தகாத செய்கை என்று ஏற்படுகின்றது. புலால் உண்பவனுக்குக் கிடைப்பதெல்லாம் வெறும் மாமிசம்தான். இதற்குப்பதிலாக எளிதில் வேறு வகையான உணவுச் சத்துக்களைத் தேடிக்கொள்ளவும் முடியும். ஆனால் பிராணிகளினுடைய வாழ்க்கையில் ஏற்படும் உள்ளுணர்வின் விகாசங்களை இயற்கை இழந்து விடுகின்றது. பறவைகள் இசைக்கும் கீதம் பிராணிகள் காட்டும் அன்பு ஆகியவற்றை உதாரணமாகச் சொல்லலாம். இவை பல சமயம் மனிதனுடைய செய்கைகளினும் மேம்பட்டிருக்கின்றன. மனிதனிடத்திலுள்ள ஆக்கத் திறனைப்போலவே இந்தப் பிராணிகளின் அலுவல்களையும் போக்கி அவற்றுக்கு வேறு ஈடுசெய்ய முடியாது. ஆகவே புலால் உண்பது அழிந்து போவதாகிய கொலை வாழ்க்கையைச் சேர்ந்தது. இதனால் ஏற்படுகின்ற நாசம் வராமல் தவிர்த்துக் கொள்ளக் கூடியது. இந்தப் பழக்கம் உடையவன் உயிர் வாழும் வர்க்கங்களில் மிகவும் இழிந்த நிலைமைக்கு வருகிறான். இந்த நிலைமையில் எவ்விதக் கௌரவமும் இல்லை.

வாழ்க்கை சம்பந்தமான இந்தக் கருத்துக்களை நாம் முற்கூறிய ஐந்து விதமான வாழ்க்கைகளோடும் பொருத்திப் பார்ப்போம். விசேஷமாக மனிதனுடைய ஆக்கத்திறனை இங்குக் கவனித்துப் பார்க்கும்போது, ஐவகை வாழ்க்கையும் ஐவகை வாழ்க்கை நிலைகளைத் தருகின்றன. கொலைவாழ்க்கையானது, பின்பற்றுதல் என்ற நிலையையும், கொள்ளை வாழ்க்கையானது சுவீகரித்தல் என்ற நிலையையும் அமைக்கின்றன. முயற்சி வாழ்க்கை என்பது பொருள் தேவை என்ற நிலையையும் குழுவாழ்க்கையானது சமுதாயம் புதுமை என்ற நிலையையும் அமைக்கின்றன. சேவைவாழ்க்கையானது, அதில் ஈடுபட்டவர்கள் பிறர் வாழ்க்கைக்காகத் தாங்கள் உணரவும் பாடுபடவும் முடிவதால், பிறருக்கிரங்குதல் என்ற நிலையாக இதைக் கூற முடியும்.

**பின்பற்றுதல் :** இந்தத் தொகுதியைச் சேர்ந்தவர்கள் வாழ்க்கைக் குத் தாங்களாக எதுவும் உதவாமல் மற்றவர்கள் செய்துள்ளதை அப்படியே பின்பற்றி அதனுல் பெறக் கூடிய லாபத்தை மட்டும் அடைகிருர்கள். இவர்களுடைய வாழ்க்கையின் முக்கிய தன்மை மிகவும் சுலபமான வழியில் சுயநலத்தோடு இன்பமடைதல் என்பதாகவே இருக்கிறது. இதன் பொருளாவது பிறருடைய வாழ்க்கையைப் பயன்படுத்தி இவர்கள் வாழ்கிருர்கள். இந்த வாழ்க்கை கேவலம் காலம் தள்ளுதல் என்ற அளவோடு நிற்கிறது. சந்திரனைப் போல இவர்கள் சுயமாக உயிரும் ஒளியும் இன்றி மற்றவர்களுடைய முயற்சியைப் பிரதிபலிப்பதால் வரும் புகழ் மட்டும் பெறுகிருர்கள். இவர்களுக்குச் சொந்தமான மனிதத்தன்மைவெளிப்படுவதில்லை. இவர்களிடமிருந்து பயனுள்ளதாக எதுவும் கற்பதற்கில்லை. குதிரையும் கழுதையும் கலந்து பிறக்கிற பிறப்பாகிய மியூல் என்ற ஒரு பிராணி உண்டு. அது இரு ஜாதிக் கலப்பானபடியால் தன் ஜாதியை வளர்த்துக் கொள்ளும் சக்தியில்லாத மலடாகவே இருக்கிறது. மியூலுக்குச் சந்ததி இல்லை. அதுபோல இவர்களும் இருக்கிருர்கள். இவர்களுக்கு ஆக்கத்திறன் இல்லை. அப்படி இருந்தாலும் அது வெளிப்படவோ வளரவோ சந்தர்ப்பம் கொடுக்காதபடியால் மங்கிக் கிடக்கிறது. ஒருவேளை சூழ் நிலையை மாற்றினுல் சமூகத்தின் பொதுவான முன்னேற்றத்துக்கு இவர்களும் ஏதேனும் உதவக்கூடும். இப்படி இவர்கள் வேலையற்றிருக்கிற வரையில் இவர்கள் உயிர்வாழ்வது சமூகத்துக்குத் திட்டமாக நஷ்டம்தான். ஆக்காமல் அவர்கள் போக்குகிருர்கள். அவர்கள் ஜீவியத்தில் கலை அம்சம் எதுவுமில்லை. வர்ணக் கலப்பில்லாமல் அச்சுக்கூடத்திலிருந்து வருகின்ற கறுப்பும் வெள்ளையுமான அச்சுப் போன்றது அவர்கள் வாழ்க்கை.

இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் ஜப்பானியர் இந்தத் தொகுதிக்குரியவர்களாய் வாழ்ந்தார்கள். மேலைநாட்டுக்குரியதை எல்லாம் அப்படியே கடைப்பிடித்தார்கள். முன்னமே அவர்கள் சீனத்தையும் இந்தியாவையும் போல அழிவற்ற வாழ்வு முறையைத் தழுவி வாழ்ந்தவர்கள். ஆனுல் அவர்கள் போக்குப் பின்பற்றுதல் என்ற நிலையில் கொண்டுபோய் விட்டது. மஞ்சூரியாவிலும் சீனத்திலும் அவர்கள் ஆக்ரமித்திருப்பது எப்படித் தடையில்லாமல் கொலை வாழ்க்கை என்ற நிலைக்கு அவர்கள் வீழ்ச்சி அடைந்திருக்கிருர்கள் என்பதை விளக்கமாகக் காட்டுகிறது. அஹிம்சையைக் கைவிட்டு ஹிம்சையையும், நாசத்தையும் பிரதிஷ்டை செய்துவிட்டார்கள்.

நம்முடைய நாட்டில் நம் நண்பர்களில் அனேகர் முக்கியமாக இந்தியக் கிறிஸ்துவர்கள் இந்தத்தொகுதியைச்சேர்ந்தவர்கள். நானும்



அன்னியநாட்டுப் பாதிரிமார் முறை

இந்தச் சமூகத்தைச் சேர்ந்தவனுதலால் மிக்க வெட்கத்தோடு இதை இங்கே குறிப்பிடுகிறேன். இவர்கள் சாத்தியமான எல்லா வழியிலும் மேலேநாட்டார் போல நடக்கிருர்கள். தங்கள் சொந்தத் தாய் மொழியைவிட்டு ஆங்கிலத்திலேயே பேசுகிருர்கள். ஆங்கிலேயர் போல உடுக்கிருர்கள். பூரணமாக அன்னிய நாட்டுப் பாதிரிமார் முறையில் வீட்டை அமைத்துக் குடித்தனம் நடத்துகிருர்கள். அவர் களில் பணக்காரர்களா யுள்ளவர்களிடையே, சாப்பிடுவது சம்பந்த மான பழக்கங்களும், மேலேநாட்டினரைப் பார்த்து வந்தவை ; சாப் பிடும் பழங்கள்கூட வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட டப்பியிலடைத்த பழவற்றல்தான். மேலேநாட்டார், பொழுது போக்கு நாகரிகம் என்று கருதுகிற குதிரைப்பந்தயங்களும் நாட்டி யங்களுமே இவர்களுக்கும் பொழுதுபோக்கு. இந்த நாட்டியங்களைத் "தாளத்துக்கேற்பக் கட்டித் தழுவுதல்" என்று சிலர் பெயரிட் டிருப்பது முழுமையும் பொருந்தும். இந்த மக்கள் தொகுதியில் அனேகருக்கு மிகச் சிறந்த உயர்தரக் கல்வி கிடைத்திருந்துங்கூட, அறிவைப் பொறுத்த வரையில், இவர்களைப் பூரண மலடு என்று சொல்லலாம் ; ஏனெனில் இவர்களால் எந்தச் சாதனையும் நிகழ வில்லை. துரதிர்ஷ்டவசமாக, பெரிய நகர்ப்புறங்களின் போக்கு அனைத்தும் இந்தத் தாழ்ந்த நிலையை நோக்கிய போக்காகத்தான் இருக்கிறது. நகரங்களின் எண்ணிக்கை குறைவு என்பது ஆறுத லான விஷயம். இந்தப் போக்கு மேலும் பரவாதபடி காலத்தில்

தக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டால், இதை வேரோடு களைந்து விட முடியும்.

**சுவீகரித்தல் என்ற நிலை :** "நாளைக்கு நாம் இருக்கமாட்டோம்; ஆகவே இன்று உண்டு குடித்துக் களித்திருப்போம்" என்பதே இந்த நிலையிலுள்ளோர் கொள்கை. முந்திய நிலையிலிருந்தவர்கள் போல இவர்களும் பிறர் செய்கையைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்; ஆனால் ஒரு வித்தியாசம்; பிறர் செய்ததை இவர்கள் சிறிதும் மாற்றிச் சொந்தமாக்கிக் கொள்ளுகிறார்கள்; எனினும் இது பூரணமாய்ச் சொந்தம் என்று சொல்லத் தக்க தனித்தன்மை பெற்றிருப்பதில்லை.

பிறர் செய்து காட்டியிருப்பதை அப்படியே சுவீகரித்துக் கொண்டு வாழும் முயற்சிக்கு, இக்காலத்து ஜப்பானியரை உதாரணமாய்க் கூறலாம். மேலைநாட்டாரிடமிருந்து முன்னமே எதைக் கற்றுக் கொண்டார்களோ அதை அவர்கள் தங்கள் நாட்டுக்குப் பொருத்திக் கொண்டிருக்கிறார்கள். உதாரணமாக, பெருவாரியான சாமான் உற்பத்தி என்ற கருத்தை மேலைநாட்டாரிடமிருந்து எடுத்துக்கொண்டு, பெரிய ஆலைகளை வைத்து நடத்தும் வேலையை மட்டும் துண்டு துண்டாகப் பிரித்துக் கொண்டார்கள்; ஒவ்வொன்றையும் தனிச் சிறு குடிசையில் செய்யத்தக்க குடிசைக் கைத்தொழிலாக ஆக்கி, இச்சிறு வேலைகளை ஒன்றாகத் தொகுத்து முழுச் சாமானாக ஆக்கும் தொழிலை மட்டும் ஒரு மத்திய தொழிற்சாலையில் செய்வதாக ஆக்கிக் கொண்டார்கள். ஓர் உதாரணம் காட்டலாம். இங்கிலாந்தில் பி. எஸ். ஏ. சைக்கிள் என்ற சைக்கிள் செய்வதில் ஒரே கம்பெனியார் அதற்கான சகல வேலைகளையும் தங்களுடைய ஒரே தொழிற்சாலையில் செய்து முடிக்கிறார்கள். ஆனால் ஜப்பான் செய்வது இப்படியில்லை. தங்கள் தங்கள் வீடுகளில் வேலை செய்பவர்களுக்கு அந்நாட்டில், உற்பத்திக்கான மூலப்பொருளும் உபகரணங்களும் கொடுக்கிறார்கள். இப்படி வீடுகளில் செய்பவர்களில் சிலர் சக்கரத்தின் கால்களான ஸ்போக் கம்பியை மட்டும் செய்கிறார்கள். மற்றும் சிலர் சக்கரத்தின் வட்டையை மட்டும் செய்கிறார்கள். இவ்வாறு தனித் தனியாகவே சைக்கிள் பாகங்கள் யாவும் செய்யப்படுகின்றன. பாகங்களைக் கோக்கும் மத்திய ஸ்தாபனத்துக்கு இந்தத் தனியான பாகங்கள் வந்து சேர்கின்றன. அங்கு இவை யாவும் ஒன்றாய்க் கோக்கப்பட்டு, முழுச் சைக்கிளாக வெளிவருகின்றன.

நம் நாட்டில் சிலர் இருக்கிறார்கள்; பின்பற்றுதல் நிலையிலுள்ளவர்கள் போல இவர்கள் பூரணமாக மேலைநாட்டின் பிடியில் அகப்படவில்லை. உதாரணமாக, சில சமயம் இவர்கள் உடை பற்றிய

வரையில் மேலைநாட்டு முறையைக் கடைப்பிடிக்க முயல்கிறார்கள் ; இதன் பலன் மிக்க வேடிக்கையாயிருக்கிறது. வடநாட்டு 'பாபு' ஆங்கிலேய முறையில் கழுத்துத் திறந்த கோட்டுப் போட்டுக் கொள்வார் ; ஆனால் அதனோடு அவசியம் போடவேண்டியதான கஞ்சி போட்ட விறைப்பான இறுக்கமான கழுத்துப்பட்டையும் அதிலிருந்து தொங்கவேண்டிய நெக் டையையும் கட்டியிருக்க மாட்டார்.



அரைகுறையாக மேலைநாட்டு முறையில் உடுத்துதல்

நம் நாடு வெப்பமானது என்பதை எண்ணிப் பார்த்தால், இது நியாயமென்று கூடத் தோன்றும். தம் கால்சட்டைக்கு வெளியே ஷர்ட்டை இழுத்துத் தொங்கவிட்டிருப்பார் ; இது காற்றோட்டத்துக்கு அனுகூலமாயிருக்கும். காலில் மேஜோடு அணிந்திருக்க மாட்டார் ; ஆக்ஸ்போர்டு முறையிலுள்ள பூட்ஸ் விலை அதிகமிருக்குமாதலால், வெறும் நாட்டுச் செருப்பே அணிந்திருப்பார். இக் காட்சி,

பூரணமாய் ஆங்கிலமுறையை அனுஷ்டிப்பவருக்கு மிக்க அருவருப்பாயிருக்கும்; ஆயினும் இவருடைய உடை மற்றவருடைய உடையை விட, ஓரளவு சொந்த மனோபாவத்தை ஒட்டியதாயிருக்கிறது. ஆனால் இப்படிப்பட்டவர்களுடைய கலைத்திறமை யெல்லாம், மில் துணிப் பீஸின் மீது ஒட்டியிருக்கும் வர்ணப்படத்தைப் போல, மட்டரகமானது. இவர்களிடம் சுயஇச்சை யிருக்கிறது. தாங்களாகத் தேர்ந்து கொள்ளும் ஆற்றல் இருக்கிறது. ஆனால் பூரணமான தையும் ஆக்கவல்ல காட்சித்திறனும் அவர்களுக்கில்லை, ஆக்குவதற்கு இவர்களுடைய சோம்பேறித்தனமும் இடங்கொடுக்கவில்லை. இவர்கள் செய்வதெல்லாம் ஒட்டுவேலை; இது நிலைத்து நிற்காது. தங்களுக்கு வேண்டியதை விரைவிலே தாங்கள் சாதித்துக்கொள்ள வேண்டும் என்ற இவர்களுடைய ஆசை நிச்சயம் இவர்களை ஹிம்சை வழியில் கொண்டுபோய்விடும்.

பொருள் உற்பத்தி என்ற நிலை: முயற்சி வாழ்க்கை முறையின்படி, இந்த நிலையில் ஒவ்வொருவரும் தம் ஆற்றலை வெளிப்படுத்துவார், "பந்திக்கு முந்தி, படைக்குப் பிந்தி" என்று சாமானியமாய் வழங்குகிற பழமொழியைப் பின்பற்றி, பிறருடைய கதியைச் சிறிதும் கவனிக்காமல், தம்மிஷ்டம் போல் தம் வாழ்க்கையை நடத்துவார். அவர்கள் சொந்த அபிப்பிராயங்கள் வைத்திருந்து, தங்கள் சுயநலத்துக்காக அவ்வபிப்பிராயங்களை வாழ்க்கையில் கடைப்பிடிப்பார்கள். இதன் பொருளாவது, ஒவ்வொருவரும் தம் மனப்போக்கைத் தம் தினசரி வாழ்க்கையில் வெளியிடும் சுதந்திரம் பெற்றிருப்பார். துரதிர்ஷ்டவசமாக, உலகமானது இன்று பொருள் உற்பத்தி செய்பவர்களின் காலில் நசுக்குண்டு கிடக்கிறது; பொருளை உபயோகிப்பவர்கள் எப்படி வாழவேண்டும் என்று திட்டம் வகுக்கும் அதிகாரம் அவர்களிடமே இருக்கிறது. ஆகவே, தமக்கு வேண்டியதைத் தாமே தேர்ந்து கொள்வதில், பொருளை உபயோகிப்பவருக்குச் சுதந்திரம் இருந்தாலும், அதுவும் அவருடைய படைப்புத் திறனும், உற்பத்தியாளருடைய ஆற்றல் காரணமாக, செயலற்றுப் போகின்றன.

பிரான்ஸ் தேசத்தில், பெண்களின் சட்டை போடாத வெற்று முதுகில் வண்ணாத்திப்பூச்சி உருவம் வரைந்து பார்ப்போர் கண்டு களிக்கும்படி அது திறந்து இருக்கவேண்டுமென்று அந்நாட்டுச் சௌந்தர்ய நிபுணர் விதிப்பார். இந்த அழகு வேண்டுமென்று ஆசைப்படுகிற பெண்கள், எவ்வித ஆட்சேபனையுமில்லாமல், உடல் அலங்காரம் செய்கிற கடைகளுக்குச் சென்று, அங்கு தங்கள் உடைகளைக் களைந்துவிட்டு, ஸ்நான உடை மட்டும் அணிந்து, தங்கள் முதுகில் வண்ணாத்திப்பூச்சியின் உருவம் வரையச்செய்து, அதனோடு

பிரசித்திபெற்ற ரிவீரா கடற்கரை யடைந்து, அங்கு பார்ப்போ ரெல்லாம் கண்டு மருளும்படி தங்கள் முதுகலங்காரத்தைக் காட்டிக் கொண்டிருப்பார்கள்.



உற்பத்தியாளர் சிருஷ்டிக்கிற நவீன மோஸ்தர்கள்

உலகத்திலேயே மேலேநாட்டு உடை முறையிலும் பெண்கள் அலங்கார மோஸ்தர்களிலும் பாரிஸ் நகரந்தான் எல்லோருக்கும் வழிகாட்டியாயுள்ளது. லண்டன் நகரம் இவற்றைப் பின்பற்றி, வியாபார ரீதியாக இவற்றுக்கான பொருள்களைத் தயாரிக்கிறது. நியூயார்க் நகரமோ இவற்றைத் தன் தேவைக்கேற்ப மாற்றி யமைத்து, ஒருதரமாக்கி வைக்கிறது.

இப்படி மேலேநாடுகளில், அனைத்தையும் ஒருதரமாக்கிவிட்ட வியாபார முறைகள், பொருள் உபயோகிப்பவராகிய தனிப்பட்ட மனிதர் தம் சொந்த வாழ்க்கையில் காட்டும் சுயமான மனோபாவத்தை அழித்துவிட்டது. எங்கும் ஒரே தரமாக ஏற்பட்டுள்ள வாழ்க்கை முறையிலிருந்து பிறழ்ந்துவிட்டால், மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்ற அச்சந்தான் எல்லோருக்கும் பிரதானமா யிருக்கிறது. ராஜசபை, பணக்காரர், வியாபார நிலையங்கள் ஆகிய வெளியார் தான் சகல நாகரிக மோஸ்தர்களையும் நிர்ணயிப்பதால், குடும்ப

வாழ்க்கை முறைகூட இவர்களால் நிர்வகிக்கப்படுகிறது என்று சொல்லலாம்.

மற்றுமோர் உதாரணம் கூறலாம். கொஞ்ச நாளைக்கு, ரசம் சாப்பிடுவதென்றால், சுற்றிலும் விளிம்புடைய ஒரு கிண்ணத்தில், கோழி முட்டை வடிவமான பெரிய கரண்டியால் எடுத்துச் சாப்பிடுவது நாகரிகமாயிருக்கும். சில வருஷமானால் நாகரிகம் மாறும். விளிம்பில்லாத கிண்ணமும் வட்டமான கரண்டியும் இப்போது நாகரிகமாகி விடும். இப்படி நாகரிகமும் மோஸ்தர்களும் மாறுவது வியாபார தந்திரமென்று சொல்லலாம். ஏழைகள் அடிக்கடி தங்களுடைய பாத்திரங்களை மாற்றிக் கொள்ள முடியாது. ஒரே வகையான சாமான்கள் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக இருந்து வந்தனவானால், கடைகளில் வியாபாரம் பெரிதும் குறைந்து போகும். அப்படிக்கின்றி வாழ்க்கைக்கான ஸ்தூலமான சாமான்கள் அடிக்கடி மாறிக்கொண்டு வந்தால், செயற்கையாக சாமான்களுக்கேற்படும் கிராக்கியானது அதிக வியாபாரத்துக்கு இடம்அளிக்கும்.

இவ்விதமான பொருளற்ற இலக்கியமில்லாத நவீன மோஸ்தர்களையே தேடியுழல்பவர்கள், சமூகத்தில் முன்னேறுபவர்களுக்கும் ஊக்கம் மிக்க வியாபாரிகளுக்கும் இரையாகிறார்கள். அவ்வியாபாரிகள், சரக்கு விற்பனையாவதற்கு இயற்கையாக இடமில்லாது போயினும், தங்களுடைய திறமையான விளம்பர முறைகளாலும் வியாபார யுக்தியாலும் தங்கள் சரக்குக்களை எங்கும் பரப்புகிறார்கள். அவர்களுடைய பிரசாரத்துக்குப் பலியான அறிவில்லாத மக்கள், காலக்கிரமத்தில், புது மோஸ்தர்களைத் தாங்கள் வாங்கி வைத்திராமையால், தாங்கள் தாழ்வு என்ற உணர்ச்சி பெற்று, தன்னம்பிக்கை யிழந்து, தங்களிடம் அமைந்துள்ள ஆக்கத்திறனைப் பிரகாசிக்கச் செய்யாது போகிறார்கள். அவர்களுக்கு வாழ்க்கை உற்சாகமற்றதாக ஆகிறது.

பம்பாய் போன்ற பெரிய நகரங்களுக்குப் போய் அங்கு அறை அறைகளாய்க் கட்டப்பட்டுள்ள புதுமாதிரி வீடுகளி லொன்றில் புகுந்து பார்த்தால், ஒவ்வொரு வீட்டிலும் என்ன வாழ்க்கை நடைபெறுமென்று யூகித்துக் கொள்ளலாம். எங்கும் புதுரகமான மேஜை நாற்காலி முதலான சாமான்கள்; மேஜையின்மேல் கண்ணாடிப் பலகை—எல்லா வீடுகளிலும் இப்படியே: மாறுபாடு சிறிதும் இல்லை. சுயமான மனோபாவம் இல்லை. சுயமான நினைப்பும் இல்லை. எல்லாம் உயிரில்லாத ஒரே தரம். பிணங்களைப் புதைத்துள்ள பழைய கல்லறைகளிலாவது கலைப்பண்பும் சிற்பத்திறனும் பொருந்திய சில உருவங்களைப் பார்க்க முடியும். ஆனால், நவீன

மான பம்பாய் நகரில்—“உயிருள்ள” மக்கள் வாழ்கிருர்கள் என்று நாம் நினைக்கிற நவீனமான பம்பாய் நகரத்துப் புது வீடுகளில்—அப்படிப்பட்ட பொருளோ உருவமோ ஒன்றும் காணப்படமாட்டாது. சுடுகாட்டினும் அதிகமாக இவ்வீடுகளில் மரணத்தின் சாயை படர்ந்திருக்கிறது. வாழ்க்கையைச் சௌகரியமாகவும் சுலபமாகவும் ஆக்குகிரேம் என்று சொல்லிக் கொண்டு, உற்பத்தியாளர்கள், பொருள் வாங்குவோரின் காரியங்கள் அனைத்தையும் செய்து விடுகிருர்கள்; இப்படிச் சுலபமாக்குவதால், மனிதரிடமுள்ள உயர்வான பண்புகள் யாவும் மரத்துப் போகின்றன, இது வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் அழிவாகிறது.

வாழ்க்கையானது ஆக்கப் பண்புடையதா யிருக்கவேண்டுமானல், வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை இவ்விதம் ஒரு தரமாக்குகிற காவலையொத்த முயற்சி நீங்கவேண்டும். தனிப்பட்ட மனிதர் தம் உள்ளப் போக்கை வெளிப்படுத்துவதற்குப் பூரண சந்தர்ப்பம் இருக்கவேண்டும். தம் வீடு எப்படியிருக்க வேண்டுமென்று திட்டமிடுதல், தம் வீட்டு மேஜை நாற்காலி முதலான சாமான்கள் எப்படியிருக்கவேண்டுமென்று திட்டமிடுதல் ஆகியவை, ஒவ்வொருவரும் தம் குணவிசேஷத்தைக் காட்டுவதற்கு மிகச் சிறந்த இடங்கள். நம் பிரசினைகளைத் தீர்த்து வைக்கிரேம் என்று சொல்லிக்கொண்டு, பெருந்தொழில் உற்பத்தியாளர்கள், நம் குணவிசேஷமும் தனிப் பண்பும் பயனற்றுப் போகும்படி செய்து, வாழ்க்கையையே வறியதாகும்படி செய்கிருர்கள். அமெரிக்காவில் ஒரே பகலில், பூரணமாய்த் தயாரித்த வீடுகளையே கட்டிக் கொடுக்கிருர்கள். வீடு வேண்டியவர் செய்வது, உற்பத்தியாளரை டெலிபோனில் கூப்பிட்டு, தமக்கு A திட்டம், B திட்டம், C திட்டம்—எந்தத் திட்ட வீடு வேண்டுமென்பதையும் எந்த இடத்தில் வேண்டும் என்பதையும் மட்டும் சொல்வதொன்றுதான். ஒவ்வொரு திட்டத்துக்கும் உரிய கதவு ஜன்னல் எல்லாம் தயாராய்ச் செய்து கையிருப்பில் இருக்கின்றன. அவற்றை ஒன்ருய்ச் சேர்த்துக் காகிதப் பெட்டி கோப்பது போலக் கோப்பதுதான் பாக்கி. சாப்பாடு விஷயத்தில் ஒவ்வொருவருக்கும் தனியான கவலை இருக்கும் என்று நாம் எதிர்பார்ப்போம். இதில்கூட, கற்பனையான உணவுச் சத்து முதலியவற்றைப் பகட்டான சொற்களால் விளம்பரப்படுத்தி, உற்பத்தியாளர்கள் தனியான விருப்பம் என்பதைத் தலையெடுக்க ஒட்டாமல் அடக்கி விட்டார்கள். இந்தியாவில்கூட இப்போது பூரணமாய்த் தயாரித்த உணவு வகைகள் கடைகளிலும் வீடுகளிலும் தலை காட்டத் தொடங்கியிருக்கின்றன; இவை சமையல் என்ற கலைக்கு

அழிவைத் தருவது நிச்சயம். குடித்தனப்பெண் என்றால், சமையல் தேர்ச்சி என்பது அவளுக்குப் பெருமை தரும் வேலை. இதற்குமாறாக, நம் நாட்டிலிருந்து ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள தொழிற் சாலைகளில் தயாரிக்கப்பெற்ற ஊறுகாய்கள், சட்னி, முரபா, குழந்தைக்கும் நோயாளிக்கும் ஏற்ற பக்குவ ஆகாரம் முதலியன இங்கு வந்து விற்கக் காண்கிறோம்.

மனிதன் தன் வாழ்க்கைப் பிரசினைகளைப் பற்றி ஆராய்ந்து சிந்தனை செய்யாவிட்டால், வாழ்க்கைக்குத் தான் தகுதியற்றவனாகிறான்; இது அவனுடைய அமைப்பிலுள்ள ரகசியம். ஆதலால், உற்பத்தியாளர்கள் அவனுடைய சௌகரியத்துக்காகத் தாங்கள் சிந்தனை செய்து, வேண்டுவன வெல்லாம் தயாரிக்கிறோம் என்று சொல்வதால், உண்மையில் அவர்கள் அவன் கை கால்களை முடக்கி விடுகிறார்கள் என்றே சொல்ல வேண்டும். சொந்தத் தாய்கூட, தன் குழந்தை தானாகவே நடக்கப் பழகவும் பழகும்போது ஒரு சமயம் கீழே விழவும் காயப்படுத்திக் கொள்ளவும் விடத்தான் வேண்டியிருக்கிறது. குழந்தை கீழே விழவே கூடாது என்று அவள் கவனத்தோடு பாது காத்துக் குழந்தையைத் தூக்கிக்கொண்டே இருப்பாளானால், சாயாமல் நிற்கவும் நடக்கவும் குழந்தை ஒருபோதும் கற்க மாட்டான்; வாழ்க்கை முழுமையும் நொண்டிபோலவே அவன் காலங்கழிக்க நேரும். சமூகத்துக்கு உற்பத்தியாளர் இன்று செய்யும் சேவையெல்லாம் இப்படிப்பட்டதோர் உதவிதான்.

நம் நாட்டில், நம் தினசரி வாழ்க்கையில் எத்தனையோ வகைகளும் விரிவும் அமைந்திருக்கின்றன; இவை நம்முடைய ஆக்கத் திறன் பற்பல வகைகளில் ஒன்று சேர்ந்து, மாறுபட்ட சீதோஷ்ண நிலைகளிலும் வெவ்வேறு மாகாணங்களிலும் வெளிப்படுவதற்கேற்ற சந்தர்ப்பங்களை அளிக்கின்றன. ஒரே மாகாணத்திலுங்கூட, பலவேறு சமூகங்கள் அமைந்திருக்கின்றன. வர்த்தக நிலையங்களின் மாயத்தில் நாம் சிக்காதிருக்கும் பட்சத்தில், நம்முடைய தனியான பண்புகளும் ஆற்றல்களும் வளர்ச்சியடைவதற்கும் வெளிப்படுவதற்கும் விரிவான இடமும் சந்தர்ப்பங்களும் உள்ளன. நல்லகாலமாக, இங்குள்ள பெரிய பட்டணங்களும் நகரங்களும் நீங்கலாக, கிராமவாழ்க்கை பெரும்பாலும் கெடாமலிருக்கிறது. மூலைமுடுக்குகளிலெல்லாம் விரும்பத்தகாத போக்கே சமமாய்ப் பரவி வருகிறதென்பது வாஸ்தவம்; ஆயினும், நிலைமை பரிகாரம் செய்ய முடியாத அளவுக்கு அங்கு சீர்கெட்டுப் போகவில்லை. சம்பந்தப்பட்ட மாத்திரத்தில் சாவைத் தருவதாகிய இந்தக் கொடுநோயிலிருந்து உடனே பாதுகாப்பைத் தேடிக்கொள்வது மிகவும் அவசியம்.

பொருள் உற்பத்தி என்ற நிலை மனிதனுக்குப் பலம் தரும் நிலையாயிருப்பதற்குப் பதிலாக, மேற்கூறிய தலைகீழான அமைப்பானது அந்த நிலையை வாழ்க்கை என்ற சங்கிலித் தொடரில் மிகவும் பலவீனமான கறணையாக்கிவிட்டது. காரணம், இதில் பிரதான பங்கு கொள்ளும் யந்திர உற்பத்தியாளன், மக்கள் தொகுதிகளில் பெரும்பகுதியான பொருள்வாங்கும் மக்களுடைய அபிப்பிராயம் இரக்கமின்றி நசுக்கப்பட்டுப் போகிறது; தற்காலத் தொழிற்சாலைகளின் இடிபாடுகளுக்கிடையில் ஆக்கத்திறன் புதையுண்டு போகிறது. வாழும் முறையினால் கலைப்பொருள் எதுவும் உண்டாகவில்லை; உண்டாவதெல்லாம், குழந்தை தன் புத்தகத்தில் ஒட்டிக் கொள்ளக்கூடிய, அழியக்கூடிய சாமானியமான வர்ணப் படங்களே.

இன்ன சரக்குத் தனக்கு வேண்டுமென்று சொல்லக்கூடப் பொருள் வாங்குபவனுக்கு இன்று அதிகாரமில்லை. நடைபெறுகிற வியாபாரத்தில், பொருளாதார நிபுணர்கள், வாங்குபவருடைய பாகத்தைக் "கிராக்கி" (அல்லது கேட்டல்) என்று பெயரிட்டிருக்கிறார்கள். ஆனால் உண்மையில் வாங்குபவர் தமக்கு இது வேண்டுமென்று கேட்பதே இல்லை. கிடைப்பதை அவர் வாங்கிக்கொண்டு போகிறார். மாட்டைப் பின்னே நிறுத்தி வண்டியை முன்னே வைத்துப் பூட்டுவதாக இது இருக்கிறது. இங்கிலாந்திலுள்ள நார்தாம்ப்டன் என்ற ஊரில் செருப்புச் செய்து இங்குக் கொண்டுவந்து விற்கிறார்கள். அங்கு இவற்றைச் செய்யும் தொழிலாளர்கள் அச்செருப்புக்களை இந்தியாவில் யார் உபயோகிக்கிறார் என்று ஒரு நாளும் பார்த்ததே இல்லை; உலகத்தின் எந்தப் பாகத்தில் யார் உபயோகிக்கிறார் என்றும் பார்த்ததில்லை. உபயோகிப்பவர்களுக்கு ஏற்ற மாதிரி செருப்புச் செய்வதற்குப் பதிலாக, இன்று செருப்பு வேண்டியவர் செருப்புக்கடைக்குப் போய் அங்குள்ள செருப்புக்களில் சுமாராகத் தம் காலுக்கு எது சரியாயிருக்கிறதோ அதை மாட்டிக்கொள்ள வேண்டியிருக்கிறது. செருப்புக் கடைக்காரர்கள் தயாரித்துள்ள அளவு செருப்புச் செலவாகும் பொருட்டு, ஓரிடத்திலுள்ள மக்கள் தங்கள் காலில் செருப்பு மாட்டிக்கொள்ளத் தயாராயில்லாவிட்டால், செருப்பே அணியாதவர்களான அபிசீனியா போன்ற வேறு ஏதேனுமொரு நாட்டுமக்களைத் தங்கள் அரசியல் ஆதிக்கத்துக்குட்படுத்தி, அவர்களை மேலைநாட்டுச் செருப்பு முறையைக் கைக்கொள்ளும்படி செய்வதற்காக, "நாகரிக" மாக்க வேண்டியிருக்கிறது. இவ்விதமாக, சாமானை முன்னதாகத் தயாரித்துக் கொண்டு அதற்கென்று தேவையைச் சிருஷ்டித்துக் கொள்வதாகிய பழக்கம்,

இக்காலத்துப் போர்களுக்கு முக்கிய ஆதாரமா யிருந்துவருகிறது. இயற்கைக்கு மாருக ஒரு தேவையைச் சிருஷ்டிப்பதனுல், ஹிம்சை விளைகிறது; பொருளாதார நிலைமை நிலைகுலைந்து போகிறது. குலைந்த நிலையைச் சரிப்படுத்தும் முயற்சியில் மீண்டும் ஹிம்சை விளைகிறது.

சாசுவத வாழ்வும் அஹிம்சையும் நிலவ நாம் விரும்பினுல், சாமான் உபயோகிப்பவர் தாமே நேர்முகமாகப் பிரதான பங்கு கொண்டிருப்பதாகிய ஒரு சமூக அமைப்பு ஏற்பட வேண்டும். உபயோகிக்கும் சாமான்கள், அவ்வப்போதுள்ள தேவைக் கென்று உபயோகிப்பவருடைய பார்வையில் அந்த அந்தப் பிரதேசத்திலேயே செய்யப் பெற்ருல்தான் இது சாத்தியம். இத்தகைய நிலைமை இருந்தால்தான், சாமான் உபயோகிப்பவர், தமக்கு வளர்ச்சி தர வல்லதும், தம் குணச் சிறப்பைப் பிரகாசமாய்ச் செய்வதுமான மதிப்பு முறையை வழக்கத்துக்குக் கொண்டுவர முடியும். உற்பத்தியிலும் விற்பனையிலும் இன்று வழங்குகிற முறைகள் வாழ்க்கையில் ஓட்டமின்றித் தேங்கச் செய்து, வாழ்க்கை என்ருல் வெறுங் காலங் தள்ளுதல் என்ருக்கிவிட்டன. இந்தச் சூழ்நிலை மூச்சுத் திணறச் செய்கிறது. பொருள் உற்பத்தி என்ற இந்த நிலைக்குப் பொருந்தக் கூடியவர்கள் விழித்தெழுந்து தங்கள் தன்மைகள் வெளிப்படச் செய்து செயலில் இறங்கினுல், நிலைமை தெளிவுபடும். பணமதிப்பு என்ற அளவுகோல் இன்று இந்த நிலையிலுள்ளவர்களைப் பூரணமாய் ஆட்கொண்டிருக்கிறது. இந்த மதிப்பைப் போக்கிப், பண்பாட்டு மதிப்பு என்ற பலதிறப்பட்ட மதிப்பு முறையை ஏற்படுத்தி, பொதுவாக மக்கள் வாழ்க்கை முழுமையிலும் இதற்கு ஆதிக்கம் தரவேண்டும்.

சமுதாயப் புத்தமைப்பு என்றநிலை: இது குழுவாழ்க்கை முறைக்கு உரியது. ஆதலால், "சமூகத்துக்குப் பொதுவாக நன்மை புரிவது எது?" என்றுதான் நாம் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் கவனிக்க வேண்டுமே அன்றி, இது தனியொருவருக்கோ அல்லது தனிப்பட்ட ஒரு தொகுதிக்கோ நன்மை தருவதாகுமா என்று பார்க்கலாகாது. இங்கு பணமதிப்புக்கு இடமே இராது என்பதை எடுத்துக்காட்ட வேண்டியதில்லை; குறுகிய காலத் திட்டங்களை விட்டு இங்கு நீண்ட காலத் திட்டங்களுக்கு ஏற்ற கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டியிருக்கும்.

சமீப காலத்தில், சமூகத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் அனேக சோதனைகள் நிகழ்ந்திருக்கின்றன. சோவியத்துக் கம்யூனிசக் கொள்கையைத் தொடங்கி வைத்து ரஷ்யா இந்தச்

சோதனையை ஆரம்பித்து வைத்தது. நாசிகளும் பாசிஸ்டுகளும் அடுத்துச் சோதனை நடத்தினார்கள். அவர்கள் சோதனைகள் யாவும் நிலைத்த வாழ்வையும் அஹிம்சையையும் தோற்றுவிக்கத் தவறிவிட்டன; அல்லாமலும் அவை மக்களை ஒரே ரத்தக் களரியில் மூழ்கடித்துவிட்டன. மனித சமுதாயம் முழுமையும் ஒரு பெருங் குடும்பம் என்பதை மறந்து, அவை தங்கள் நாட்டுக்கும் தங்கள் இனத்துக்குமென்று குறுக்குவழி தேட ஆரம்பித்துவிட்டன. "தருமமோ அதருமமோ, எதுவாயினும் என்நாடு ஒன்றே வாழவேண்டும்" என்ற கொள்கையை மேற்கொண்டு, அடிமைப்பட்ட மக்களை நடத்தி வந்தார்கள். ஆதலால் அந்த முறைகள் முடிவில் ஹிம்சையிலும் நாசத்திலும் போய் முடிந்தன.

சர்வதேச சங்கமானது உலக முழுமையும் தழுவுவதான பெரிய பெயரைத் தாங்கி யிருந்தது வாஸ்தவமேயாயினும், அது விரையில் அழியக் கூடியதான குறுகிய காலக்கொள்கையையே கடைப்பிடித்தமையால், அதன் நிர்வாகத்தை நடத்திய சிலரின் சுய நலத்துக்கு மட்டுமே அது சேவை செய்ய முடிந்தது. ஆகவே, விரிவான மனித குலம் முழுமைக்கும் நிலைத்த வாழ்வையும் அஹிம்சையையும் தர அது தவறிவிட்டது.

வாழ்க்கையைக் கிரமமாய்த் திட்டமிட்டுக் கொள்வது மிகவும் அவசியம். எடுத்த திட்டம் வெற்றிபெற வேண்டுமானால், அதனுடைய நோக்கம் அனைவருக்கும் பொருந்தக் கூடியதாயும் உலகத்தினுடைய நிலையான அமைப்புக்கு ஒத்ததாயும் அதுஇருக்க வேண்டும். பொருள் உற்பத்தி என்ற சென்ற நிலையில் நாம் பார்த்ததுபோல, பெரிய இயந்திரத் தொழிற் சாலைகளில் தயாரித்த சாமான்களை விற்பனை செய்வதற்காக ஒருதரமான வாழ்க்கை முறையை பிறர்மீது சுமத்துவதற்கான எளிய முயற்சியாகவும் அது இருக்கக் கூடாது. ஒருவருடைய தனிப்பண்புகள் பிரகாசிப்பதைத் தடுப்பதாகவும் அது இருக்கக்கூடாது.

நம்முடைய நாட்டில் நான்காம் நிலையில் உள்ளவர்களுக்குச் செய்யக் கூடிய வேலை மிகவும் அதிகம். கிராமங்களில் கிராம வாழ்க்கையின் பலவேறு செயல்களை வகைப்படுத்திச் சௌகரியமாக வாழ்க்கை அமையுமாறு செய்ய வல்லவர்கள் இன்று பெரிதும் தேவை. கிராம மக்கள் காட்டு மிருகங்களைவிட இன்று அதிகம் அவதியுறுகிறார்கள். மிருகங்களாவது ஆரோக்கியமாகவும் சுறுசுறுப்பாகவும் வாழ்வதற்குச் சத்தை எப்படியோ தேடிக் கொள்கின்றன. சமூகத் துறையிலும் செல்வத்துறையிலும் இன்றுள்ள சூழ்நிலையானது சுய முயற்சி அனைத்தையும் போக்கிவிடுவதாக இருக்கிறது. இந்த நான்

காம் நிலையில் வாழ்பவர்கள் திக்கற்ற பாமர மக்களுடைய வாழ்க்கையைச் செம்மையாக நடத்துவதற்குத் திட்டமிட்டு அவரவர்களுடைய சொந்த மனப்போக்கு வெளிப்படுவதற்கான சந்தர்ப்பங்கள்நிறைந்த சாமானிய மனிதவாழ்க்கை அமையும்படி அவர்களுக்குச் சந்தர்ப்பம் தரவேண்டியவர்கள்.

இந்த நோக்கத்தோடு திட்டமிடுவதென்ருல் எடுத்துக்காட்டான நடுநிலை ஒன்று அமையவேண்டு மென்றும் அதற்கென்றே நாம் உழைக்கவேண்டுமென்றும் பொருளாகிறது. இந்த நடுநிலை நல்லமுறைபாக அமைந்தால் சமூகத்தி லுள்ளவர்கள் ஒவ்வொருவரும் தம் ஆக்கத்திறன்கள் அனைத்தையும் பூரணமாய்ப் பயன்படுத்தச் சந்தர்ப்பம் தரும். அமைத்துக்கொண்ட தரம் சரியானதா அல்லவா என்பதை அந்த நிலையில் ஏற்படும் மாறுதல்கள் விளைவிக்கும் பயனைக்கொண்டு முடிவு செய்யவேண்டும். இயற்கையான தரத்தைக் குறுகிய ஆயுட்காலத்தில் உயர்த்தவோ குறைக்கவோ இயலாது. அப்படி மாற்றினல், அது நோய்க்கு ஆரம்பமாகும். இயற்கையானது கோடிக்கணக்கான வருஷங்களாகவே வேலை செய்து இந்த ஆச்சரியகரமான மனிதவுடலை ஆக்கியிருக்கிறது. நமக்கு அமைந்துள்ள சீரணக்கருவி அமைப்பைப் போன்ற மிகவும் எளிமையும் ஆற்றலும் வாய்ந்த ஓர் அமைப்பை எந்த விஞ்ஞானியும் ஒரு சோதனைச் சாலையில் ஏற்படுத்த முடியாது. 'நம் இருதயத்தைப்போலத் தானே இயங்குவதாயும் தானே ஒழுங்குபடுத்திக்கொள்வதாயும் உள்ள ஒரு பம்பை எந்த என்ஜினியரும் இதுவரை செய்ததில்லை. கம்பியுள்ள தந்தியாயினும் சரி கம்பி இல்லாத் தந்தியாயினும் சரி, எந்த மார்க்கோனியும் நம் நரம்பைப் போன்ற ஒரு பூரணமான அமைப்பை அமைத்ததில்லை. சாமானியமாக நம் உடம்பும் மனமும் செய்யும் செயல்கிரமத்தை அறிவில்லாத மனிதன் மாற்றிவிடவோ, புதிதாய் அமைக்கவோ முடியாது.

ஆதலால், யாரும் தம் இஷ்டம்போல் வாழ்க்கையின் போக்கை மாற்றி அமைக்க முயல்வது வீணுகும்.இயற்கையோடு ஒத்துழைத்து எந்த விதத்தில் சூழ்நிலையானது இருந்தால் வாழ்க்கை செம்மையாக நடைபெறுமோ அந்த முறையில் அதை அமைக்க முயல்வதே நாம்செய்யக்கூடியது. இந்த நிலை அல்லது தரம்என்பது இயற்கையாகவே வகுக்கப்பட்டுள்ளது. இதை ஆராய்ந்து இயற்கைகளின் தேவைகளை உணர்ந்து அவற்றுக்கேற்ப நடப்பதே மனிதன் வேலை. இயற்கையின் தரத்திலிருந்து மாறுபட்டால் அது சமூகம் நிலைகுலையச்செய்யும்.

உடம்பினுடைய சாதாரண வெப்ப நிலையை மாற்றுவது முடியாது என்று வைத்தியர் எவருக்கும் தெரியும். வெப்ப நிலை சாதா

ரண நிலையைவிட அதிகமானால் ஜுரம் வருகிறது. குறைவானால் பலவீனம் உண்டாகிறது. இரண்டினாலும் மரணம் விளையும். ஓர் அளவுக்கு இருதயம் வேகமாகவோ குறைவாகவோ அடித்துக் கொள்ள முடியும் என்பது வாஸ்தவம். ஆனால் ஒரு மனிதன் தான் வாழ விரும்புகிற, ஜுரவேகம் போன்ற, செயல்களுக்கு ஒத்து இருதயமும் இயங்க வேண்டுமென்று அதை இயக்க முடியாது. இருதயத்தில் மிகுதியான வேலை கொடுத்தால் ரத்தக்கொதிப்பு ஏற்படும். இது அபாயத்தின் அறிகுறி. ஆகவே அந்தத் தரத்தையே நாம் புதிதாக வைத்துக்கொள்ளலாம் என்பது கூடாது. அதுபோல நம் தேவைகளுக்கு ஏற்ற சமதரம் ஒன்று இருக்கிறது. அது நிறைவேறினால், மனித உடம்பு மிகவும் உயர்ந்த முறையில் வேலை செய்கிறது. இது என்ன என்பதை அறிந்து எல்லா மனிதருக்கும் இந்தச் சமதரம் கிடைப்பதற்கு ஆவன செய்வதே திட்டங்கள் போடுவதன் நோக்கமாகும்.

ஆனால் துரதிஷ்டவசமாக இன்று ஸ்டர்லிங் நிதி என்ற பொன் நாணயத்தை அரியாசனம் ஏற்றிவிட்டோம். எல்லா நியாயங்களும் பணத்தை ஒட்டிய நியாயங்களாக இருக்கின்றனவே அன்றி மனிதனுடைய பண்புகளைக் கவனிப்பனவாய் இல்லை.

திட்டங்கள் ஏற்பட்டு இருக்கின்றன. அவற்றின் நோக்கம் அபரிமிதமான வெறும் பொருள் உற்பத்திதான். மனித இயல்பில் அவை கால் ஊன்றவில்லை. திட்டங்கள் செடியிலிருந்து கத்தரித்து எடுத்துவந்து மேஜைமேல் கிண்ணத்தில் வைத்து அலங்காரம் செய்யப்பட்டுள்ள பூக்களை ஒத்தவை. இவை அழகானவை என்பதில் சந்தேகம் இல்லை. கொஞ்ச நேரம் இவற்றின் மணமும் தோற்றமும் கெடாமலிருக்கின்றன. ஆனால் செடியிலிருந்து இவை கத்தரித்து எடுக்கப்பெற்றமையால் அழிவும் இவற்றிலேயே அடங்கி உள்ளது. இவற்றின் பெருமை எல்லாம் சொற்ப நேரம்தான்.

திட்டம் போடுபவர் ஒரு தோட்டக்காரரைப் போல இருக்க வேண்டும். முதலில் நிலத்தைப் பண்படுத்தி விதையை விதைத்துத் தண்ணீர் விட்டுத் தம் வேலைகளை முடித்தபிறகு விலகிநிற்கிறார். விதை முளைத்துத் தானாகவே செடி வளர்கிறது. பக்குவமான மண்ணிலிருந்து தனக்குத்தேவையான சத்தைஇழுத்துக்கொண்டு வளர்ந்து பூக்கிறது. ஆனால் கிண்ணத்தில் வைத்த பூக்கள் எவ்வளவு அதிகமாக இருந்தாலும், அலங்காரமாக இருந்தாலும், சிறிது நேரத்தில் அழிபவை. செடியோ அழியாது; ஏனெனில் இயற்கையிலிருந்து தன் வேர் மூலம் சாற்றை உறிஞ்சி வாழ்கிறபடியால் அதற்கு உயிர் இருக்கிறது. கிண்ணத்திலுள்ள பூவில் சாவுதான் மிச்சம். செடியிலுள்ள பூக்

களில் சில வாடிப் போகலாம். ஆனால் வேறு சில புதிதாகத் தோன்று கின்றன.

இதுபோல, திட்டமிடுவதிலும் மக்களின் வளர்ச்சிக்கு ஏற்ற நிலைமைகள் ஏற்படவேண்டும். திட்டத்தில் சொல்லப்பட்டவை நோக்கமும் அல்ல; முடிவும் அல்ல. இன்னதுதான் உற்பத்தி செய்ய வேண்டுமென்று முன்னதாகவே கணக்கிட்டுக்கொண்டு அதற் கென்று வேலை செய்யத் தொடங்குகிற முறையானது இயற்கையின் முறையல்ல. அப்படிப்பட்ட முறைகளினால் நிர்ப்பந்தமான சில பலன் கள் விளையக்கூடும். ஆனால் அவை இயற்கையான வளர்ச்சி அல்லாத படியால் விரைவில் அழியும். ஒரு சமயம் அழிவுக்குப் பின்னால் இருக்கும் தீய பயன்களையும் அவை விட்டுச் செல்லக்கூடும். இவை கிறிஸ்துமஸ் விருக்ஷம் போன்றவை. இந்த மரம் மெழுகுவர்த்தி தீபம் முதலியவைகளால் நன்றாக அலங்காரம் செய்யப்பட்டிருக்கும். பரிசுப் பொருள்களான மேளம் ஊதல் பொம்மை முதலியன அவிற் றில் ஏராளமாக வைக்கப்பட்டிருக்கும். ஆனால் இந்தப் பொருள்கள் அல்லது அலங்காரங்கள் அதற்குச் சொந்த மில்லாதபடியால் எதைக் குறித்தும் அந்த விருக்ஷம் பெருமை பாராராட்ட முடியாது. கிறிஸ்து மஸ் விருஷம் என்பது உயிருள்ள விருக்ஷத்திலிருந்து ஒடித்தெடுத்த ஒரு கிளை. ஆகவே அதன் வேர்கள் பூமாதேவியிலிருந்து உயிர்ச் சத்தைக் கிரகிக்க மாட்டா. ஆதலால், அதன் இலைகள் சிறிதுநேரம் வாடாமல் இருந்தாலும்கூட, பிறகு வாடி உதிரும். கிளையும் சீக்கிரத் தில் உலர்ந்துபோய் அடுப்பெரிக்கத்தான் தகுதி உடையதாக இருக் கும். அபரிமிதமான உற்பத்தி என்ற திட்டங்கள் எல்லாம் இதைப் போலத்தான் இருக்கும்.

திட்டங்கள் போடுவதில் முதல் நோக்கம் எதுவாய் இருக்க வேண்டுமென்றால் மனிதனுடைய திறன்கள் அனைத்துக்கும் பூரண வளர்ச்சிக்கான சூழ்நிலையும் சந்தர்ப்பமும் அமையுமாறு செய்வதா கும். ஒவ்வொரு மனிதரும் போதுமான ஆரோக்கியகரமான சம நிலை பொருந்திய உணவு பெறவேண்டும். வெயில் காற்றிலிருந்து உடம்பைப் பாதுகாக்கப் போதிய உடை வேண்டும். போதிய குடி யிருப்பு வசதி வேண்டும். தம் உடம்பையும் மனத்தையும் வாழ்க் கைக்காகத் தயாரித்துக்கொள்வதற்குப் பூரண சந்தர்ப்பம் வேண்டும். ஆரோக்கியத்தைப் பாதுகாக்கத்தக்க தூய்மையான சுற்றுப்புறம் அமைக்கப்பெறவேண்டும். மனிதர் உறவாடுவதற்கான தாராள மான வசதிகள் வேண்டும். சிக்கனமான உற்பத்தியும் பண்ட மாற்றும் நிகழ வேண்டும். இவைகளே திட்டமிடுவோரின் நோக்க மாகும். இவை நீங்கலாக மற்றெல்லா வசதிகளையும் மனிதருடைய

சொந்த முயற்சிக்கே விட்டுவிடவேண்டும். அப்படி விட்டால்தான் அவர்கள் தங்கள் சுய இச்சையையும் வாழ்க்கை மதிப்பு முறைகளையும் பிரயோகிப்பதற்கான இடம் ஏற்படும். இந்தப் பிரயோகத்தால் அவர்கள் வாழ்க்கையானது வெறும் காலம் தள்ளுதல் என்றில்லாமல் பயனுள்ள ஒன்ருக ஆகி உயர்ந்த நாகரிகமும் பண்பாடும் வளரச் செய்யும்; இவை நீடித்து நின்று நிச்சயம் மனித குல முன்னேற்றத்துக்கு உதவுவனவாய் இருக்கும்.

திட்டம் அமைக்கிற எந்த விதமான வாழ்க்கை முறையும், மனிதனுய்ப் பிறந்தவன் எந்த விதமான வாழ்க்கைமுறை தேர்ந்து கொள்ள விரும்புகிருன் என்ற உரிமையைப் போக்கமுடியாது. குறிப்பிட்ட வாழ்க்கை முறை மற்ற மனிதர்களுடைய உரிமைகளைப் பாதிக்கக்கூடாது என்பது ஒன்றுதான் நிபந்தனையாய் இருக்கலாம். ஒவ்வொருவரும் மனிதர் என்ற முறையில் தம்முடைய குறைந்தபட்சத் தேவையை பூர்த்திசெய்துகொள்ளப் பார்ப்பதுதான் திட்டமிட்ட வாழ்க்கையின் பொருள். இதற்கு மேலாக, அவரிடமுள்ள தனிப்பட்ட மதிப்புமுறை தொழிற்படுவதற்கு ஏற்றபடி விரிவான சந்தர்ப்பம் அவருக்கு அமையவேண்டும். திட்டமிட்ட வாழ்க்கை எதுவும் இவ்விதம் அமைய விடாமல் தனி மனிதர் தம் மதிப்பு முறைகள் வெளிப்பட்டுத் தொழிற்படுவதற்குள்ள சுயேச்சையை அளவுகடந்து கட்டுப்படுத்தினுலும் நீக்கினுலும், அது தனி வளர்ச்சிக்கு வழிகோலாமல், அணிவகுப்புப்போன்ற போக்கையே தருகிறது என்று நாம் குறை கூறலாம். இந்த அணிவகுப்பானது ஒரு மனிதனிடமுள்ள தனிப்பண்பைப் போக்கி மாற்றமுடியாத ஓர் இயந்திரத்திலுள்ள பல்லுச்சக்கரம் என்ற நிலைக்கு அவனைத் தாழ்த்திவிடுகிறது. இந்த அணிவகுப்பில் நன்மை இருந்தாலும்சரி, திறமைவளர்ந்தாலும்சரி, தொட்டில் முதல் சுடுகாடுவரை இவ்வித அணிவகுப்பு தனது குணச்சிறப்பை வெளிப்படுத்தும் சுதந்திரம் என்ற உரிமையை, அதாவது மக்கள் முன்னேற்றத்திற்கு உரிய முதல் தேவையை, பூர்த்தி செய்யாதபடியால், அதை நாம் கைவிடவே வேண்டும்.

ஆனுல், அணிவகுப்புக்கும் நிச்சயமாக இடமும் வேலையும் உள்ளன. ஒருவனுடைய தனிப் பண்பு அபிவிருத்தி அடைவது நமது நோக்கமல்லாமல் ராணுவத்திலோ தொழில்சாலையிலோ உள்ளதுபோல ஏதேனும் ஒரு கூட்டு முயற்சியே நம் நோக்கமாக இருக்கும் பட்சத்தில் அங்கு இந்த அணிவகுப்பு முறைக்கு இடம்உண்டு. அங்கு தனி ஒருவர் முக்கியமல்ல. மொத்தமாக எல்லோருடைய கூட்டு அறிவும் உழைப்பும் அங்கு முக்கியமாகின்றன. தனிப்பட்டவர் பொதுவான நோக்கம் எதுவோ அதன் பொருட்டுத் தாம் அகன்றுவிட வேண்டிய

வர். எல்லாவற்றையும் தழுவிய முடிவான கருத்து, அந்த நோக்கம் நிறைவேறுதல் ; தனிமனிதர் அது நிறைவேறுவதற்கு ஒரு சாதனம். அவ்வளவுதான். ஆனால் நமக்குத் தனிமனிதருடைய அபிவிருத்தியே நோக்கமாதலால், கூட்டமைப்பு என்பது அந்த நோக்கம் நிறைவேறுவதற்கான ஒரு வழி. ஆகவே நம்முடைய திட்டத்தில் அணிவகுப்பு முறைக்கு இடமே இராது.

ஓர் உதாரணம் பார்ப்போம். நல்ல முறையில் நடத்துகின்ற ஒரு பால் பண்ணையில் மாடுகளை நன் முறையில் தயாரித்த தீவனம் போட்டு, உரிய காலத்திலும் போதுமான அளவிலும் உப்புப் போட்டுத் தண்ணீர்காட்டி வசதியான கொட்டகைகளில் கட்டியிருப் பார்கள். அதைக் கொஞ்ச நேரம் காற்றுட வெயிலில் ஓட்டிக் கொண்டு செல்வார்கள். தினந்தோறும் குளிப்பாட்டுவார்கள். நேரப்படி பால் கறப்பார்கள். கேவலம் மிருகங்களைவிட, மிருக நிலை யாகிய காலம் தள்ளும் நிலையைவிட, மனிதன் மேலான நிலக்கு வர வேண்டுமானல் அவனுடைய தேவை இது ஆகாது. நன்ருய் ஒழுங்கு படுத்தப்பட்ட சிறையில் இவ்விதமான தினசரி முறைகள் இருக்கின் றன. அங்கு சரியானபடி உறங்காவிட்டாலும் ஓய்வோ உணவோ பெருவிட்டாலும் சிறையாளியின் ஆரோக்கியம் கெடுமாதலால் உறங் காமல் இருப்பது முதலியன குற்றமென்று சிறைவிதிகள் கூறும். கைதியின் உடம்பை அவ்வளவு கவனமாக அங்கு பாதுகாக்கிருர்கள். ஆனல் தேர்ந்துகொள்வதற்கான சுயேச்சையும் செயல் சுதந்திர மும் இல்லாத இது வாழ்க்கையாகாது.

ஆதலால் எந்தத் திட்டமும் நாற்புறத்திலும் கடக்க முடியாத சுவர் எழுப்பி வாழ்க்கையைச் சிறைவாசமாக்கி விடலாகாது என்பது முக்கியம். திட்டம் ஓர் வேலிபோல் இருக்க வேண்டும். மற்றவர் கள் வராமலும் பிராணிகள் மேயாமலும் வேலியானது பயிரைக் காக்கிறது. ஆயினும் இது போதுமான காற்றும் வெளிச்சமும் வருவ தைத் தடை செய்வதில்லை. இந்த நான்காம் நிலக்கு உரியவர்கள் பிற உயிர்களின் சேவைக்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்பவர்கள் ஆகியோருடைய ஆக்கத்திறன்கள் மக்களுக்குச் சுதந் திரவாழ்க்கையைத் தருவதற்கான வேலி போன்ற திட்டங்கள் அமைத்துத் தருவதில் செலவிடப் பெறுதல் வேண்டும்.

இங்கு நாம் திட்டத்தின் அலுவல் என்ன என்பதையும் அதற்கு என்ன இடம் உண்டு என்பதையும் மட்டுமே ஆராய்ந்தோம். இனி, திருப்திகரமான ஒரு திட்டத்துக்கு அடிப்படையாக இருக்கக்கூடிய சமதரமான வாழ்க்கைக்கு என்ன என்ன தேவை என்பதையும் ஆராய்வோம்.

**சேவை வாழ்க்கை என்ற நிலை** :—சேவை வாழ்க்கையில், சொந்த உரிமைகள் மறைந்து போய், வாழ்க்கையையே ஒழுங்கு படுத்தவல்ல கடமைகள் பிரதான அங்கம் வகிக்கின்றன. மனிதனுடைய சுய இச்சை என்பது அவனுடைய மிருகத்தன்மையைக் கட்டுப்படுத்தவும் சுயநலம் பற்றிய அவன் உடலையொட்டிய போக்குக்களைத் தேர்ந்தெடுத்த சிறப்பான துறைகளில் அறிவுபூர்வமாகச் செலுத்தவும் பயன்படுகிறது. வாழ்க்கை மதிப்பின் அளவுகோல் என்பது, ஒருவருடைய சொந்த இன்பத்தை அளிப்பதற்காகவன்றி பிறருடைய நன்மையை அளப்பதற்காவே அமைக்கப் பெற்றிருக்கிறது. ஆகவே, இங்கு நோக்கமானது, நீண்டகால நோக்குடையதாய் இருக்கிறது; உடனே ஏற்படக்கூடிய சொந்த லாபமென்ன என்பது கைகூட விரும்புகிற நோக்கமல்ல.

எனவே, இந்த நிலையிலுள்ளவரொருவரால் உற்பத்தியும் ஆக்கமும் விளைய வேண்டுமானால், எந்தச் சீர்திருத்தமும் திட்டமும் கூறுவதற்குமுன், சமூகத்தின் தேவைகளையும் குறைபாடுகளையும் அவர் தமக்குள் உணர்ந்திருப்பது மிகவும் அவசியமாகும். புத்தி பூர்வமாகத் தெரிந்து விமரிசனம் செய்வதால் மட்டும் பயன் விளையாது. குறுகிய எல்லைக்குள் சோதனைகளை நடத்திப் பார்ப்பதற்கு விஞ்ஞான சோதனைச்சாலை வேண்டியிருக்கிறது. அதில் செய்து வெற்றி கண்ட முறைகளைத்தான் மற்றவர்களுக்கு எடுத்துச் சிபாரிசு செய்யமுடியும். உணவுச் சத்தை ஆராயும் நிபுணர் வெவ்வேறு சத்துள்ள உணவுப் பொருள்களை வெள்ளெலி, புரு, குரங்கு முதலானவற்றுக்கு உண்பித்துப் பார்த்து என்ன பலன் ஏற்படுகிறதென்று சோதிக்கிறார். அதன்பிறகுதான் மக்களுக்கு எப்படிப்பட்ட உணவிருந்தால் சமநிலை உணவாகும் என்று அவர் தெரிந்து கூற முடிகிறது. அதுபோல, சமூகப் பொருளாதாரப் புனர்நிர்மாணம் அனைத்திலும், புதிய கருத்துக்களை மக்களிடையே நடத்திச் சோதித்துப் பார்ப்பது அவசியமாகிறது. ஆதலால், இந்த ஐந்தாம் நிலைக்குரியவர்கள் தாங்களே விஞ்ஞான நிபுணர்களும் வெள்ளெலிகளும் சேர்ந்து ஒன்றாக்கியது போன்ற தொண்டர்கள்.

சென்ற நான்காம் நிலைக்குரியவர்கள் பாமரமக்களுக்காகத் திட்டமிட வேண்டியவர்கள் என்பதைப் பார்த்தோம். சோதித்தறிந்த கொள்கைகளிலிருந்தே திட்டம் தயாரிக்க முடியும். இதிலிருந்தே ஐந்தாம் நிலை பிறக்கிறது. ‘அவசியம் ஏற்பட்டால், புதிய வழிதானே உண்டாகிறது’ என்பது பழமொழி. பிறருடைய தேவைகளை நாமே நம்முள் உணர்ந்து ஆக்கத்திறன்களும் நாம் பெற்றிருக்கும்பட்சத்தில், பிறருடைய கஷ்டங்களைப் போக்கும் வழிவகைகளைக் காண நாமே

வல்லவராக முடியும். இந்த நிலைக்குரியவர் பிறருக்காகத் துன்பம் பொறுப்பார் அல்லது பிறர் வாழ்விலேயே தம் வாழ்வைக் காண்பார். தன் உணர்ச்சியையும் சூழ்நிலையையும் பெரிதாக எண்ணுமல், பிறருடைய இன்பதுன்பங்களையும் நிலையையும் பெரிதாக எண்ணுவார். துன்புறுவோரோடு தாமும் துன்புற்று இன்புறுவோரோடு தாமும் இன்புறுவார். அவருடைய அளவுகோலானது பரோபகார மதிப்புடையதாயிருக்கும். தம் உரிமைகளை அவர் பிரதானமென்று கருதமாட்டார். மனித குலம் முழுமையும் தம் குடும்பமென்று பாவித்துத் திக்கற்றவர்களை ஆதரித்துப் பாதுகாப்பதில் தம் தந்தைமையைப் பயன்படுத்துவார்.

விஞ்ஞான ஆராய்ச்சியின் வரலாற்றை ஆராய்ந்தால், தங்கள் ஆராய்ச்சியில் கண்ட முடிபுகளைத் தங்கள்மீதே பிரயோகம் செய்து பார்த்துக்கொண்ட விஞ்ஞானிகள் பலருடைய வரலாறு தெரியவரும். அனேகர்இப்பரிசோதனையில்தங்களைப் பெருத்தஆபத்துக்குள்ளாக்கியிருக்கிறார்கள். சிலர் உயிரிழந்துமிருக்கிறார்கள். இவ்வீரர்களின் ரத்தத்தைக் கொண்டே மனிதவளர்ச்சி என்ற கட்டிடம் பூசப்பட்டிருக்கிறது. மகாத்மா காந்தி இடுப்பளவு துணியே தமக்குப் போதுமான உடை என்று முடிவுசெய்து வைத்திருக்கிறார். இதற்குரிய பல காரணங்களில் ஒன்று, இந்த நாட்டில் வாழும் பரம ஏழைகளான கோடிக்கணக்கான மக்களுடன் தம்மை ஐக்கியப்படுத்திக் கொள்ளுவதாகும். இம்மக்களுக்கு மழை காற்று முதலியவற்றிலிருந்து தங்கள் உடம்பைக் காத்துக்கொள்ள ஆடை இல்லை என்பது மட்டுமல்ல, தங்கள் நிர்வாண நிலையை மறைக்கப் போதுமான கந்தல் துணிகூட இல்லை.

நம் நாட்டில் சமூகப் பிரசினைகளும் பொருளாதாரப் பிரசினைகளும் மிகவும் அதிகம். இங்கு, பாமரமக்களுடைய தேவைகளையும் வறுமையையும் துன்பங்களையும் தாங்களே ஏற்று அவற்றுக்கு உரிய பரிகாரம் தேடவல்ல மக்களே இப்போது தேவை. இந்த நோக்கத்தோடுதான், மனித சோதனைச் சாலைகளான சர்க்கா சங்கமும் கிராமக் கைத்தொழிற் சங்கமும் காந்தியடிகளாலும் சாந்திநிகேதனம் தாகுராலும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இவை செய்யும் வேலையானது, தோட்டமுழுமைக்கும் வேண்டிய விதையும் நாற்றும் தருகிற நாற்றங்கால் செய்யும் வேலை போன்றது. இச்சோதனைச் சாலைகளில் செய்து முடிவுகண்ட பரிகாரங்கள் உலகத்தாருக்குக் கிடைக்கும்.

ஆதலால் மனிதகுலத்தை இன்று பாழ்படுத்தும் ஹிம்சையிலிருந்தும் போரிலிருந்தும் இந்தச் சேவை நிலைதான் பரிகாரம் தரமுடியும்.

மக்களுடைய வாழ்க்கைக்குப் பொதுவாகத் திட்டமிடுவதென்றால், எதிலும் தலையிடாமல் அவரவர் இஷ்டம்போல் நடத்திவிட்டுச் சுய நலத்தை வளர்ப்பது திட்டமாகாது. ஆனால் தன்னலமில்லாத நீண்ட கால நோக்குடைய கொள்கையைக் கொண்டுதான் திட்டமிடவேண்டும். இவ்விதம் திட்டமிடும்போது சமூகத்தின் அங்கமாயுள்ளவர் ஒருவர் எவ்வளவுதான் தாழ்ந்த நிலையிலிருந்தாலுங்கூட, எல்லோருடைய நன்மைக்கும் ஏற்றகாரியங்கள் செய்வதில் அவருக்கும் பூரண சந்தர்ப்பம் கிடைக்கும். அப்போது, வாழ்க்கையானது மாறுபடுகிற சந்தர்ப்பங்களைச் சிறிதும் கவனிக்காமல் மற்றவர்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதாக இராது. அன்றி, அந்தந்த நிலைமைக்குத் தேவையான சொற்ப மாறுதல்களை மட்டும் செய்து கொண்டு பின்பற்றும் முறையாகவும்இராது. சாமான்களை உற்பத்தி செய்யும் பெரும் முதலாளிகளின் நலனுக்குரிய விற்பனைக் கடையாகவும் அது விரிந்து வராது. விரிவான பொறுப்புக்களை அது புறக்கணித்து விட்டு ஒரு பிரிவாருடைய தேவைகளை மட்டும் ஆதாரமாகவும் கொண்டிராது. இப்படித் திட்டமிட்ட வாழ்க்கையானது, தனிப்பட்ட ஒருவருடைய நன்மையையும், ஒரு பிரிவினுடைய நன்மையையும் கருதுவதல்லாமல், எல்லோருடைய சுகத்தையும் தோற்றுவிப்பதாகவுமிருந்து, அயலாருடைய நன்மைக்கு எவ்விதக் கேடும் செய்யாதபடி அவரவர் தம்முடைய சொந்த முன்னேற்றத்துக்கும் உள்ளத்தின் வெளிப்பாட்டுக்கும் உரிய விரிவான சந்தர்ப்பங்களையும் துறைகளையும் வகுத்துத் தருவதாயிருக்கும்.

## அத்தியாயம் 11

## வாழ்க்கையின் தரங்கள்

சென்ற அத்தியாயத்தில் நாம் விவரித்துள்ளவற்றை ஞாபகப் படுத்திக் கொண்டால், மக்களுடைய குணவிசேஷம் அத்தனையும் அவர்கள் தாங்களாக வெளிப்படுத்திக் காட்டத்தக்க முறையில் அவர்களுடைய தினசரி வாழ்க்கை அமைக்கப்பெறுவது மிக்க அவசியமாகிறது. நாம் என்ன உண்கிறோம்? என்ன உடுத்து கிறோம்? எப்படி வாழ்கிறோம்? – என்பவை யாவும் நம்முடைய வாழ்க்கையைப் பாதிப்பது மட்டுமல்ல, மனித சமூகத்தின் எதிர் காலத்தையுமே பாதிக்கிறது. ஒவ்வொரு மனிதனும் என்னவிதமான வாழ்க்கை மதிப்புக்களைக் கைக்கொள்கின்றானோ அவை அவனுடைய அக நிலைமையை வெளிப்படுத்துகின்றன. அதுபோல

அவன் வாழும் விதமும், அவனுடைய குணவிசேஷங்களை எடுத்துக் காட்டும். இதற்கு, மக்கள் எல்லோரும் அனுசரித்து நடக்கக் கூடிய சில அளவைகள் இருக்கவேண்டும். இந்த அளவைகள் அல்லது தரங்களை முழுமையும் புறக் காரியங்களை வைத்தே நிர்ணயிக்கவேண்டும். இவை, ஒவ்வொரு மனிதனுடைய சகல திறன்களையும் வளர்த்து அதன் மூலம் அவன் தன்னுடைய குண விசேஷத்தைப் பெருக்கிக்கொள்வதற்கான சந்தர்ப்பத்தைப் பூரணமாய் ஒவ்வொருவனுக்கும் அளிக்கத்தக்கனவாய் இருக்கவேண்டும். இங்கே குறிப்பிடுகிற அளவை அல்லது தரமானது, உடல் சம்பந்தப் பட்ட வஸ்துத் தேவைகளுக்கு மட்டும் பொருந்துவதல்ல. ஆனால், இது வாழ்க்கையை வளம்படுத்தி மேன்மை தந்து, கேவலம் காலந் தள்ளுதல் என்ற நிலையைவிட மேல்உயர்த்தக் கூடிய பல்லாயிரம் அம்சங்களையும் பொறுத்ததாகும்.

இது உணவைப் பொறுத்தது என்பது இயற்கை. ஏனெனில், நம் மனித சாதனைகளின் தரத்தைக் காக்க உணவு அவசியமாக இருக்கிறது. வைத்திய வசதியையும் உடையையும் பொறுத்திருக்கிறது. உடையானது உடலை மூடுவது மட்டுமல்ல ; கலை உணர்ச்சியும் அழகுணர்ச்சியும் வெளிப்படுவதற்குச் சந்தர்ப்பம் தருகிறது. மேலும் இது கல்வியையும் பொறுத்திருக்கிறது. கல்வியானது மனிதனுள் அடங்கியுள்ள திறன்களையெல்லாம் வளர்ப்பதன் மூலம் வாழ்க்கையை விசாலப்படுத்தி ஒளி பொருந்தச் செய்கிறது. திறன்கள், பிடித்தமான உழைப்பின் மூலம் வளர்கின்றன. உழைப்பானது மனிதனிடமுள்ள ஆக்கப் பண்புகளுக்கெல்லாம் ஏற்ற சந்தர்ப்பங்களைத் தருகிறது. அன்றியும், மேற்குறிப்பிட்ட அளவை அல்லது தரமானது, தனிப்பட்ட மனிதன் மனித சமூகம் ஆகிய இருவருடைய வளர்ச்சிக்கும் ஏற்ற பிற துணையான வசதிகள் அனைத்தையும் பொறுத்திருக்கிறது.

இப்படிப்பட்ட தேவைகள் அனைத்தையும் ஒரு தரமானது பூர்த்தி செய்யவேண்டும் என்றால், அது தனிப்பட்டவருக்கும் சமூகத்துக்கும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாயிருக்கவேண்டும். ஒரு சாராருக்கு மட்டும் சௌகரியமானதா என்பதைப் பார்த்து அந்தத் தரத்தை நிர்ணயிக்க முடியாது. எவ்விதமான நிபந்தனையுமின்றி தனிப்பட்ட மனிதர், தம் இஷ்டம்போல் நடந்து கொள்ள விட்டு விட்டால், அவர் பின்பற்றுதல் என்ற நிலைக்கோ அல்லது சுவீகரித்தல் என்ற நிலைக்கோ உரியவராயிருக்கும் பட்சத்தில், அவர் வாழும் முறையானது முன்னேற்றத்துக்கு உதவாமல் சமூகத்துக்கே தீங்கு விளைவிக்கக் கூடும். அடுத்தபடியாக அவர் பொருள் உற்பத்தி

என்ற நிலைக்கு உரியவராயிருக்கும் பட்சத்தில், அவருடைய புதிய உற்பத்திகள் மற்றவர் உற்பத்தியோடு முரண்பட்டு முன்னேற்றத்தைத் தடை செய்யக்கூடும். தன்னுடைய ஏற்பாடுகளின்படி நடக்கலாம் என்று ஓர் உற்பத்தியாளரை விட்டுவிட்டால், அவர் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திச் பிரசாரம் மூலமாகவும், தன் வியாபாரத்துக் கேற்ற புது மோஸ்தர்களை ஏற்படுத்துதல் மூலமாகவும், தன் சரக்குக்களை விற்பனை செய்ய வழிவகைகளைத் தேடிக்கொள்வார். மற்றபடி, இந்த ஏற்பாடுகள் சமூகத்தினிடம் மட்டும் இருந்தால், தனிப்பட்ட பிரஜையானவன் ஏனென்று கேட்கவே இயலாத இயந்திரமாகிவிடுவான். முதலாளித்துவ ஆட்சி, ஏகாதிபத்தியம், பாசிசம், நாஜிசம், அரசாங்க சோஷலிசம் முதலான ஆட்சியின் கீழ் இன்று தனிப்பட்ட பாமர மனிதனுடைய நிலைமை இப்படித்தான் இருக்கிறது. உலகம் இன்று உற்பத்தியாளருடைய காலின்கீழ் நசுங்கிக் கிடக்கிறது. அவரிஷ்டப்படியே எல்லோரும் ஆடவேண்டியிருக்கிறது. இது உலகத்தில் பெரும் குழப்பத்தில் முடிந்திருக்கிறது. ஏனெனில், இதில் சம்பந்தப்பட்டவர்கள் கூட தங்களுக்கென்று ஏகோபித்த திட்டமெதுவும் வைத்திருக்கவில்லை. தங்களுக்கு வழிகாட்டுவதற்கென்று எந்த வாழ்க்கை நியதியையும் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. உற்பத்தியாளர் ஒவ்வொருவரும் எதேச்சையாக நடந்து கொள்ளுகிறார். இதன் பயனாய் வாழும் முறைகளில் எங்கு பார்த்தாலும் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது.

வாழ்க்கைத் தரம் என்று அனேகர் சொல்லும் போது அவர்கள் என்ன சொல்லுகின்றார்கள் என்று புரிந்து கொள்வதுகூடக் கஷ்டமாயிருக்கிறது. அவர்கள் கூறும் வாழ்க்கைத் தரமானது முழுமையும் பொருள் தெளிவில்லாத ஒரு தொடர்தான்.

எனவே, திட்டமாக எதையும் குறிப்பிடாதபடி இப்படிப்பட்ட வார்த்தைகளை எடுத்து சொல்லிக்கொண்டிருப்பது அனேகருக்குச் சௌகரியமாயிருக்கிறது. ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு வாழ்க்கைத் தரத்தையும் அதில் அடங்கியது என்ன என்பதையும்பற்றிச் சொந்தமான அபிப்பிராயம் வைத்திருக்கக்கூடும். ஒருவர், ரேடியோவும், மோட்டார் காரும் குறைந்த பட்ச வாழ்க்கைத் தரத்துக் குரியவை என்று நினைப்பார். மற்றவருக்கு, தினம் இரண்டு வேளை சோறு கிடைப்பது அபூர்வமான விருந்தா யிருக்கலாம். ஆதலால், நம் நாட்டிலுள்ள நிலைமைகளை நன்றாக ஆலோசித்துத் திட்டமான தரம் ஒன்றை நாம் நிதானித்துக் கொள்வது அவசியம். இப்படிப்பட்ட தரத்துக்குப் பொருளாதார அடிப்படை இருக்கவேண்டுமா அல்லது

கலாசாரத்தையோ சமூகத் தேவைகளையோ அடிப்படையாகக் கொள்ள வேண்டுமா? உயர்ந்த தரம் என்றால் என்ன, தாழ்ந்த தரம் என்றால் என்ன? உயர்ந்த தரம் என்றால் பொருள் தேவைகளை மிகவும் விரிவாக ஏற்படுத்தி அவற்றைப் பூர்த்தி செய்வது என்று பொருள்படுமா? குறைந்த தரம் என்றால் பொருள் தேவைகளை மிகவும் குறைத்துக் கொள்வது என்று பொருள்படுமா?

முந்திய அதிகாரங்களில் வாழ்க்கையை ஆராய்வதற்குரிய பல வேறு வழிகளையும் அவற்றின் பலவிதமான வாழ்க்கை மதிப்புக்களையும் நாம் கவனித்தோம். பணத்தை மட்டும் ஆதாரமாய் கொண்டோ, அல்லது தற்போதைக்கு எது பெரியதாய்த் தோன்றுகிறதோ அதைமட்டும் ஆதாரமாய் வைத்தோ வாழ்க்கையை நாம் மதிப்பிடக் கூடாதென்றும், ஆனால் வாழ்க்கையை மிகவும் விரிவான அடிப்படையில் அமைக்கக் கூடிய பல்வேறு அம்சங்களையும் பூரணமாய் ஆராய்வது நித்தியத்தையும் சத்தியத்தையும் நோக்கிச் செல்கின்ற சமநிலை பெற்ற வாழ்வுக்கு அவசியமென்றும் நாம் காண்போம். அந்த வாழ்வில் பணத்துக்குள்ள மதிப்பு மிகவும் குறைவு. மனித வாழ்வுக்குச் சோறு மட்டும் போதாது. மனிதனுடைய உடல் உள்ளம் உயிர் ஆகிய மூன்றின் ஆற்றல்களும் எதேச்சையாய் வெளிப்படுவதற்கும் அவன் பூரண நிலையை அடையச் செய்வதற்கும் ஏற்ற சந்தர்ப்பங்களை எது அவனுக்குத் தருகின்றதோ அதன் மூலம் தான் மனித வாழ்வு நடைபெறுகிறது.

பொதுவாக இங்கிலாந்தின் வாழ்க்கைத் தரம் மிகவும் உயர்ந்தது என்கிறார்கள். அந்த நாட்டில் தோட்ட வேலை செய்பவர் ஒருவர் இரண்டு மாடிக் கட்டிடத்தில் வாழ்தல் கூடும். அதன் மாடியில் நாலைந்து படுக்கை அறைகள், குளிக்கும் அறை, உயர்தரக் கக்கூஸ் முதலிய எல்லா வசதிகளும் இருக்கும். கீழ்த் தளத்தில் சாப்பிடும் இடம் அடுக்களை பண்டகசாலை முதலான அறைகள் இருக்கும். ஜன்னல்களுக்குக் கண்ணாடிக் கதவும்இலைக்கதவும் திரையும் போடப் பட்டிருக்கும். வாயில்களில் பனி புகாதபடி கனத்த திரை தொங்க விடப்பட்டிருக்கும். தரையில் அலங்காரக் கம்பளம் விரித்துச் சுவரில் அலங்காரக் காகிதம் ஒட்டியிருக்கும். ஒவ்வோர் அறையிலும் அதற்குரிய எளிமையான ஆடம்பரமில்லாத பொருத்தமான மேஜை, நாற்காலி முதலிய போதிய சாமான்கள் இருக்கும். உதாரணமாக சாப்பாட்டுக் கூடத்தில் பெரிய மேஜையும், அதற்கேற்ற கை வைக்காத நாற்காலிகளும், கண்ணாடி பதித்த பக்க மேஜையும், மேஜை விரிப்பு, பீங்கான் கத்தி வகையராவும் இருக்கும். மேஜைக்கேற்ற கிண்ணங்கள், தட்டுகள் கரண்டி முதலியன குழம்பு, மீன், புலால்

இனிப்பு, பழவகை முதலியவற்றுக் கேற்ற வெவ்வேறு விதமாய் இருக்கும். அந்நாட்டில் வெவ்வேறு பண்டத்துக்கு வெவ்வேறு கருவிகளை உபயோகிப்பது வழக்கம். மீனுக்கேற்ற கத்தியும் முள்ளும் ஒருவகை. மற்ற இறைச்சிக்கேற்ற முள்ளும் கத்தியும் மற்றொரு வகை. இவற்றைக் கொண்டுவந்து பரிமாறும் பாத்திரங்கள் இன்னும் ஒருவகை. ஒருவர் மட்டும் சாப்பிட உட்கார்ந்தாலே கழுவி வைப்பதற்குப் பாத்திரம் கரண்டி முதலிய கருவிகள் சுமார் ஐம்பது பொருள்கள் இருக்கும். இந்த வாழ்க்கையைத்தான் பொதுவாக அந்த நாட்டில் உயர்வான வாழ்க்கை என்று கருதுகிறார்கள்.

ஆனால் இந்தியாவிலோ நிலைமை வேறு. ஒரு ராஜ்யத்தின் மந்திரி பலகோடி மக்களுடைய வாழ்க்கையை நிர்ணயிக்கும் பொறுப்புடையவர். மிகவும் நாகரிகம் பெற்றவர் என்று இவரைச் சொல்வது மிகவும் பொருத்தமாகும். இவருடைய வீடு அரண்மனை போன்று பெரியதாக இருந்தபோதிலும் கூட, மேஜை நாற்காலி முதலான எந்தச் சாமானும் இல்லாமலே இருக்கலாம். அவ் வீட்டிலுள்ள கல்யாண கூடத்தில் சலவைக் கல்லோ அல்லது செங்கல் தளவரிசையோ போட்டிருக்கலாம். இவை தண்ணீர் விட்டுச் சுலபமாக அலம்பிச் சுத்தம் செய்யத்தக்கனவாய் இருக்கும்.



குப்பையும், தூசும் சேர்த்துக் கொள்ளக்கூடிய சமுக்காளம் அங்கு விரிக்கப்படாமலே இருக்கலாம். இந்த மந்திரிகூட தென்னிந்திய

மக்கள் தங்கள் வீடுகளில் வாழ்வது போலத் தம் வீட்டில் வெறுங் காலுடன் தான் நடப்பார். தரையில் ஒரு சிறு ஆசனம் போட்டுத் தம் முன் ஒரு வாழையிலை போடச்செய்து அதில் உணவு அருந்து வார். கத்தியும் முள்ளும் வைத்துச் சாப்பிடும் கலை அவருக்குப் பழக் கம் இருக்காது. இது கலைதான் : சாதாரண மக்களுக்கு உரியதல்ல, எளிதிலும் பழக்கமாகாது. கடவுள் கொடுத்த விரலால் எடுத்து அவர் சாப்பிடுகிறார். சாப்பிட்டு முடித்ததும் இலையை அலம்ப வேண்டியதில்லை ; தூக்கி எறிந்தால், அதை அங்கு வருகிற ஆடு தின்று, தம்மை வளர்ப்பவருக்குப் பால் கொடுக்கிறது. அவர் கையைத்தான் அலம்ப வேண்டியிருக்கும். சுத்தம் செய்ய வேறு எதுவும் இல்லை. முன்னதோடு ஒப்பிட்டால் இதைத் தாழ்வான வாழ்க்கைத்தரம் என்று சொல்வார்கள்.

உயர்வு தாழ்வு என்ற சொற்களை இப்படி உபயோகிப்பது பொருத்தமாகுமா ? முன்னே சொன்ன வாழ்க்கையின் அளவை அல்லது தரம் என்பதில் செயற்கையாய் உண்டாக்கப் பெற்ற பொருள்களின் மிகுதியான தேவை பொருந்தியிருக்க வேண்டும் என்றால், அப்போதுதான் இந்தச் சொற்களுக்கு அர்த்தம் உண்டு. ஆனால் இதற்கு மாறாக நாம், மனிதனிடமுள்ள சிறந்த பண்புகளெல் லாம் வெளிப்படுவதற்கு எந்த வாழ்க்கை சந்தர்ப்பம் கொடுக்கிறதோ அதுவே நல்லதென்று கருதினால் அப்போது மந்திரியினுடைய வாழ்க்கை உயர்ந்த தரமாகவும் பிரிட்டிஷ் தோட்டக்காரனுடைய வாழ்க்கை தாழ்ந்த தரமாகவும் ஆகின்றன. பொருளையே பிரதான மாய்க்கொண்ட வாழ்க்கைத் தரங்களை உயர்வு தாழ்வு என்று சொல் வதைவிட சிக்கல் எளிமை என்று சொல்வதே பொருத்தமாயிருக்கும். மந்திரியினுடைய வாழ்க்கை உயர்ந்தது ஆனால் எளிமையானது என் றும், பிரிட்டிஷ் தோட்டக்காரனுடைய வாழ்க்கை தாழ்ந்தது ஆனால் சிக்கலானது என்றும் நாம் சொல்லலாம். தற்போதுள்ள சொல் லாட்சியைப் பார்த்தால், சிக்கலான வாழ்க்கைத் தரம் மனோதத்துவ ரீதியாக வேண்டுமென்றே உயர்த்திச் சொல்லப்பட் டிருப்பதாகத் தோற்றுகிறது. ஏனெனில் சாமான் உற்பத்தியாளருக்கு இதுவே விற்பனை யாவதற்குப் போதுமான சந்தர்ப்பமளிக்கிறது. இந்த வாழ்க்கைத்தரத்தைச் சிக்கலானது என்று பெயர் வைத்துவிட்டால், புத்திபூர்வமாக யார்தான் பிறகு இதை ஏற்பார்கள் ?

இந்த சிக்கலான வாழ்க்கைத் தரம் தன்னிடத்துமோகம் கொண் டவனைப் பிழுக்கை வேலை செய்பவனாக ஆக்குகிறது. சூரிய உதயம் முதல் இரவு வரை அந்தத் தோட்டக்காரனுடைய மனைவியானவள் தன் வீடு சுமாரான அளவு சுத்தமாக இருக்கவேண்டுமென்று

விரும்புவாளேயானால் செயற்கையான ஒரு கருவியைக் கொண்டு கம்பளங்களைப் பெருக்கியாக வேண்டும். திரைகளையும் மற்ற மேஜைத் துணி முதலியவற்றையும் துவைத்துலர்த்த வேண்டும். தட்டு கரண்டி முதலியவற்றையும் சமையல் பாத்திரங்களையும் கழுவியாக வேண்டும். இவ்வளவு கஷ்டங்கள் அல்லாமல், கடைக்குப் போதல், சமைத்தல் முதலான வழக்கமான வேலைகளையும் அவளே செய்ய வேண்டியிருக்கிறது. ஒரு முள்ளை இடுக்கெல்லாம் சுத்தமாகத் துடைப்பது என்றால், கையலம்புவதைவிட அதிகம் நேரம்பிடிக்கும். ஆகவே, இப்படிப்பட்ட சிக்கலானவாழ்க்கைத்தரங்கள்வழங்குகின்ற நாட்டில் பிள்ளைகள் என்கிற தொந்தரவை பெண்கள் ஒழித்துவிட விரும்புவதில் என்ன ஆச்சரியமிருக்கிறது? அங்கே எங்கு பார்த்தாலும் “குழந்தையும் நாயும் உள்ளே வரக்கூடாது” என்றஅறிக்கைப் பலகை இருப்பதைப் பார்க்கலாம். ஏற்கனவே, மிகவும் அதிகமாக இருக்கிற தினசரி வேலை அட்டவணையில் தாய்மை இன்னும் அதிகக் கஷ்டத்தைத்தான் தருகிறது. ஆனால், மக்கள் வைத்துக்கொண்டிருக்கிற வாழ்க்கை மதிப்பு எவ்வளவு கீழானது என்பதையே இந்தச் சிக்கலான வாழ்க்கைத் தரத்திலுள்ள மோகம் காட்டுகிறது. பிரசாரம், விளம்பரம், புதிய மோஸ்தர் அமைப்பு முதலான தங்களிடமுள்ள பலவகைச் சாதனங்களால் உற்பத்தியாளர்கள் இந்த வாழ்க்கை முறையைக் குடித்தனப்பெண்கள் அனுசரிக்கும்படியும், அனுசரித்து என்றென்றைக்கும் தங்களுடைய வாழ்க்கைக்காரர்களாய் இருக்கும்படியும் செய்ய முடிகிறது. இப்படிப்பட்ட மாயவலையில் நாம் விழாது காத்துக்கொள்ள வேண்டும். இவை நம்மை வெறும் பொருள் தேவைக்கு அடிமையாக்கி, வீணானவற்றைக் கொண்டு நம்முடைய நேரத்தை வீண்போக்குவதற்குப் பதிலாக நன்மை எதுவும் தருவதில்லை. இப்படிப்பட்ட வீண் சுமை எதுவும் நம் வாழ்க்கையில் ஏற நாம் இடம் கொடுக்கலாகாது.

இவ்விஷயத்தில் சம்பந்தப்பட்டவர்கள், வீட்டில் உழைப்பை மிச்சப்படுத்துகிற சாதனங்களை உபயோகப்படுத்தினால் பெண்களுக்கு எவ்வளவோ ஓய்வு கிடைக்குமென்று ஏமாற்று வார்த்தை பேசுகிறார்கள். ஆனால், மனித உழைப்பை மிச்சப்படுத்துகிற ஒருவித யந்திரத்தை நம் வீட்டில் கொண்டு வந்து நாட்டின மாத்திரத்தில் மற்றொரு இயந்திரம் தயாராகிறது. இந்த யந்திரம் முந்தையதில் மிச்சமான பணத்தையும் நேரத்தையும் உண்டு விடுகிறது. இப்போது வீட்டுவேலை செய்யும் தாய்மாரின் நிலை முந்தைய நிலையை விடக் கீழாய்த்தானிருக்கிறது.

உதாரணமாக, பிரிட்டிஷ் தோட்டக்காரன் மனைவியைப் பார்ப்போம். தரையில் விரிக்கும் கம்பளங்களை முன்னமே கூலியாள் வைத்து உதறிச் சுத்தம் செய்து வந்தார்கள். இப்போது 'வாகுவம் க்ளீனர்' என்ற கருவி இதன்பொருட்டு ஏற்பட்டுள்ளது. கூலியாள் வேலையை இக்கருவி போக்கிவிட்டது. பிரயாணம் செய்து விற்பனை செய்கிற வியாபாரி யொருவர் இவ்வூர் வந்து இந்தத் தோட்டக்காரர் மனைவியிடம் இந்தக் கருவியின் அற்புதமான வேலைத்திறத்தைப் பற்றிப் புகழ்ந்துகூறிக் கம்பளம் சுத்தம் செய்கிற கடினமான வேலைக்குக் கூலியாளை அமர்த்தாமல் இந்தக் கருவியை உபயோகித்தால், வருஷந்தோறும் இவ்வளவு தொகை மிச்சமாகுமென்றும் அவள் ஆயுட்காலத்தில் வட்டிசேர்த்துப் பார்த்தால் இது எவ்வளவு பெருந்தொகையாகுமென்றும், சிக்கன வாழ்க்கையில் விருப்பமுடைய அவளிடம் எடுத்துக் காட்டியிருப்பார். இவருடைய விளம்பரத் திறமையில் அவள் மயங்கிப்போய் ஒரு கருவி வாங்கியிருப்பாள்; இதனால் அவளுக்கு வருஷத்தில் சில ஷில்லிங் பணம் மிச்சமாகியிருக்கவும் கூடும். ஆனால் இப்போது இவள், வேலையை மிச்சப்படுத்தும் இந்தக் கருவியைக் கொண்டு, சுத்தம் செய்யும் வேலையைத் தானே செய்ய வேண்டியிருக்கிறது. சில வருஷங்களானதும், கொஞ்சம் தொகை இவள் இவ்விதமாக மிச்சப்படுத்திச் சேர்த்ததும், அதே வியாபாரி, பாத்திரம் கழுவுகிற புதிய கருவியொன்றை அவளிடமே விற்பனை செய்ய வருகிறான். மறுபடியும் முன்போலவே இதன் சிறப்பை எடுத்துக் கூறுகிறான். அவள் சேர்த்துவைத்த பணம் போதவில்லை என்றால், கருவியின் கிரயத்தைத் தவணை தவணையாகச் செலுத்தி விடலாம் என்று சொல்லுகிறான்; அல்லது வாடகைக் கிரயமுறை என்ற ஒரு திட்டப்படி வாங்கிக்கொள்ளலாம் என்கிறார். அத்திட்டமாவது, கையிலுள்ள தொகையை அப்போதே கொடுத்துவிட்டு, கருவியைப் பெற்றுக் கொள்ளலாம்; பிறகு ஐந்தாறு வருஷம் வரையில் வருஷம் இவ்வளவு என்று தவணையாகச் செலுத்துவது; செலுத்தி முடிந்தபின் கருவி அவளுடைய பொருளாகிவிடும். இந்த மாயவலையில் அவள் விழுகிறாள்; வருங்காலத்தில் தனக்கு வரவிருக்கும் மிச்சத்தையும் இப்பொழுதே பிணைபடுத்திவிடுகிறாள். பக்கத்திலிருந்து வந்து தினமும் அரை மணிநேரம் தன் வீட்டுப்பாத்திரங்களைத் துலக்கிக் கொடுத்த கிழவியை இப்போது அவள் நீக்கிவிட முடிகிறது. இதனால் வாரம் இரண்டு ஷில்லிங் செலவு மிச்சமாகிறது; ஆனால் அவள், தானே இந்தக் கருவியை எடுத்து வேலை செய்ய வேண்டி வருகிறது. இந்த இரண்டு கருவிகளில் எதிலாவது பிழை ஏற்பட்டு

விட்டால், கம்பெனியார் தங்கள் ஆளையனுப்பி அதைப் பழுதுபார்க்கச் செய்கிறார்கள் ; இதன் பொருட்டுக் கம்பெனிக்குச் சொற்பக் கட்டணம் செலுத்தினால் போதும். மனித உழைப்பை நீக்கி இவ்விதம் கருவியை உபயோகிப்பதால் மிச்சமாகும் உழைப்பையும் நேரத்தையும் உற்பத்தியாளரே எடுத்துக் கொள்கிறார்கள். தோட்டக்காரன் மனைவியோ, பிறர் வேலையை நீக்கிவிட்டமையால், கழுதை போல எல்லா வேலையையும் தானே செய்ய வேண்டி யிருக்கிறது. இந்த 'யந்திர ஊழிய'ரைக் கவனிக்க அவள் அதிக நேரம் செலவிட நேர்கிறது. ஓய்வு கிடைக்கும் என்று சொல்லியதெல்லாம் வெறும் மாயையாகி விட்டது. பணம் ஏதேனும் மிச்சமாயிற்று என்றால், அது உழைப்பை மிச்சப்படுத்துகிற மற்றொரு கருவிக்காகச் செலவு செய்யப்படுகிறது. முடிவில் அவளுக்கு வேலையொன்றும் மிச்சமாவதில்லை. வாஸ்தவத்தில் அவள் தன் கருவிகளை இயக்குவதில் முன்னைவிட அதிகமாகவே உழைக்கவேண்டி யிருக்கிறது. வேலை வேண்டாம் என்று இங்கு ஒதுக்கப்பட்ட மக்கள் முடிவில் வேலைக்கும் கூலிக்குமாகப் பெரிய தொழிற்சாலைகளின் வாயிலில் போய் நிற்கிறார்கள். இவர்கள் கதையை நாம் பின்னர் கவனிப்போம்.

இனி, தோட்டக்காரன் மனைவியின் வாழ்க்கைத் தரமானது அவளுடைய உயர்ந்த திறன்கள் யாவும் சுயேச்சையாக வெளிப்படுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்கும் வகையில் மாறுதல் பெற்றிருக்கிறதா? மேற்கூறிய இந்தச் சிக்கலான தரம் அவளுக்குச் சிந்தனை செய்து பார்ப்பதற்கு முன்னிலும் அதிக நேரம் தந்திருக்கிறதா? இப்படிக்கின்றி, ஒவ்வொரு காரியத்தையும் அவள் தானே தனியாகக் கவனிக்க வேண்டியிருப்பதால், ஒரு பத்திரிகை எடுத்துப் புரட்டவுங் கூட அவளுக்கு நேரமிராது. காலை முதல் இரவுவரை அவள் பிழுக்கை வேலை செய்யவேண்டி யிருக்கிறது. இவ்வளவும் எதற்காக? அவள் நேரம் முழுமையும் வேலையாகிவிட்டது. அந்த வேலையில் உண்மையான வாழ்க்கைக்குச் சம்பந்தமில்லை. இது உண்மையான ஜீவனமாகுமா? வெறும் காலந்தள்ளுதல் என்ற நிலையை விட இது இன்னும் கீழானது.

இதற்கு மாறாக, எளியவாழ்க்கையானது, உயர்ந்தவாழ்க்கையாயிருத்தல் கூடும். மனித வாழ்வில் மேலாயுள்ளதெல்லாவற்றையும், 'சிக்கல்' வாழ்க்கையினும் சிறப்பாகவே இது தன்னகத்தே கொண்டிருக்க முடியும் ; சிக்கல் வாழ்க்கையோ, பிறருடைய அமைப்பைப் பின்பற்றுவதால், ஒருவருடைய குணச்சிறப்பை அழித்தே விடுகிறது.

இனி, உண்பது என்று பார்த்தால், இந்திய முறையில் உண்டாலும், மேலைநாட்டு முறையில் உண்டாலும், உணவுச்சத்து ரீதியாக

அதில் வேற்றுமை இல்லை. இந்திய முறையில் அனேக சௌகரியங்கள் உள்ளன; இது எளிமையானது, சுத்தமானது. பரிமாறுதலில் கலையுணர்ச்சி வெளிப்படவும் இது இடங்கொடுக்கிறது. பசுமையான புதிய வாழைக் குருத்தில் பரிமாறப்பட்ட பலகறிகளுடன் கூடிய உணவைவிட வர்ணஜாலங்கள் பொருந்திய காட்சி வேறென்ன இருக்கிறது? வெண்மையான சாதம் அல்லது சப்பாத்தி, மஞ்சள் நிறமான பருப்பு, வெண்மை நிறமான தயிர், சிவப்பு நிறமான துவையல், பழுப்பு நிறமான ஊறுகாய், பச்சை சிவப்பு மஞ்சள் முதலான பலநிறம் பொருந்திய கூட்டும் கறியும் ஆகிய இவை சாப்பிடத் தொடங்குமுன் கண்ணுக்கே மிக்க கவர்ச்சி தருகின்றன. உண்டு முடிந்ததும் இலையை எடுத்தெறிகிறோம். தரையை மட்டுந்தான் துப்புரவு செய்யவேண்டியிருக்கிறது. உண்பவர்கள் உண்ட பின் கையை அலம்புகிறார்கள். தண்ணீர் விட்டுப் பல் தேய்த்து வாய் கொப்புளிக்கிறார்கள்; இது சுகாதாரத்துக்கு ஏற்ற மிகவும் சிறந்த பழக்கம். ஆனால் கத்தியும் முள்ளும் உபயோகிக்கிற நாகரிகக்காரர்கள் இந்த நல்ல பழக்கங்களை விட்டுவிட்டார்கள். அதிகப்படியாக அவர்கள் செய்வதென்றால், விரல் மாத்திரம் கொள்ளுகின்ற ஒரு கிண்ணம் தண்ணீரில் தங்கள் விரல் நுனியை மட்டும் நனைத்து அதையும் கைக்குட்டையால் துடைத்துவிடுகிறார்கள். ஆகவே, மிகவும் சிக்கலான மேலைநாட்டு முறையில் சிறப்போ உயர்ந்த தரமோ எங்கே இருக்கிறது? வாழ்க்கையின் சிக்கலான முறையானது செலவை அதிகமாக்கி அதற்குப் பொருந்த எவ்வித நன்மையையோ கலையையோ உண்டாக்கவில்லை. ஆதலால், முன்னமே குறிப்பிட்டது போல உயர்தரம் தாழ்தரம் என்று சொல்வதற்குப் பதிலாக மேலைநாட்டு வாழ்க்கை சிக்கலானதென்றும் நம் நாட்டு வாழ்க்கை எளிமையானதென்றும் சொல்வது மிகவும் பொருத்தமாக இருக்கும்.

குறிப்பிட்ட ஒரு வாழ்க்கை முறையின் எல்லைக்குள், உயர்ந்த தரம், தாழ்ந்த தரம் என்று சொல்வது வெவ்வேறு தன்மைகளைக் காட்டக்கூடும். மிகவும் சன்ன நூலால் நெய்த வேட்டியை உடுத்துகின்ற ஒருவர் முரட்டுத் துணியை உடுத்துபவரைவிட உயர்ந்த தர வாழ்க்கையை உடையவராக இருக்கலாம். ஆனால், மேலை நாட்டு முறையில் தையல்காரனால் தயாரிக்கப்பட்ட கோட்டும் சர்ட்டும் காலரும் ட்ரவுசரும் தொப்பியும் அணிபவர் அதைக் காரணமாய்க் கொண்டே வேட்டியும் துண்டும் போட்டுக் கொள்பவரை விட உயர்ந்த தரம் உடையவராகமாட்டார். தொப்பிக்காரர் மேலை நாட்டாரைப் பின்பற்றின சிக்கலான தரமுடைவர். ஆனால் வேட்டிக்காரர் தமக்கென்று சொந்தமான வாழ்க்கை உடையவர்.

ஏனெனில், சீதோஷ்ண நிலையை அனுசரித்து அவருடைய விருப்பம்போல் அமைந்த நெசவு உடைய வேட்டியை அவர் உடுத்துகிறார். அவ்வேட்டியும் அந்தப் பக்கத்திலேயே நெசவானது. அதுபோல வெறுஞ்சாதமும் மிளகாய்த் துவையலும் ஊறுகாயும் உண்பவர் கீழான வாழ்க்கைத்தர முடையவர்; ஆனால் சமநிலையான உணவை உண்பவர் உயர்ந்த தரமுடையவராவார்.

கொலை வாழ்க்கை அல்லது கொள்ளை வாழ்க்கை முறையை உடைய ஒருவருடைய வாழ்க்கை சேவை வாழ்க்கையை உடையவருடைய வாழ்க்கையை விடக் கீழானதென்பது தெளிவு. கோடீசுவரருடைய வாழ்க்கையின் தரம் எவ்வளவுதான் செலவு நிறைந்ததாயிருந்தாலும் நாட்டின் சேவைக்காகத் தம் நேரத்தை செலவிடும் ஊழியருடைய வாழ்க்கையைவிடத் தாழ்ந்ததென்றே கருதவேண்டும்.

முந்திய உதாரணத்தில் இந்திய மந்திரியைப்பற்றி நாம் பேசினோம். அவர் கூட்டு வாழ்க்கை முறைக்கு உரியவர். அவர் தம்முடைய வாழ்க்கையின் விதம் எவ்விதமாக இருந்த போதிலும் கூட பிரிட்டிஷ் தோட்டக்காரரை விட உயர்ந்ததர வாழ்க்கையை உடையவராவார். இந்தத் தோட்டக்காரர் எவ்வளவு சிறப்பாய்ச் சொன்னாலும், முயற்சி வாழ்க்கைமட்டுமே உரியவர்.

தற்கால வாழ்க்கையின் போக்கானது எப்படியிருக்கிறதென்றால், போட்டி மூலம் சிக்கலை அதிகரித்து, இதனால் மனிதப் பண்பின் தரத்தைக் குறைத்துப் புதுமோஸ்தர்கள் வழியாகச் செல்வதாகவே இருக்கிறது.

அமெரிக்காவில் ஜீவனம் பற்றிய போலிக்கருத்துகள் பரவுவதால் குடும்பவாழ்க்கை விரைவில் சிதறிப்போய் வருகிறது. வேலையை மிச்சப்படுத்தும் மேற் குறிப்பிட்ட சாதனங்களைக் கொண்டு, புருஷனும் மனைவியும் ஒன்றிரண்டு அறைகளில் வாடகைக்கு வசிக்கலாம். காலையில் புருஷன் வேலைக்குப் போகிறான்; மனைவியும் போகிறாள். போகிறவழியில் ஏதேனுமொரு ஹோட்டலில் இரண்டு பேரும் இரண்டு ரொட்டி வாங்கித் தின்று விட்டுப் போகிறார்கள். மத்தியானம் தாங்கள் வேலை செய்யும் தொழிற்சாலையின் ஹோட்டலில் சிற்றுண்டி அருந்துகிறார்கள். மாலையில் சந்தித்து மறுபடியும் ஒரு ஹோட்டலில் உணவு அருந்துகிறார்கள். பிறகு இருவர் சம்பாத்தியத்தையும் வைத்துக்கொண்டு முடிந்தால் ஒரு காரிலேறிச் சுற்றிவருகிறார்கள். இரவில் ஒரு சினிமா பார்த்துவிட்டு வீடு திரும்பி ரேடியோ வைக்கிறார்கள். வீட்டிலோ சமையல், சாப்பாடு, குடும்பம் நடத்துவது முதலான எந்த வேலையும் இல்லை. பிள்ளை பெற்று வளர்ப்பதை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் வாழ்கிற

உயர்தர வாழ்க்கையில் அது சாத்தியமும் இல்லை. அவர்களே தொழிற்சாலைகளுக்கு வேலைக்காரர்கள் தயாராய்க் கிடைக்கவேண்டு மென்ற நோக்கத்தோடு உயர்ந்த தரத்தை ஏற்படுத்திவைத்திருக்கிற இயந்திர உற்பத்தியாளருக்காக அடிமை வேலை செய்பவர்கள். பிரிட்டிஷ் தோட்டக்காரரின் மனைவிக்கு உதவி செய்த கூலியாட்களும், பணிப்பெண்களும் மற்ற வீட்டு வேலைக்காரர்களும் இவ்விதம் தொழிற்சாலை வாயில்களில் காத்துக்கிடந்து தங்கள் வாழ்க்கைத் தரம் உயர்த்தப் பெற்றிருக்கிறார்கள்.

இவ்விதமான உயர்ந்த தரம் வேண்டுமென்று எடுத்துச் சொல்பவர்கள், பரோபகார நோக்கங்கொண்டு மக்கள் நன்மை மேம்பட வேண்டும் என்பதற்காகச்சொல்லவில்லை. சம்பந்தப்பட்டவர்களுடைய சுயநலத்துக்காகவே இவ்விதம் சொல்லுகிறார்கள். ஆலைச் சொந்தக்காரர்கள் வீட்டு வேலைக்காரர்களையெல்லாம் இவ்விதம் தொழிற்சாலை ஊழியராக ஆக்குவது போக இவ்விதத் தரங்களை ஏற்படுத்துவதால் செயலிலும் நடத்தையிலும் தங்கள் ஊழியரிடையே சுயேச்சையில்லாமல் போக்கி விடுகிறார்கள். வாழ்க்கை சம்பந்தப்பட்ட தரம் உயர உயர உழைப்பாளிடம் முதலாளியோடு பேரம் செய்வதற்குள்ள சக்தி குறைந்து போகிறது.

மில் சொந்தக்காரானவர் தம்முடைய தொழிலாளிகள் அடிக்கடி இடம் மாறாமல் ஒழுங்காக வந்து வேலை செய்தால்தான் தம் மில்லினுடைய உற்பத்தி ஒழுங்காகவும் குறையாமலும் இருக்கும் என்று எண்ணுகிறார். ஆகவே, அவர்களிடை ஒரு சிக்கலான வாழ்க்கை முறை ஏற்பட வேண்டுமென்று திட்டமிடுகின்றார். இதற்கு உயர்ந்த தரமென்று பெரிய பெயர் கொடுக்கிறார். இந்த நோக்கம் நிறைவேறும்பொருட்டு அவ்வேலையாட்களுக்கு அதிகச் சம்பளம் கொடுத்து, ஊழிய நலத்திட்டத்தையும் ஆதரிக்கிறார். ஹோட்டல், ஊழியர் சங்கம், தேநீர்க்கடை, விளையாட்டு, சினிமா, நல்ல வீடமைப்பு முதலிய தொழிற்சாலை வாழ்க்கைக்குரிய வசதிகள் அனைத்தையும் அவர்களுக்குப் பழக்கப்படுத்தி வைக்கிறார். இதன் பயனாக முன்னமே நாம் பார்த்த அமெரிக்கப் புருஷன் மனைவி போன்ற சிக்கலான தரத்தில் இந்தத் தொழிலாளி வாழப் பழகுகிறான். ஆகவே காலக்கிரமத்தில் தொழிற்சாலையின் சொந்தக்காரன் தன் கொள்கைகளை அடியோடு தகர்த்து விட்டாலும்கூடத் தான் இந்த இடத்தை விட்டு நகர மறுக்கிறான். இப்படிப்பட்ட ஒரு வாழ்க்கைத்தரம் மிகவும் செலவு நிறைந்தது; ஆகையால் வேலையை விட்டு நீக்கிவிட்டால் அவனுக்கு ஆதரவாயுள்ளது எதுவும் இல்லை. ஆகவே, போகப்பொருள்களில் பணச்செலவு பண்ணி அவன்

பழக்கப்பட்டு விட்டதால், அவனுக்கு இவை வாழ்க்கையின் இன்றியமையாத தேவைகள் என்று தோன்றுகின்றன. இவை இல்லாமல் வாழ்க்கையே நடக்காது என்று அவன் எண்ணவும் தலைப்படுகிறான். இவ்விதமாக அவனுடைய சுதந்திரமும் பேரம் பண்ணும் சக்தியும் தடைப்படுகின்றன. தான் வேலை செய்யும் இடத்தோடு ஒட்டிக் கொள்கிறான். இப்படிப்பட்ட வாழ்க்கைத் தரம், மாட்டுக்குப் போடுகிற மூக்கணாங் கயிறுபோல, அவனுடைய சுயேச்சையை அழித்து, முதலாளியின் சித்தம்போல அவன் நடக்க உதவி செய்கிறது. இத்தரத்தை ஏற்படுத்தியதன் நோக்கமே, தொழிலாளியின் சுயேச்சையைப் போக்கி, முதலாளியின் இச்சைப் பிரகாரம் அவன் வளைந்து கொடுக்கும்படி செய்வதாகும்.

அன்னிய ஆட்சியில் அரசாங்க ஊழியருக்குக் கொடுத்து வந்த உயர்ந்த திட்டச் சம்பளமும் இத்தகைமையுடையது. அது ஒரு தூண்டில்போல ; எத்தனையோ தேசபக்தர்களை அத்தூண்டில் கடமைப் பாதையைவிட்டு இழுத்துவிட்டது. அவர்களை அரசாங்க வலையில் நன்றாய்ச் சிக்கி, தங்கள் மனச்சாட்சியைக் கொன்றுவிட்டு, தம் மொத்த இந்நாட்டு மக்கள்மீது கடுமையான அதிகாரம் செலுத்தும்படியும் இச்சம்பளத் திட்டம் செய்திருக்கிறது. அவர்கள் தனிப்பட்ட மனிதர்களாய், அரசாங்க ஊழியம் என்ற பந்தம் இல்லாதிருந்தால், இவ்விதம் செய்யச் சம்மதித்திருக்க மாட்டார்கள். அவர்களுடைய வாழ்க்கை மதிப்புக்கள் கோணலாகிவிட்டன ; சந்தோஷமாகவும் ஆடம்பரமாகவும் வாழ்க்கை நடத்தலாம் என்ற மாயத் தோற்றத்தில் மயங்கி, செயல் செய்வதற்கான சுயேச்சையை அவர்கள் இழந்துவிட்டார்கள்.

இனி, இவ்விஷயத்தை முதலாளி தொழிலாளி ஆகியோருடைய பேரம் செய்யும் சக்தி என்ற நோக்குடன் ஆராயும்போது, முதலாளிக்கும் தொழிலாளிக்கு மிடையில் தகராறு ஏற்படும்பட்சத்தில், முதலாளியிடம் தாராளமான பணவசதி யிருப்பதால், அவர் காலம் பொறுத்திருந்து தொழிலாளிகளுடைய எதிர்ப்புச் சக்தி முறிந்துபோகிற வரையில் பொறுத்துப் பார்க்க முடியும். ஆனால், கூலியைப் பெற்று ஜீவனம் நடத்துகிற தொழிலாளிகள் அதிக நாள் தாங்க முடியாது, பட்டினி கிடக்க நேரிடும். இருப்பினும், இந்த உழைப்பாளிகளுடைய வாழ்க்கை முறையானது மிகவும் எளிமையாகவும் அதுபற்றி செலவிற்றதாக இருக்கும்பட்சத்தில், அவர்கள் சிக்கலான செல்வு நிறைந்த வாழ்க்கை நடத்துபவர்களைவிட அதிக நாள் போரிடமுடியும் ; இது காரணம் பற்றியும் முதலாளியானவர் தம்முடைய தொழிலாளிகள் சிக்கலான வாழ்க்கை வாழவேண்டுமென்பதில் அதிக அக்கறை

காட்டுகிறார். அவர்கள் சிக்கலான வாழ்க்கை வாழ்ந்தால்தான் அவருடன் நீண்டநாள் போராட முடியாது.

தொழிலாளி பற்றிய இந்தக் காரணங்கள் ஒருபுறம் இருக்க, பிரிட்டிஷ் தோட்டக்காரன் குடும்பத்தில் நாம் பார்த்ததுபோல சிக்கலான வாழ்க்கை முறை இருந்தால்தான் ஆலை முதலாளிகளுடைய சரக்குக்கள் நன்றாக விற்பனையாக முடியும். ஆகவே, சாமான் உற்பத்தி விற்பனை என்ற இரண்டையும் கவனித்தால் சிக்கலான வாழ்க்கை முறைதான் உற்பத்தியாளருக்கு லாபம் தருவதாகும்.

அமெரிக்கா போன்ற இயந்திர மயமான நாடுகள் இப்படிப் பட்ட கொள்கையையே பின்பற்றுகிறார்கள். இதுவே விவேகத்தோடு பார்க்கும்போது, சுயநலத்துக்கு உவந்ததாக இருக்கிறது. ஆனால் இது மனிதனுடைய செயல் சுதந்திரத்துக்கும் குணச்சிறப்பின் வளர்ச்சிக்கும் விரோதமானது.

சிக்கலான வாழ்க்கை முறையைப் பழக்குவதிலும் கடைப்பிடிப்பதிலும் இன்னும் சில நோக்கங்கள் உள்ளன. இவை பெரிதும் பாமர மக்களைப் பாதிப்பன அல்ல. ஆகவே இவற்றைப்பற்றி இரண்டொரு வார்த்தை மட்டும் சொல்லுவோம்.

ஆடம்பரத்துக்குச் சிக்கலான வாழ்க்கையே தேவை. மற்றவருடைய கவனத்தைக் கவர்வதற்கும் தம்மைப் பெரியவர் என்று காட்டிக்கொள்வதற்கும் ஒருவர் தம்முடைய ஆட்களுக்கு யூனிபாரம் உடை அணிவிக்கலாம். இந்த உடையானது தனிப்பட்ட ஊழியனுடைய சிறப்பையெல்லாம் அடக்கி வெறும் ஆள் என்ற நிலையில் அவனை இருத்துகிறது. ராமன், கோபாலன், அப்துல் என்ற தனக்குரிய சொந்தப் பெயரை இழந்து அவன் வெறும் பியூனாகவோ, 'பாய்' ஆகவோ, டிரைவராகவோ ஆகிறான். பாவம், பரிதாபகரமான இந்த வேலைக்காரர்கள் யூனிபாரம் போன்ற அலங்கார உடைகளைச் சொந்தத்தில் வைத்திராதபடியால், இவற்றைக் கைவிட மனம் வராமல் யூனிபாரம் போடுவதில் மிக்க பெருமை கொள்ளுகிறார்கள். இத்தகைய ஆடம்பரச் செலவுக்குப் பகிரங்கமான வீண் விரயம் என்ற பெயர் மிகவும் பொருத்தமானதே. இந்தியா போன்ற ஏழை நாட்டில் இப்படி வீண் விரயம் செய்யும் பழக்கத்தைத் துரோகச் செயல் என்றே கருதவேண்டும்.

சிக்கலான தரம் ஏற்படுத்திக் கொண்டால்தான் இப்படிப் பட்ட தனி ஆடம்பரம் வைத்துக்கொள்ள முடியும். முதல் வகுப்பில் பிரயாணம் செய்தல், பெரிய மனிதர் வாழும் பிரதேசத்தில் அதிக வாடகை கொடுத்துக்கொண்டு குடியிருத்தல் முதலியன இந்த ரகத்தைச் சேர்ந்தவை.

நம் நாட்டில் இதுதான் பொருத்தமென்று ஒரே தரத்தை ஏற்படுத்த முடியாது. குறிப்பிட்ட பிரதேசத்துக்குத் தேவையான உணவுச் சத்து, சீதோஷ்ணம், மக்கள் முன்னேற்றத்துக்கான வசதி, தன் குணவிசேஷத்தை வெளிப்படுத்துவதற்கான சந்தர்ப்பம் முதலியவற்றைப் பூரணமாய் ஆராய்ந்தே எந்தத் தரத்தையும் நிர்ணயிக்க வேண்டும்.

தென்னிந்தியாவில் பிரதான உணவாக அரிசியைக் கொள்வது பொருத்தம்தான். ஆனால் இது தீட்டாத அரிசியாயிருக்கவேண்டும். ஆனல் இதைப் பால், பருப்பு, காய்கறி, எண்ணெய் போன்றவற்றுடன் கலந்து சமநிலையாக்க வேண்டும். இங்கு சீதோஷ்ண ரீதியாக விசேஷமான உடை எதுவும் தேவையிருக்காது. காலுக்கு மிதியடி தேவையிருக்காது. படுக்க ஒரு கோரைப் பாய் இருந்தால் போதும். ஆனால், வடநாட்டிலோ உணவில் கோதுமை பிரதான இடம் வகிக்கும். இதைச் சமநிலை செய்வதற்கு மற்றப் பொருள்கள் தேவை. அங்குக் கடுங்குளிர் இருப்பதால் இன்னும் அதிக உடை வேண்டும். காலுக்கு மிதியடியும் படுக்கக் கட்டிலும் தேவை. ஆகவே, ஓரிடத்தில் அவசியமானது மற்றோரிடத்துக்கு அதிகப்படியாக இருக்கும். ஆதலால், பிரதேச நிலைமைகளையும் சூழ்நிலையையும் தொடர்பு படுத்தி வாழ்க்கை முறையை நிர்ணயிப்பது அவசியமாகும்.

நாம் தேர்ந்து கொள்கிற அளவை அல்லது தரமானது நித்தியத்துக்கும் அகிம்சைக்கும் நம்மைச் செலுத்தவேண்டுமானால், அது மக்களுடைய பிரதேச வாழ்க்கை முறைக்கு ஒத்திருக்கவேண்டும். முந்திய அத்தியாயத்தில் இயற்கையானது ஒரு வாழ்க்கைச் சக்கரமாக வேலை செய்கிறதென்றும், ஒரு நிலையில் உள்ளது மற்றொரு நிலையில் உள்ளதற்குத் துணையாகவும் அதைப் பூர்த்தி செய்வதாகவும் அமைந்திருக்கிறதென்றும், இந்த வாழ்க்கைச் சக்கரம் எங்கேயாயினும் முறிந்தால் அங்கு ஹிம்சை தோன்றி நாசம் விளைகிறதென்றும் நாம் கண்டோம். ஆகவே, நாம் ஒப்புக்கொள்கிற வாழ்க்கைத் தரமானது ஒருவருடைய திறன்கள் பூரணமாய் வெளிப்பட்டு வளர்ச்சி பெறச் சந்தர்ப்பம் தந்து அவருடைய குணச் சிறப்பு மலர்ந்து பிரகாசிப்பதற்கு வழியும் அமைப்பதோடுகூட, சமூகத்தில் வசதி படைத்தவர்கள் வசதியற்றவர்களுடைய வாழ்க்கைக்கு உதவக்கூடிய வகையில் சமூகத்தின் பல்வேறு அங்கங்களிடையில் ஒரு தொடர்பாகவும் அமையவேண்டும்.

முன்னே நாம் கூறிய பிரிட்டிஷ் தோட்டக்காரர் வீட்டில் கட்டில்களுக்கு வில்வைத்த மெத்தைகள் போட்டிருக்கலாம். இவை

தொழிற்சாலைகளில் தயாரானவை. இவற்றைத் தயாரித்தவர்கள் முன்னமே தோட்டக்காரர் வீட்டில் கம்பளம் சுத்தம் செய்யவும் பாத்திரம் அலம்பவும் உதவிசெய்த பணியாட்களே. ஆனால் இப்போது உழைப்பை மிச்சப்படுத்தும் கருவிகள் ஏற்பட்டமையினால் சிக்கலான ஒரு வாழ்க்கைத் தரத்தைக் காட்டி மில் முதலாளி இவர்களைத் தொழிற்சாலைக்கு இழுத்துக்கொண்டார். இப்படிப்பட்ட மெத்தைகள் இருப்பு வில் வைத்தவை. இந்த வில்களும் தொழிற்சாலையில் தயாரானவை. இந்த மெத்தையில் ஏதேனும் பிழை நேர்ந்து விட்டால், தொழிற்சாலையின் பழுதுபார்க்கும் பட்டாளம் தயாராய்க் காத்திருக்கிறது. கவனித்தால், இங்கு மக்களுடைய வாழ்க்கைக்கும் வில் மெத்தையின் உற்பத்திக்கும் இடையே அபின்னமான ஒருமைப்பாடு எதுவும் இல்லை.

முன்னமே நாம் குறிப்பிட்டபடி உயர்வான எளிய வாழ்க்கை நடத்துகின்ற மந்திரியானவர் கோரைப் பாயில் படுத்திருக்கலாம். அப் பாய் முரட்டுக் கோரையாக இருக்கவேண்டியதில்லை. ஒரு கோரையை முப்பத்திரண்டாகவும், இன்னும் சன்னமாகவும் கிழித்து, பட்டுநூல் போட்டு நெய்த பத்தமடைப்பாய் போன்றதாய் இருக்கலாம். இது வில் மெத்தைகளையும், பஞ்சு மெத்தைகளையும்விட குளிர்ச்சியானது. இப் பாய்கள் அந்தந்தப் பிரதேசத்திலேயே செய்யப்படுகின்றன. இவற்றைச் செய்யும்போது பாய்த் தறிக்காரர்கள் தங்களுடைய கலைத் திறமையையும் வேலைத் திறமையையும் வளர்த்துக்கொள்ளச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. இவர்களுடைய ஆக்கத் திறத்தைச் செலுத்த இடம் கிடைக்கிறது. இவ்விதம் இது அவரவருடைய குணச்சிறப்பை உருவாக்கவும் வெளிப்படுத்தவும் உதவுகிறது. இந்தப் பாய்களின் நெசவிலேயே பல்வேறு வேலைப்பாடமைந்த உருவங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. பாய்கள் மிக்க சன்னமாயும் நயமாயும் இருப்பதால் மடிக்க முடியும். நனைத்துக் கசக்க முடியும். ஆகையால் இவை மிகவும் சுத்தமாய் இருக்கின்றன. சிறந்த தரமான பாய்கள் மிகவும் விலை உயர்ந்தவை. இவை எட்டணா விலையிலிருந்து, கோரையின் நயத்துக்கும் வேலைப்பாட்டுக்கும் ஏற்றபடி, இருநூறு ரூபாய் வரையிலும் இருக்கின்றன. ஆனால் இதில் முக்கியமானது, அந்த மந்திரி இதற்குக் கொடுத்த பணம் முழுமையும் தொழிற்காரர்களையும் அவர்கள் குடும்பங்களையும் நேர்முகமாய்ப் பாதுகாப்பதற்கே பயன்படுகிறது. இவ்விதம் இது குறித்த இடத்தில் கிடைக்கிற மூலப்பொருளாகிய கோரைகளை வைத்தே ஒரு பூரண வாழ்க்கைச் சக்கரம் அமைக்கிறது. இப்படிப்பட்ட ஒரு வாழ்வுக்கு, மூலப்பொருள் தேடவும் விற்பனைக்குச் சந்தையைத்

தேடவும் அமைக்கவும், கப்பல் செல்லும் கடற்பாதைகளை வசதியாக வும் பந்தோபஸ்தாகவும் வைத்திருக்க, தரைப்படையும் தேவை யில்லை, கடற்படையும் தேவையில்லை, விமானப்படையும் தேவை யில்லை. ஆதலால் இதில் ஹிம்சை தேவையில்லை. அதற்கு மாறாக இந்த மந்திரியானவர் இங்கிலாந்தில் செய்து வருகிற வில் மெத்தை களை வாங்கித் தம் வாழ்க்கைத்தரம் என்பதில் அவற்றையும் சேர்த் துக்கொண்டால், அந்த வாழ்வுக்கு இத்தனைப் படையும் தேவை யாகும்.

இதுபோல, மந்திரியினுடைய வேட்டியும் சட்டையும் மென்மை யான கதர்த்துணியில் சொல்லிச் செய்தவை. ஆதலால் இவை குறித்த பிரதேசத்திலுள்ள நூற்பாளருக்கும் நெசவாளருக்கும் ஆதரவு தந்து, வளர்ச்சிக்குப் பூரண சந்தர்ப்பம் அளிக்கிறது.

இவ்விதமாக நம் தேவைகள் ஒவ்வொன்றும் பலமாக ஒன்றோ டொன்று பிணைந்துள்ள வாழ்வு அமைக்கும் வகையில் பிரதேச உற்பத்தியோடும் மக்கள் வாழ்க்கையோடும் தொடர்புகொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் ஹிம்சையினால் வருகின்ற நாசம் இல்லாமல் ஆரோக்கியமான அபிவிருத்தியை இது வளர்த்து, அழி வற்ற வாழ்வை நோக்கி நம்மைச் செலுத்தும்.

நம்மைச்சுற்றி உள்ளவர்களின்வாழ்க்கையைச் சிறிதும்ஆலோசி யாமல் பணம் பொருள் என்ற இரண்டைக்கொண்டே அனேகர் வாழ்க்கைத் தரத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். இந்தத் தரங்கள் செயற்கையானவை, மாறக் கூடியவை ; அன்னியரால் ஏற்படுத்தப் பெற்று மேலெழுந்தவாரியா யிருப்பவை. ஆதலால் இவை சாசுவத மாக இருக்கமாட்டா. மக்களுடைய ஜீவனத்தில் இவற்றுக்கு வேர் கிடையாது. பிரிட்டிஷ் தோட்டக்காரருடைய வாழ்க்கைத் தரம் இந்த விதத்தில்தான் வகுக்கப்பட்டுள்ளது. இவை வித்தியாசமில் லாத ஒரே பெருவாரி அமைப்பைக் கொண்டமையால், மக்களுடைய உயிரையே போக்கிவிடுகின்றன.

ஆனால், வாழ்க்கையை உருவாக்குகின்ற எல்லா விவரங்களையும் இங்கே தீர்மானிக்க அவசியமில்லை. நாம் செய்ய வேண்டிய தெல்லாம், வாழ்க்கைக்குக் குறைந்த பட்சத் தேவை யாது என்று பார்த்து மக்களுடைய ஆற்றல்களைப் பக்குவப்படுத்தி அவர் களுக்குத் தேவையான மூலப்பொருள்களும் கிடைக்கும்படி செய்து, அவர்களுடைய பொருள் உற்பத்திச் சக்தியை உரிய வழியில் செலுத்திப் பின்னர் எவ்விதத் தலையீடும் இல்லாமல் அவர்களுடைய சொந்த முயற்சியைக் கொண்டும் சாதுரியத்தைக் கொண்டும் மற்ற தைத் தாங்களே பார்த்துக் கொள்ளும்படி விட்டுவிடுவதுதான்.

இது எதுபோல என்ருல், ஒரு குளத்திலுள்ள நீர்மட்டத்தை உயர்த்த வேண்டுமென்ருல் குளத்திலிருக்கும் நீரை அதிகமாக்குவதுதான் நமது வேலை. அதிகமாக்கின பிறகு, நம்முடைய உதவி இல்லாமலே, இயற்கையின் விதிகளுக்கு அடங்கி, நீரின் மட்டம் தானே உயரும்.

நம் நாட்டிலுள்ள மக்கள் பட்டினி இருக்கிருர்கள் அல்லது போதிய உடை அணியாது இருக்கிருர்கள் என்ருல், அவர்கள் அழகுப் போட்டிக்காகத் தங்கள் உடம்பில் சதையைக் குறைக்கிருர்



பணக்காரி நிர்வாண நாகரிகம் பழகுகிருள்.
ஏழைப் பெண் உடுக்கத் துணியில்லாமல் பிச்சை எடுக்கிருள்.

கள் என்ருே நிர்வாண நாகரிகத்தைக் கடைப்பிடிக்கிருர்களென்ருே யாரும் எண்ணவேண்டியதில்லை. எப்படி உண்பது, என்ன உண்பது, எதை உடுத்துவது என்பது அவர்களுக்குத் தெரியும். அவர்களுக்கு

வேண்டியது திட்டமல்ல, சரக்குத்தான். உணவுப் பொருளும் உடையும் வேண்டும். இவற்றைப் போதுமான அளவில் உற்பத்தி செய்ய நாம் முயலவேண்டும்.

பாமர மக்களுடைய உற்பத்திச் சக்தியைப் பெருக்கி ஆங்காங்கு உற்பத்தியாகும் பொருள் அங்கேயே நேரடியாக உபயோகமாகும்படி நாம் செய்தால், மக்களுடைய வாழ்க்கைத் தரம் தன்னாலேயே உயரும். இப்படி இயற்கையாக உண்டாகும் வாழ்க்கைத் தரமானது மக்களுடைய சிறப்பையும் பண்பாட்டையும் எடுத்துக்காட்டுவதோடு, இது மக்கள் வாழ்வில் கால் கொண்டிருப்பதால், நிரந்தரமாகவும் இருக்கும்.

பிரிட்டிஷ் தோட்டக்காரனுடைய வாழ்க்கைத் தரம் முழுமையும் தனிப்பட்டவனுக்குரியதாகும். ஏனெனில் அவனைச் சுற்றியுள்ள மக்கள் வாழ்க்கையோடு அது சம்பந்தப்பட்டிருக்கவில்லை. அந்தத் தரம் அவன் வீட்டோடு முடிந்தது. 'ஆங்கிலேயனுடைய வீடு அவனது கோட்டை' என்று சொல்வார்கள். ஆம், அது உள்ளே இருப்பவருக்கு உலகபோகம் எவ்வளவுதான் கொடுத்த போதிலுங்கூட, பூர்த்தியாய் வெளியுலகத்தை மூடிவிடுகிறது நம் நாட்டில்கூட மேலைநாட்டு வாழ்க்கை முறைகளை அனுசரித்து நடப்பவர்களால் சுற்றியுள்ள வாழ்க்கையின் போக்கிலிருந்து இப்படி விலகியிருத்தல் என்பது உண்டாகியிருக்கிறது.

வாழ்க்கைத் தரத்துக்காக நாம் தேடுகின்ற அளவை ஒரு குடும்பத்துக்காகவோ, ஒரு வகுப்புக்காகவோ, ஒரு தொகுதிக்காகவோ அல்ல. குறித்த இடத்திலுள்ள ஜனத்தொகை முழுமைக்குமே நாம் தேடுகிறோம். இந்தத் தரம் எல்லோருடைய வாழ்க்கையோடும் இணைந்திருந்திருக்கும் என்பதே இதன் பொருள். ஒருவகையில் நம்முடைய புராதன கிராம அமைப்பு இவ்வகையில் செய்த ஒரு சிறு முயற்சி எனலாம். கிராமத்தில் நாவிதன், வண்ணான், சக்கிலியன் முதலான பலவகைத் தொழிலாளர் இருந்தனர். இவர்களும் கிராமத்தின் அங்கம். இவர்களுக்கு வருஷந்தோறும் கிராமத்தின் மொத்த வருவாயில் மானியமென்றும் சுதந்திரம் என்றும் திட்டமான ஒரு பங்கு உண்டு. அந்த ஏற்பாட்டின்படி கிராமத்தில் ஒவ்வொருவருக்கும் ஜீவனத்துக்கு வழி கிடைத்தது. அந்த ஏற்பாட்டின் பொருள், கிராமம் என்பது இவர்கள் அனைவரும் சேர்ந்து ஒன்றாய் இயைந்த பூரண சமூகம் என்பதாகும். ஆனால் நாம் இப்போது குறிப்பிடுவது, கேவலம் உயிர் வாழ்வதற்கான ஏற்பாடு மட்டுமல்ல: மனிதனிடம் அமைந்துள்ள மேலான திறன்கள் அனைத்தையும் வளர்ப்பதற்கான சந்தர்ப்பங்கள் இருக்கவேண்டும் என்பதே.

மந்திரி தம்முடைய ஊழியரைக் கூப்பிட்டு, தமக்கு ஒரு தோல் பை வேண்டுமானால் அது இன்ன ரகம், இன்ன வடிவம், இன்ன அளவு, இத்தனை அறை என்று குறிப்பிடுவார். அந்த ஊழியர் சக்கிலியைக் கூப்பிட்டு இதற்கான தோலைப் பதனிடும்படி சொல்லுகிறார். இந்த வேலைகளிலெல்லாம் அனேக பிரசினைகள் எழுகின்றன. இவற்றை அவர் தீர்க்கவேண்டியிருக்கும். இதன் மூலம் அவர் தம்முடைய சாதுரியத்தையும், சமயோசித புத்தியையும் வளர்க்க இடமுண்டு. இவ்விதமாக மந்திரியின் தேவையினால் சுற்றிலுமுள்ளவர்கள் தங்களுடைய ஆக்கத் திறனை வெளியிடுவதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் பிறக்கின்றன.

இதற்குப் பதிலாக, இந்த மந்திரி பிரிட்டிஷாரின் கடையொன்றில் நுழைந்து அங்குத் தயாராகச் செய்து வைத்துள்ள ஒரு பையை வாங்கினால், அது இவருடைய தேவைக்கு முழுமையும் ஏற்றதல்லாமல் இருக்கலாம். ஏனெனில், கையிருப்பில் உள்ளதில் ஒன்றைத்தான் அவர் வாங்க முடியும். அன்றியும், தனக்கு இன்னதுதான் தேவை என்று அவர் சிந்தித்து முடிவு செய்யாமலும் இருக்கலாம். அவர் செய்யவேண்டிய சிந்தனை யெல்லாம் மில் சொந்தக்காரர் முன்னதாகவே செய்து வைத்திருக்கிறார்; அவருக்காக மாத்திரமல்ல, எல்லோருக்குமாகவே செய்துவைத்திருக்கிறார். மந்திரியானவர் அங்கே ஒரு பொருள் செய்யவேண்டுமென்று உத்தரவு கொடுத்த உடனே அதற்கான விவரங்களையெல்லாம் தாமே கருதிப் பார்த்துத் தனக்கு எவ்விதப் பொருள் தேவை என்று முடிவு செய்து அதைச் சுற்றுப்புறம் உள்ளவர்களைக்கொண்டு செய்துகொள்கிறார். இவ்விதமாக, பொருளை உபயோகிப்பவர்களுடைய வாழ்க்கையின் எண்ணமும் பொருளைச் செய்பவர்களுடைய வாழ்க்கையோடும், ஆக்கத்திறனோடும் நெருங்கிப் பிணைந்து கிடக்கிறது. ஒருவருடைய பிரசினையை மற்றவர் சமாளிக்க முயல்கிறார். நம்முடைய வாழ்க்கை, துண்டான தனித்த வாழ்க்கை யல்ல. மற்றவருடைய வாழ்க்கையோடு சம்பந்தப்பட்டே இருக்கிறது. ஆகவே, வாழ்க்கைக்குப் பொருத்தமான சரியான ஒரு வாழ்க்கைத் தரம், வாழ்க்கையின் தனிப்பட்ட அங்கமான பல்வேறு முத்துக்களையும் மணிகளையும் தொடுத்துவைக்கிற பட்டு நூல் போன்றது. முன் குறிப்பிட்ட மந்திரியின் வாழ்க்கைத் தரம் அத்தகையது. ஏனெனில் அவருடைய வாழ்க்கை நூற்போர், நெய்வோர், பாய் பின்னுவோர், செருப்புத் தைப்போர், வீடு பெருக்குவோர் முதலியோர்களுடன் மட்டும் அல்லாமல், அவர் விட்டெறிந்த வாழை இலையைத் தின்கிற ஆடு முதலிய வாயில்லாப் பிராணிகளோடும் சேர்த்துப் பிணைக்கிறது. யாரும் தனக்காக வாழ்வது இல்லை. தொழிற்சாலை

யில் உற்பத்தியான பொருள்களை உபயோகிக்கும்போது சுற்றுப்புறமுள்ள மக்களின் வாழ்க்கையோடு இவ்விதமான ஜீவன் நிறைந்த தொடர்பு இல்லை. அங்கே வாழ்க்கைத்தரமானது ஜீவனற்ற யந்திரங்களோடு சேர்க்கப்பட்டுள்ளது. யந்திரங்களோ, வளர்ப்பதற்கான ஆக்கத்திறன் எதுவும் இல்லாமல், ஆக்கும் வேலை செய்கின்றன!

ஆதலால் நம்முடைய வாழ்க்கைத்தரம் என்பது சமூகத்தின் பல்வேறு பிரிவுகளையும் ஆரோக்கியமான கூட்டுறவு முறையில் ஒரே அமைப்பாகச் சேர்த்துவைக்க வல்லதாயிருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஓர் அளவை தனிப்பட்ட ஒருவருக்கு மட்டும் பயன்படக்கூடிய திட்டமாயிராமல் சமூகம் முழுமையும் சேர்த்து ஒட்டுகிற சிமிண்ட் போல இருக்கும். அப்போது, பரஸ்பர நம்பிக்கை, ஒற்றுமை, இன்பம் முதலியவை உதித்து, அந்தச் சமூகத்தில் பூசல் நீங்கி பலம் உண்டாவதற்கு இடமாயிருக்கும்.

பருத்திப் பஞ்சின் துசும்பொன்றைத் தனியாக எடுத்தால் அது அற்பமானது, துர்ப்பலமானது. ஆனால், ஆயிரக்கணக்கான துசும்புகளை ஒன்ருய்ச் சேர்த்து நூற்றுப் பல நூல்களை ஒன்ருய்ச் சேர்த்து பலத்த கயிருக முறுக்கின பிறகு, அக்கயிறு மாபெருங் கப்பலையும் இழுக்கவல்லதாக ஆகிறது. நல் முறையில் அமைந்த வாழ்க்கைத் தரத்தினுல் ஏற்படும் பலன் இப்படியிருக்க வேண்டும். ஒன்ருய்த் திரட்டிய ஒரே தொகுப்பு என்ற முறையில் சமூகம் முழுமையும் இறுகச் செய்யவல்ல நெருக்கமான பிணிப்பை, பொருள் உற்பத்தியாளருக்கும் உபயோகிப்பவருக்குமிடையிலே அது உண்டுபண்ணத் தக்கதாய் இருக்கவேண்டும். இது ஒன்றே அழிவற்றதாக இருக்க முடியும்.

## அத்தியாயம் 12

# உழைப்பு

உழைப்பு என்பது சர்வசாதாரணமாய் உபயோகித்துவரும் சொல்; ஆனல் அதன் பொருளை மிகச் சிலரே கருதிப் பார்ப்பவர்கள். உழைப்பு என்ருல் என்ன? இயற்கையில் ஏற்பட்டுள்ள வாழ்வில் அல்லது சொல் அமைப்பில், உழைப்புக்குள்ள அலுவல் யாது?

கோடிக்கணக்கான மக்களுக்கு எப்படி வேலை கொடுப்பது என்பது பல நாடுகள் முன்னுள்ள பெரிய பிரசினை. ஆதலால்

இந்தச் சொல்லின் கருத்தை நாம் நன்ருய் உணர்ந்துகொள்ள வேண்டும். முந்திய அத்தியாயத்தில், தொடர்பும் சாசுவதமும் நிலை நாட்டவல்ல பலவேறு அம்சங்களை எப்படிப் பிரபஞ்சத்தின் இயற்கை நியதிக்குத் துணைவரும்படி சில இயற்கைக் கருவிகள் செய்து வந்தன என்று கண்டோம். உதாரணமாக, நிலவளத்தைப் புழுக்கள் அதிகப்படுத்துகின்றன; பறவைகள் விதைகளை நெடுந்தூரம் கொண்டு சென்று பரவச் செய்கின்றன; தாவர வாழ்க்கையில் பூக்கள் கருக்கொள்வதற்குத் தேனீக்கள் உதவுகின்றன. இதுவே உழைப்பு, இதுவே இயற்கையில் இந்தச் சிறு பிராணிகளின் வாழ்க்கை நோக்கமென்றும் சொல்லலாம்.

மனிதனைப் பொறுத்த வரையிலுங்கூட, வாழ்வு என்ருல் என்னவென்றும், கேவலம் காலந்தள்ளுதல் என்ற நிலையைப் பார்க்கிலும் மேலாக அதில் பொருந்தியுள்ள அம்சங்கள் யாவை யென்றும் ஆராய்ந்தோம். இன்னும் கீழான படைப்புக்களுக்கு மாருக, மனிதன் தன் சுயேச்சையைச் செலுத்தி, பிரகிருதியின் பல்வேறு அங்கங்கள் தங்கள் பங்கை இன்னும் நன்ருய்ச் செய்யும்படி அவற்றை அவன் ஒன்று திரட்ட முடியும். இவ்விதம் செய்வதில் அவன் தன் திறன்களை அபிவிருத்தி செய்து, கிரியாம்சையில் தன் முன் வருகிற பிரசினைகளைத் தீர்ப்பதில் தன்னுடைய வாழ்க்கை மதிப்புக்களை உபயோகித்து, உபயோகிப்பதன் மூலம் தன் குண விசேஷத்தைப் பிரகாசிக்கச் செய்யவும் முடியும். மனிதனுக்கு உழைப்பு என்பது இதுவே, உழைப்பின் அலுவலும் இதுவே.

உழைப்பு என்பது என்ன என்று சரியாகத் தெரிந்துகொள்வதற்கு, மனிதனுடைய புராதனச் சரித்திர காலத்தில் மிகவும் எளிய ரூபத்திலிருந்த உழைப்பை ஆராயவேண்டும். இப்போது உழைப்பு அல்லது வேலை என்பதில் பலவகையான குழப்பம் விளைவிக்கத் தக்க அம்சங்கள் சேர்ந்துவிட்டன. இவற்றை நீக்கி நாம் பார்க்கவேண்டும். மனிதன் கல்லைக்கொண்டு தனக்கு வேண்டிய கருவிகளை அமைத்துக்கொள்ள ஆரம்பித்தபோதுதான் அவனுக்கும் உள்ளுணர்வைக் கொண்டு மாத்திரம் வாழ்ந்த பிராணிகளுக்கும் வேற்றுமை தொடங்கிற்று. தனித்த வேலை என்பதன் தோற்றுவாயை அந்தக் காலத்திலிருந்தே நாம் கணக்கிடவேண்டும். அப்போது அவனுடைய வேலை என்பது, ஒரு பறவையானது தனக்கு வேண்டிய கூடு கட்டி இரை தேடிக்கொண்டதுபோல, அவன் தன்னுடைய சொந்த புத்தியையும் யோசனையையும் சமயோசித அறிவையும் உபயோகித்துத் தனக்கு வேண்டியவற்றைச் செய்துகொள்வதாகும். தன் சொந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதைத்

தவிர வேறு கூலி எதுவும் இல்லை. அவனுடைய திறன்களைக் கூர்மைப்படுத்தவும், சிந்தனை செய்யக்கூடிய ஒரு பிராணியாக அவன் வளர்ந்துவரவும், இதுவே போதிய ஆரோக்கியகரமான வேலையாகும். தான் கொன்ற மிருகங்கள் முதலியவற்றைத் தான் வாழ்ந்த குகைக்குள் கொண்டுவந்தான். அங்கிருந்த பெண்கள் அவற்றை வேக வைத்து உணவாகத் தயாரித்தார்கள். அதன் பிறகு குடும்பம் தொடங்கிற்று ; பெண்களின் உழைப்பும் தொடங்கிற்று. இன்று வரையில் நம்முடைய நாட்டில் மட்டுமாவது, பெண்களின் உழைப்பென்பது, சொந்த வீட்டில் சொந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்வது என்ற சாமானிய உருவத்தில் இருந்து வந்திருக்கிறது.

**உழைப்பின் அங்கங்கள் :** உழைப்பைப் பாகுபடுத்திப் பார்த்தால் பல அங்கங்கள் அதில் இருப்பது தெரியும். ஒவ்வோர் அங்கமும் முடிவான நோக்கம் கைகூடுவதற்குத் தன் பங்கை உதவுகிறது. முக்கியமாக, வாலாயமான காரியமும் ஒய்வும், முன்னேற்றமும் மகிழ்ச்சியும், சேர்ந்ததே உழைப்பு. ஒன்றை மற்றவற்றிலிருந்து பிரித்து அதைமட்டும் தனித்து நிற்கக்கூடிய அங்கமாக நாம் ஆக்கமுடியாது. வாலாயமான வேலையைப் பிரித்து ஒருவருக்குக் கொடுக்கவோ, ஓய்வை மட்டும் மற்றொருவருக்குக் கொடுக்கவோ முடியாது ; மூன்றுமவர் ஒருவர் இன்பம் முழுமையும் தாமே எடுத்துக்கொள்ளவும் முடியாது. சங்கீதத்தில் ஒவ்வொரு சுரமும் தனக்கென்று தனியான காலமும் ஓசையும் உடையது. காலம் என்பது அந்த சுரத்தின் அங்கம். காலம் இல்லாமல் சுரம் இல்லை. அதுபோல சங்கீத வித்துவானாக விரும்புகின்ற ஒருவன் முறையாக, மணிக்கணக்காக, சுரசாதகம் செய்யவேண்டியிருக்கும். இந்தச் சாதகம் இருந்தால்தான் முடிவில் இசையின்மூலம் அவன் ஆழமான உணர்ச்சிகளை எடுத்துக் காட்டி இன்பமூட்ட முடியும். ஆனால், முறையாகச் செய்கிற இந்தச் சுரசாதகத்தை ஒருவருக்கும், முடிந்த இசை இன்பத்தை மற்றொருவருக்கும் பிரித்துக் கொடுக்கமுடியாது. ரேடியோவில் வேண்டுமானால் நாம் சங்கீதம் கேட்டுக்கொண்டிருக்கலாம் ; ஆனால் அதன் மூலம் சங்கீத வித்துவான் ஆகிவிட முடியாது. அதுபோல, பயனுள்ள காரியம் எதுவும் திருப்பித் திருப்பி அப்பியாசம் செய்தால்தான் சாத்தியமாகும்.

மற்றோர் உதாரணம் சொல்லுவோம். கிரமமான சமநிலையுடைய உணவில் மூன்று பகுதிகள் உள்ளன. 1. சத்துப் பொருள்கள். 2. சக்கை. 3. ருசி. ஒருவர் சாதம் முழுமையும் நன்றாய் மெல்கிற தொந்தரவு இல்லாமல் ருசி மாத்திரம் வேண்டும் என்று ஆசைப்

பட்டால், அவர் தற்கால விஞ்ஞானத்தின் துணைகொண்டு விரும்பியதைப் பெற்றுக்கொள்ளலாம். ஆனால் ருசியை மட்டும் வைத்துக்கொண்டு நெடுநாள் அவர் ஜீவித்திருக்க முடியாது. அதுபோல வயிற்றில் உணவு ஜீரணமாகி உடம்பில் சேர்வதற்குச் சக்கை மிகவும் அவசியமாக இருக்கிறது. இவை போலவே உழைப்பின் முழுப் பயனைப் பெறுவதற்கும் இயற்கையில் ஏற்பட்டுள்ள அதன் திட்டமான நோக்கம் கைகூடுவதற்கும் உழைப்பின் சகல பகுதிகளும் இன்றியமையாதவை.

மிகப் புராதன காலமாக மனிதன் தன் சுயேச்சையை உபயோகித்து, உழைப்பை வெவ்வேறு பகுதிகளாகப் பிரித்து, அதில் சிரமமான பாகத்தை,எதிர்க்கும் சக்தியில்லாத பலவீனர் தலையில் சுமத்தி, உழைப்பிலிருந்து கிடைக்கவிருக்கிற இன்பங்களை மட்டும் பலமுடையவர்களுக்கே கொடுத்து வந்திருக்கிறான். சிரமம் அடிமைகள் தலையில் ஏற, அவர்கள் உழைப்பின் பயனை எஜமானன் அனுபவித்திருக்கிறான். கிரேக்க ரோம நாகரிகங்கள் முதலியன, இன்பத்தை மட்டும் அனுபவித்து, சிரமத்தை ஒதுக்கிவிடுவது என்ற அடிப்படையில் எழுந்தவை. ஆதலால்தான் அவை அழிந்துவிட்டன. அவற்றின் பிறகு, அவற்றின் பெருமை என்ற பழங்கதை மட்டுமே மிச்சம். இந்தக் கதை நமக்கு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இந்த எச்சரிக்கையைக் கவனிக்காமல் ஆலைத்தொழில்மீது வளர்ந்த தற்போதைய சாம்ராஜ்யங்கள், உழைப்பினால் வரவேண்டிய நன்மையையும் இன்பத்தையும் ஆலைத்தொழில் மயமான நாடுகளுக்காக ஒதுக்கி, குறைவில்லாத பிழைக்கை வேலையை மூலப்பொருள்கள் உற்பத்திசெய்யும் நாடுகள் தலையில் சுமத்தி வருகின்றன. இயற்கையில் அமைந்த ஏற்பாட்டில் இது முரணானமையால், நிச்சயம் இது தோல்வி பெறும். நம்முடைய காலத்திலேயே, இயற்கைக்கு மாறாக இப்படிச் செய்யும் முயற்சிகளால் ஏற்படுகிற சர்வ நாசத்தைப் பிரத்தியட்சமாய்க் கண்டிருக்கிறோம். அடிக்கடி வருகிற இந்த உலக யுத்தங்கள், சாம்ராஜ்ய நாடுகள் தங்கள் இச்சையை மற்ற மனித சமூகத்தின்மீது சுமத்த மேற்கொள்ளும் வழிகளே ஆகும். கொஞ்ச காலத்தில் அவை வெற்றி பெறுவதுபோல் தோற்றலாம். ஆனால், அவற்றிலே அழிவுக்கான வித்து இருப்பதால் பலாத்கார வழிகளால் அமைக்கப்படுகின்ற அத்தகைய ஏற்பாடு எதுவும் காலக்கிரமத்தில் அழிந்தே போகும்.

உழைப்பை மிச்சப்படுத்தும் சாதனங்களைச் செய்தவர்கள் தங்களுடைய சாமர்த்தியம் மிகுந்த விற்பனை ஸ்தாபனங்களால் வீட்டு வேலைக்காரர்களையும் குடியானவர்களையும் வயல் உழவர்களை

யும் போக்கி அவர்களைத் தங்களுடைய லாபத்துக்குத் தங்கள் இயந்திரங்களை இயக்கும் தொழிலாளிகளாக ஆக்கிவிட்டார்கள் என்று முந்திய அத்தியாயத்தில் பார்த்தோம். இங்கிலாந்தில் ஏற்பட்ட மாறுதலானது நாட்டுப்புறத்தில் வயல்களிலும் பண்ணைகளிலும் வேலை செய்ய ஆளில்லாமையால் சாகுபடியில்லாமல் செய்துவிட்டது. நிலக்கரியும் இரும்பும் ஈயமும் இருந்தால்மட்டும் ஒரு நாடு வாழ்ந்துவிடமுடியாது. உணவு வேண்டும். ஆகவே, இங்கிலாந்தானது தனக்கு வேண்டிய உணவையும் இதர பொருள்களையும் தர மற்ற நாடுகளை அடிமைப்படுத்தி வைக்கவேண்டியதாயிற்று. ஏனெனில், உணவு போன்ற அவசியத் தேவைகளுக்குப் பிறருடைய தயவை எதிர்பார்த்தோ, தனிப்பட்டவருடைய அரசாங்க உதவியில்லாத வியாபாரத்தின் போக்கை எதிர்பார்த்தோ, இருக்க விடமுடியாது. மற்ற நாடுகள் எளிதில் அப்படி அடிமை ஆக இசையமாட்டா என்பது இயற்கை. ஆகவேதான் இங்கிலாந்தின் வாழ்க்கைக்கு ஹிம்சையே அஸ்திவாரக் கல்லாயிற்று. இப்படிப்பட்ட ஏற்பாட்டை நிறைவேற்றிப் பரிபாலித்து வருவதற்கு அந்நாட்டார் தம் மக்களின் வாலிபத்தையும் ஆற்றலையும் போர்க்களத்தில் பலிகொடுக்கவேண்டியிருக்கிறது. இது ஓர் அறிவுள்ள ஏற்பாடாகுமா? இந்த ஏற்பாட்டை, குறித்த காலத்துக் கொருமுறை பாமர மக்களைப் பலி கொடுத்தால்தான் நிலைநாட்டிவர முடியும். ஆகவே இது பயனற்றதென்று பாமர மனிதன் ஒப்புக்கொள்வான். ஆதலால், பிரசினையைக் குழப்புவதற்காக வேண்டி, பொதுமக்களின் மனத்தைத் தவறான வழியில் செலுத்த, கிடைக்கிற சகல சாதனங்களையும் உபயோகிக்கிறார்கள். சிக்கலான வாழ்க்கைத் தரத்தைப் பிரசாரம் செய்தல், போலியான வாழ்க்கை மதிப்புக்களை வளர்க்கிற கல்வியை மதித்தல், ஹிம்சைக்குக் கௌரவமளித்தல் ஆகியவை இப்படிப்பட்ட சாதனங்கள். இவை உடைய இந்த அமைப்பை நிலைநாட்டப் பொதுமக்களுடைய தயங்காத ஒத்துழைப்பு வேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட பிரசாரத்தினால் விளையும் பெருங்கேடுகளை, தாய்மார் இந்த அமைப்புக்காகத் தங்கள் பிள்ளைகளின் உயிரை மிக்க பெருமையோடு தியாகம் செய்வதிலும் பெண்கள் போர்க்களத்தில் தங்கள் நாயகர் உயிரைப் பலி கொடுக்கும்படி தூண்டுவதிலும் காணலாம். ஒரு பாவமும் செய்தறியாத பிறர் பிள்ளைகளைப் பெருவாரியாய்க் கொலை செய்யத் தன் மகன் பயிற்சி பெற்று அந்தக் கொலைமுயற்சியில் தானும் உயிர் விடத் துணிந்திருக்கிறான் என்பதிலும் ஒரு தாய் பெருமைகொள்வது இயற்கையா? சர்வதேசக் கொள்ளை என்ற பலிபீடத்தில் அன்புடைய எந்த மனைவியும் தன் காதலனைப் பலிகொடுக்க நினைப்

பாளா? எனினும், மக்கள் மனத்தில் போலி வாழ்க்கை மதிப்புக்களைப் புகுத்தியதனுல் இந்தப் பலன்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவை மறைமுகமாக மக்கள் தங்கள் சுயேச்சையை ஹிம்சை நாசம் என்ற வழியில் செல்லும்படி விடப் பழக்குகின்றன. அவர்கள் சாதாரண நிலையில் ஆழ்ந்து சிந்தித்தார்களானுல் இந்த வழியை விட்டு ஓடிவிடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

இப்படிப்பட்ட கோணலான போக்கு ஏற்படும் பொருட்டு ஹிம்சைக்கு உன்னதமான நிலை கற்பித்திருக்கிருர்கள். சில்லறையில் கொலை செய்தால் மரணதண்டனை. ஆனுல் ஒரு பாவமும் அறியாத ஊக்கமிகுந்த இளைஞர்களைப் பெருவாரியாய்க் கொலை செய்தால், அப்படிப்பட்ட கொலைபாதகர்களுக்குத் தேசமே மரியாதை செய்கிறது. பெரிய பட்டங்கள் அளிக்கிருர்கள். தேவாலயங்களான வெஸ்ட்மினிஸ்டர் அபே, செயின்ட் பால் கதீட்ரல் முதலான் கோயில்களில் அவர்கள் ஞாபகார்த்தமாகச் சின்னம் எழுப்புகிருர்கள். ஆகவே, தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் பொருட்டு இவ்விதச் சுற்றுவழிகளெல்லாம் தேடிக்கொள்கிற ஒரு வாழ்க்கை அமைப்பில் அடிப்படையில் ஏதோ தீமை இருக்கிறதல்லவா? இந்தத் தலைகீழ் முறையானது பொதுமக்களுடைய உயர்ந்த உணர்ச்சிகளெல்லாம் மரத்துப்போகும்படி செய்து அவர்களை அறிவற்றவர்களாக ஆக்குகிறது. இந்தச் சிக்கலான வாழ்க்கைத் தரமானது பிரஸ்தாப நிலைமையை அமைதியாகச் சிந்தனை செய்வதற்கு மக்களுக்கு அவகாசமே கொடுப்பதில்லை யென்று முன்னமே பார்த்தோம். உள்ள நிலைமையே சரி என்ற திருப்தியைத் தந்து அதிகாரம் வகிப்பவர்கள் எவ்விதத் தடையுமின்றி தங்கள் நோக்கத்தை நடத்திக் கொள்ளும்படி விட்டு விடுகின்றது.

இது நடைபெறும் முறை மிகவும் சுலபமானது. இயற்கையின் நியதியின்படி மனிதன் தன் திருப்திக்காகவே உழைத்தான் என்று பார்த்தோம். ஆகவே, அந்த முயற்சி வெளிப்படுத்துவதற்கு அவனுடைய தேவைகளே நேரடியான தூண்டுகோலாக இருக்கிறது. தேவைகளைப் பெருக்கினுல் முயற்சியும் அதிகமாகிறது. அதுவே தேவைகளை மிகப் பலவாகப் பெருக்கவேண்டுமென்று சொல்வதற்குக் காரணமாகிறது. ஆகவே, முன்னமே மாட்டுக்கு மூக்கணுங்கயிறு எப்படியோ அதுபோல என்று நாம் சொன்னபடி, உலக வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது அல்லது அதைச் சிக்கலாக ஆக்குவது என்பதன் காரணமும் இதுவே ஆகும். அது மனிதனுடைய இச்சையை அடக்கி சுயேச்சையாக அவன் நடந்துகொள்வதையும்

செயல் புரிவதையும் தடுத்து, தலைக்கயிற்றை யார் பிடித்திருக்கிருரோ அவர் விரும்பும் வழியில் ஒருவனைச் செலுத்துகிறது. இப்படித் தலைக்கயிறு கட்டப்பட்டவன் பகுத்துணரும் தன் ஆற்றலை விரைவில் இழந்து கயிறு செலுத்தும் இடங்களிலெல்லாம் மறு பேச்சில்லாமல் செல்லுகிருன்.

இன்று உலகமானது ஆலைத்தொழில் முதலாளி காலின்கீழ் நசுக்குண்டு கிடக்கிறதென்று நாம் பார்த்தோம். மக்களுடைய குரலை வெளிப்பட ஒட்டாமல் செய்து எவ்விதத்திலும் தனக்கு லாபம் தரக்கூடிய ஓர் அமைப்பைப் பரப்புவதில்தான் அவருக்கு நன்மை இருக்கிறது. சமாதானம் நிலவுகின்ற இடைக்காலங்களில் அவர் சைக்கிள் செய்து விற்கிருர். யுத்தமேகம் வானத்தில் கவியும்போது அவர் குண்டும் பீரங்கியும் செய்கிருர். சுயநலத்தால் மூடப்பட்ட அவருடைய உத்தரவுகளுக்கு அறிவில்லாத மக்கள் கீழ்ப்பட்டு இப்படிப்பட்ட ஒருசமூகஅமைப்பு நடைபெறும்பொருட்டுத் தங்கள் அன்புக்குப் பாத்திரமானவர்களுடைய உயிரையெல்லாம் தியாகம் செய்கிருர்கள். இவ்வளவும், வேலையில் அடங்கிய சிரமமான உழைப்பு என்ற பாகத்தையும் அதனேடு பொருந்தியுள்ள ஒழுங்கு முறையையும் தனியே பிரித்துவிட்டு, நன்முறையில் உழைப்பதனுல் வருகின்ற திருப்தியையும் இன்பத்தையும் மட்டும் பெறுவதற்குச் செய்கிற முயற்சி ஆகும்.

ஆரோக்கியமான உழைப்பானது சமநிலை பொருந்திய உணவைப் போல நம் உடம்புக்குச் சக்தியையும் ஆரோக்கியத்தையும் ஓய்வையும் அளிக்கிறது. உழைப்பு உடலுக்குப் பயிற்சியும் வசதியும் அளிக்கிறது. அதனேடுகூட மனவளர்ச்சிக்கு ஏற்ற சந்தர்ப்பத்தையும் திருப்தியையும் அளிக்கிறது. ஆனுல் தற்போதைய போக்கானது இதனேடு பொருந்தியுள்ள கட்டுப்பாட்டை மட்டும் விலக்கி ஆதரவற்ற வகுப்பாருக்கு மட்டும் இக்கட்டுப்பாட்டைத் தந்துவிட்டு, உழைப்பினுல் வரும் இன்பமிக்க பலனையெல்லாம் ஆதிக்க மிக்க வகுப்பாருக்குப் பிரித்துக் கொடுத்து விடுகிறது. தற்காலப் போக்கானது இந்த நோக்கத்தோடு உழைப்பின் பகுதிகளைத் தனித் தனியாகப் பிரிக்க முயல்கிறது. உழைப்பில் அடங்கிய சிரமமான பாகத்தை நீக்கி இன்பமான உருவத்தில் உடற்பயிற்சியை மாத்திரம் டென்னிஸ், கிரிக்கெட், ஹாக்கி முதலான பந்து விளையாட்டுக்களாகிய மாத்திரை ரூபத்தில் தரமுயலுகிறது. இவை யாவும் ஏழைமக்களுக்கு எட்டமுடியாத செலவு மிகுந்த ஆடம்பரம் என்பது தெளிவு.

இந்த விதமாக உழைப்பைத் துண்டாடுவது, பெருங் கப்பல் களில் ஏற்படுத்தியுள்ள போலி விளையாட்டுகளை ஒத்திருக்கிறது. தரையில் செய்யக்கூடிய கவாத்துக்களும் விளையாட்டுக்களும் கப்ப லின்மேல் செய்ய முடியாதென்பது வெளிப்படை. ஆகவே, அங்கு தரையில் உள்ளவை போன்ற தசைநார்ப் பயிற்சிக்கு வேறு ஏற் பாடு வேண்டியிருக்கிறது. பெருங் கப்பல்களில் கவாத்துக் கூடங் கள் உள்ளன. அவற்றில் குதிரை சவாரி, துடுப்புத் தள்ளுதல் முதலிய செயல்களுக்குப் பதிலாக இவற்ருல் வரும் அசைவைத் தரவல்ல இயந்திரங்கள் இருக்கின்றன. ஒருவன் குதிரையின் சேணத்தின்மேல் ஏறி உட்கார்ந்து அதற்குள்ள மின்சாரப் பொத் தானைத் தட்டி விடுகிருன். அவனிஷ்டம்போல் அந்தக் குதிரை நாலுகால் பாய்ச்சலிலோ இரண்டுகால் பாய்ச்சலிலோ ஓடுகிறது. சவாரி செய்பவர்களுக்கும் உயிருள்ள குதிரை இல்லாவிட்டாலும் கூட தரையில் குதிரை ஓடும்போது உண்டாகின்ற அசைவை ஒத்த இயக்கங்கள் கிடைக்கின்றன. அதுபோல, படகு தள்ளுவதற்குச் செயற்கைத் துடுப்புகள் இருக்கின்றன. படகோட்ட விரும்பு வோர் காலை உதைந்துகொண்டு ஒரு பலகையிலிருந்து இப்படித் துடுப்புத் தள்ளலாம். தண்ணீர் தடுப்பதற்குப் பதிலாக, துடுப் பில் வில் வைத்திருக்கிறது. இங்கு குதிரை சவாரி, படகு தள்ளுதல் என்ற இரு செயல்கள் இருந்தபோதிலும்கூட இச்செயல்களால் வரும் இயற்கை யின்பங்கள் இல்லை. உதாரணமாக, காற்றிலும் நீரின்மேலும் செல்லுவதால் வரும் இன்பம், சென்றுகொண்டே இருக்கும் இயற்கைக் காட்சியினுல் வரும் இன்பம் முதலியன இல்லை. ஒரு வேளை கப்பற்பிரயாண காலம்வரையில் சில நாளைக்கு இப்படிச் செய்யலாம். ஆனுல் இவை என்றைக்குமே இயற்கையான செயல் களுக்குப் பதில் ஆகமாட்டா. இங்கு உழைப்பை, சிரமம் விளையாட்டு என்ற இரண்டு பாகங்களாகப் பிரித்து, சிலர் எப்போதுமே சிரம பாகத்தைச் செய்யும்படியும், சிலர் எப்போதுமே விளையாட்டுப் பாகத்தைப் பெற்றுக்கொள்ளும்படியும் செய்திருக்கிருர்கள். ஆனுல், இரண்டு பாகங்களும் சமமாய் இராமல் உழைப்பை வெவ்வேருகப் பிரிக்கும்போது, சிரம பாகம் கஷ்டமான பிழுக்கை வேலையாகவும், விளையாட்டுப்பாகம் சோம்பேறிக் குலாவலாகவும் ஆகின்றன. இரண் டும் மனித வளர்ச்சிக்கும் நல்வாழ்வுக்கும் தீங்கானவை. அடிமை யானவன் துன்பம் ஆற்ருமல் இறக்கிருன். பிரபுவானவன் போக மிகுதியால் மடிகிருன்.

இப்படிப்பட்ட பாகுபாடு தலைமுறை தலைமுறையாக நடந்துவந் திருக்கிறது. இந்த அமைப்பு, மனிதன் தனக்குள்ள மேம்பாட்டைப்

பெறமுடியாது என்றும் மீண்டும் மீண்டும் நன்ருய் நிரூபித்துக் காட்டியிருக்கிறது. நம்முடைய தலைமுறையிலே பார்த்தால் கட்டுப் பாட்டை விலக்கி இன்பத்தைமட்டும் பெறுவதற்கான முயற்சியானது மனிதகுலத்தின் மேல் போர், கொடுமை, பஞ்சம், சாவு ஆகிய புலி களை ஏவிவிட்டிருக்கிறது. ஆகவே, இப்போதாயினும் போதும் என்று சொல்லி, இம்முயற்சியை நிறுத்திச் சிந்திக்க வேண்டாமா?

## அத்தியாயம் 13

## உழைப்பைப் பங்கிடுதல்

சிறப்பான சாமர்த்தியமும் தனித்த திறமையும் வேண்டி யிருக்கிற உழைப்பைத் தனித்தனியாகப் பங்கிட்டு விட்டால் அதன் மூலம் நன்மைகள் உள்ளன என்பதை மறுக்க முடியாது. நம் நாட்டில் இப்படிப்பட்ட தனி உழைப்பானது அநாதிகாலமாக ஓங்கி யிருந்திருக்கிறது. அதுமட்டுமல்ல அது முற்றிக் காய்த்துப் பழுத்துப் பரம்பரைத் தொழில் சாதிவேற்றுமை என்ற வித்துக்களை விதைத் திருக்கிறது. இது ஒரு முட்டுச் சந்துபோல் ஆகி, அனேக துன்பங் களையும் தோற்றுவித்திருக்கிறது.

செம்மையான முறையில் வேலையைப் பங்கிட வேண்டுமென்று சொல்லிக்கொண்டு மேலைநாட்டுத்தொழில் முதலாளிகள் உழைப்பை மிக நுட்பமான துண்டுப் பிரிவுகளாகப் பிரித்து விட்டார்கள். இத ஞல் உழைப்பென்ருலும் பிழைக்கை வேலை யென்ருலும் ஒன்று என ஆகி, உழைப்பே சாபம் என்று அர்த்தம் ஆகிவிட்டது.

வேலையானது, உற்பத்தியாகும் பொருளை எல்லாம் ஒதுக்கி விட்டுப் பார்த்தால், உழைப்பவனுக்கு ஆரோக்கியமும் நன்மையும் தந்தாக வேண்டும். இதற்கு உழைப்பின் துண்டுப்பாகம் ஒவ் வொன்றிலும், அது நரம்புக்கு சோர்வு உண்டாக்காதபடி பல்சுவை யும் உல்லாசமும் அதிலேயே பொருந்தி யிருக்கவேண்டும். ஆகவே, எந்த அளவு வேலையைப் பாகுபாடு செய்யமுடியும் என்பதற்கும் எல்லை இருக்கிறது. அதைக் கடந்துபோனுல் அது ஆரோக்கியம் தருவதாயிராது.

துண்டாகப் பிரிக்கப்பட்ட பகுதியானது, எந்த அளவுக்கு முழுத்தொழிலுக்கு ஒத்திருக்கவேண்டுமோ, அந்த அளவுக்கு முழுத் தொழிலைப் போலவே இருக்கவேண்டும். அந்தத் தொழிலின் பகுதி மட்டும் என்றிருந்தால் போதாது. உதாரணமாக, தச்சுத்

தொழிலே எடுத்துக் கொள்வோம். அதில் செக்குச் செய்பவர், இயந்திரம் செய்பவர் என்ற இரு பிரிவாகச் சொல்லலாம். இவை ஒவ்வொன்றும் மிகுந்த திறமை வேண்டிய தனி இலாகா என்று கருதலாம். தச்சுத் தொழிலின் சகல திறன்களேயும் பூர்த்தியாய்க் காட்ட ஒவ்வொன்றும் இடங் கொடுக்கிறது. உற்பத்தியான சாமானும் பூர்த்தியானது, விற்பனைசெய்யத் தக்கது. அப்படியில்லாமல் இந்தத் தொழில்களை இன்னும் துண்டாகப் பிரித்து ஒரு பக்கம் மரம் முறித்தல், மற்ருெரு பக்கம் சக்கரத்தின் காலும் வட்டையும் செய்தல் என்ற அளவுக்கு பின்னப்படுத்திவிட்டால் இத்தொழில் பிழுக்கை வேலே ஆகிவிடுகிறது. தோல் தொழிலே எடுத்துக்கொண்டால், பூட்ஸ் செய்தல் அல்லது மட்டமான செருப்புச் செய்தல் கூட நல்ல தனிப் பிரிவு என்று கூறலாம். ஆனல், குதிக்கான தோலே மட்டும் கத்தரித்தல், அல்லது செருப்பின் மேல் வார் மட்டும் வெட்டுதல் என்பது செம்மையான தொழிற் பிரிவு ஆகாது.

இன்றைய தொழிற்சாலேகளில் வேலேப்பிரிவானது மிக மிக நுட்பமாகப் போய் ஒரு தனி மனிதனுடைய வேலே நாள் முழுமையும் ஆணி அடித்தல் அல்லது மறை முடுக்குதல் என்று ஆகிவிடுகிறது. ஒருவன் இந்த வேலேயை வருஷத்தில் முந்நூறு நாள் தினமும் 8 மணி நேரம் வீதம் செய்து வருவானுனல், அவனுக்கு மிகுந்த நரம்புச் சோர்வு ஏற்பட்டுச் சம்பளம் எவ்வளவு அதிகமாய்க் கொடுத்தபோலும் கூட, முடிவில் அவன் பைத்தியக்காரர் விடுதிக்குப் போய்ச் சேர நேரும். ஆகவே, உலகத்லேயே முழுவதும் தொழில் மயம் ஆகிவிட்டது என்று சொல்லுகின்ற அமெரிக்க நாட்டில் மற்ற நோய்கள் எல்லாவற்றையும் விட மிக அதிகமாக நரம்புக் கோளாறுதான் ஏற்பட்டிருப்பதில் வியப்பு உண்டா? மனித சரீரம் ஜீவனற்ற இயந்திரம் அன்று. அதற்கு அவனுடைய எல்லாத் திறன்களேயும் இயக்கத்தக்க சமநிலேயான செயல்கள் தேவை. இதற்குச் சற்று விரிவான வேலேப் பிரிவு இருந்தால்தான் முடியும்.

ஒரு வேலே முறையின் துண்டு பாகங்களான மிகச் சிறு வேலேப் பிரிவுகள் தாமே பூரணமாயில்லாவிட்டால் இவை மனித சக்தியைப் பெரிதும் விரயம் செய்கின்றன. ஏனெனில் இந்த வேலேயினுல் தொழிலாளிகள் வெகு சீக்கிரத்தில் செயல் செய்யும் சக்தியிழந்து போகிருர்கள். கஷ்டப்பட்டு வேலே செய்கின்ற தொழிலாளி ஒருவன் நாற்பத்தைந்து வயதுக்கெல்லாம் ஒன்றுக்கும் பயனற்றவனுக ஆகிருன். இந்த விரயம் என்பது மில்காரரை பாதிக்காமல் சமூகத்தைப் பாதிக்கிறது. இதற்குக் கருவியாக இருப்பது கூலிமுறை.

இதனல் முதலாளியானவன் மனித சக்தி என்ற அளவில் பெருநஷ்ட மடைந்தபோதிலும்கூட, தான் செழித்தோங்க முடிகிறது. அவன் தன்னுடைய வேலையமைப்பினுல் ஏற்படக்கூடிய சக்திநாசத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்படுவது இல்லை. தன் தொழிலாளிகளில் ஒருவன் வேலை செய்ய முடியாவிட்டால் உடனே அவனை நீக்கி விட்டு மற்ருேர் இளைஞனைப் போட்டுவிடுகிருன். இருவருக்குமிடை யில் எவ்வித விசுவாசமும் இல்லை. முதலாளியானவன், உறிஞ்சி முடித்த சுருட்டுத்துண்டைத் தயக்கமின்றி எறிந்துவிடுவதுபோல, அவனுடைய ஊழியத்தில் தன் ஆயுளையே தீர்த்துவிட்ட ஒரு தொழி லாளியைச் சிறிதும்தயக்கமின்றி நீக்கிவிடுகிருன். அன்றியும், அவனை நீக்கிவிடுவதனுல் முதலாளிக்கு லாபம் நிச்சயம். கிழவனுடைய ஸ்தா னத்தில் இன்னும் குறைந்த சம்பளத்தில் இளைஞன் வருகிருன். இவ்விதம் தன் ஆட்களுடைய உயிரை உறிஞ்சிவிடுவது பற்றி முத லாளிக்கு எவ்விதப் பொறுப்பும் இல்லை. இது மனிதத் திறன்களை யும் ஆயுளையும் இரக்கமற்ற முறையில் பாழ்படுத்துவதல்லவா ? இப்படிப்பட்ட விரயம் நமக்கு அழிவற்ற வாழ்வு தருமா ? இந்தத் தொழிலாளிகளுக்கு அதிகப்படிக் கூலி கிடைக்கிறதென்று யாரேனும் நினைக்கலாம். இது நாற்பத்தைந்து வயதுக்குப் பிறகு அவர்கள் வாழவேண்டிய வாழ்க்கைக்குரிய தற்போதைய மதிப்பை அளந்து கொடுப்பதாகும்.

மனிதனுடைய மேலான திறன்களைக் கவனிக்காமல், கூலி, உற் பத்தி, சிக்கலான வாழ்க்கைத் தரத்தை நடத்துதல் என்றெல்லாம் அளவுக்குமிஞ்சி வற்புறுத்துவதால், மனிதனுடைய சுயேச்சை நீங்கி அவனுடைய வாழ்க்கை மதிப்புக்கள் கோணி விடுகின்றன. இப் படிப்பட்ட நிலைமையில் தொழிலாளியின் நிலைமையும் வேலையும் செக்கிழுக்கும் மாட்டை ஒத்தவை. வடநாட்டில் செக்கு மாட்டுக் குக் கண்ணைக் கட்டிவிடுவார்கள். எங்கே போகிறது, எப்படிப் போகிறது எதற்குப் போகிறது என்று அதற்குத் தெரியாது. மூக்கணுங்கயிற்றை செக்கு மரத்தில் கட்டியிருப்பதனுல் அது எப் போதும் இடது பக்கம் போய்க்கொண்டே இருக்கிறது. திரும்பித் திரும்பிக் குறிப்பிட்ட சிறு எல்லைக்குள் அப்பாலெங்கும் போகமுடி யாமல் வளைந்து வளைந்து வருகிறது. வாணியன் அதற்குப் பெருந் தன்மையோடு கொஞ்சம் பிண்ணுக்கும் கொடுக்கிருன். அந்தப் பிண்ணுக்கோ அது நாள் முழுதும் கஷ்டப்பட்டு உழைத்ததனுல் கிடைத்த பிண்ணுக்கிலிருந்து எடுத்த சிறு பகுதி. நம் மில் தொழி லாளிகள் இதே போன்ற நிலையில்தான் இருக்கிருர்கள். வாழ்க்கை யின்பமும் ஆரோக்கியமான சுதந்திரச் சூழ்நிலையும் அவர்களுக்கு

இல்லை. வளர்வதற்கும் அபிவிருத்தி அடைவதற்கும் உரிய சந்தர்ப்பங்கள் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இயற்கை வகுத்த வேலை இதுவல்ல. ஆதலால் உழைப்பாளியின் சிறந்த திறன்களை இது அழித்து அவர்களுக்கு நாசந்தரும்.

பணமாய்க் கொடுக்கிற எந்தக் கூலியும் இந்த நஷ்டத்துக்கு ஈடுசெய்ய முடியாது. மில் முதலாளிகள் இவ்விதமாய்க் கஷ்ட வேலையிலிருந்து தாங்கள் தப்பி உழைப்பினால் வரும் விளையாட்டையும் இன்பத்தையும் மட்டுமே அடைய வேண்டுமென்று முயலுகையில், நம்நாட்டுச் சமதர்மவாதிகளான நண்பர்கள் வேலையிலிருந்து ஓய்வைப் பிரித்தெடுக்க வேண்டுமென்று எண்ணுகிறார்கள். சரியான உழைப்பை நாம் சரியாகப் புரிந்துகொண்டோமானால் அதற்குள்ளாகவே ஓய்வும் அடங்கியிருக்கிறது. சங்கீதசுரத்தில் காலம் ஒரு முக்கியமான அங்கம். அதுபோல வேலையிலும் ஓய்வு பிரிக்க முடியாத ஓர் அங்கம். இரண்டையும் தனியே பிரிக்கமுடியாது. ஓய்வென்பது சகல வேலைகளையும் பூரணமாய் நிறுத்திவிடுவது அன்று. அது மரணத்துக்கு ஒப்பாகும். அன்றி ஓய்வென்பது சோம்பியிருக்கின்ற நேரமுமல்ல. சோம்பலானது க்ஷீணத்தில் கொண்டுபோய் விடுகின்றது. நன்மை தருகின்ற ஓய்வென்பது ஒரு பண்புக்கு ஓய்வு கொடுத்து நம்மிடமுள்ள பிற பண்புகளுக்குப் பயிற்சி கொடுக்கிறது. மேஜையில் உட்கார்ந்து தன் புத்தியினால் வேலை செய்பவர் ஒருவருக்கு, மேஜையருகே உட்கார்ந்து மூளையினால்செய்கின்ற வேலைக்குத் துணையாகத் தோட்டவேலை போன்ற சுறு சுறுப்பானதொரு வேலை தேவை. எந்த வேலையும் மனிதனால் கெடுத்துவிடப் படாமல் இயற்கையாக அமைந்துள்ள தன் சரியான அலுவலைச் செய்யவேண்டுமானால், இப்படிப்பட்ட அம்சங்கள் அதற்குள்ளாகவே பொருந்தியிருக்க வேண்டும்.

ஒரு சமயம் வேலையின் இந்தத் தன்மையைப் பற்றி ஆராய்ச்சி நடத்துகின்ற ஓர் எஞ்சினியரோடு பேசிக்கொண்டிருந்தேன். வேலையும் ஓய்வும் ஒரே சமயத்தில் இருக்கமுடியும் என்பதைத் தம்மால் நம்பமுடியவில்லை என்று அவர் சொன்னார். இந்தச் சொல்லளவில் விளக்கிக் காட்டுவது கஷ்டமாயிருக்கலாம். ஆனால் செயலில் காட்டுவது சுலபம். ஆகவே சுற்றுப்பக்கத்திலுள்ள யாராவதொரு தொழிற்காரரை நாம் போய்ப் பார்க்கலாம் என்றும் அப்போது இந்த நிலைமையை அவரே கண்டு கொள்ளலாம் என்றும் அவருக்குச் சொன்னேன். இதை அவர் ஒப்புக்கொண்டு, பக்கத்திலுள்ள ஓர் உபாத்தியாயரிடம் அழைத்துச் சென்றார். இவர் குல்லா செய்து விற்பவர். இவருடைய வேலையில், அதாவது குல்லா செய்வ

தில், ஓய்வு எங்கே இருக்கிறது, வேலை மாற்றம் எங்கே இருக்கிறது என்றெல்லாம் விளக்கிக் காட்டும்படி அந்த எஞ்சினியர் என்னைக் கேட்டார்.

எப்படித் தாம் குல்லா செய்தார் என்பதை எடுத்துச் சொல்லும்படி அந்த உபாத்தியாயரைக் கேட்டோம். அவர் தம்முடைய சாமான்களடங்கிய கூடையை வெளியே கொண்டுவந்து வைத்து, குல்லாய்க்கான கம்பளத் துணியை எடுத்து, அதில் கோழிமுட்டை வடிவமாய் ஒரு துண்டைக் கத்தரித்தார். பிறகு சிவப்பு நிறமான மற்றொரு துணியை எடுத்து, அதிலும் இதே போல ஒரு துண்டு கத்தரித்தார். இதில் பழங்காகிதத் துண்டுகளைச் சேர்த்து வெளிப புறத்தில் தையல் இயந்திரத்தைக் கொண்டு பூவேலையும் தைத்தார். முன்னமே தயாரித்து வைத்திருந்த கம்பளத்தோடு கூடிய உச்சி பாகத்தை இதனோடு சேர்த்துப் பொருத்தினர். அதில் ஒரு தொளை போடும் கருவியைக் கொண்டு காற்றோட்டத்துக்காகச் சில துவாரங்களையும் அமைத்தார். இப்படி இவர் பலவகையான வேலைகளைச் செய்து வந்தபோது இந்த உழைப்பில் அடங்கியுள்ள சிக்கல்களையெல்லாம் எஞ்சினியருக்கு எடுத்துச் சொல்லிவந்தேன். உச்சியிலிருந்த கம்பளம் இத்தாலி தேசத்திலிருந்து வரவழைத்தது. சிவப்புத் துணி ஜப்பானிலிருந்து வந்தது. இந்தத் துணிகளைப் பெறுவதென்றால், உபாத்தியாயருக்குச் சர்வதேச வியாபாரத் துறையில் எத்தனையோ சிக்கல்கள் ஏற்பட்டன. துணி எடுத்துக் கத்தரிக்கோலால் அவர் கத்தரித்தபோது, வெவ்வேறான திறன்கள் அவரிடமிருந்து ஒவ்வொன்றாக வெளிப்பட்டன. பூவேலையைத் தைத்தபோது அவருடைய கலைத்திறன் வெளிப்பட்டது. காற்றுக்காகத் தொளைபோட்டபோது அவருடைய கலைத்திறனுக்கு ஓய்வு கிடைத்தது. அவருடைய சக்திகள் கலை சம்பந்தமான வேலையைவிட்டு வேறு வேலையில் திரும்பியதால், அவருடைய நரம்புத்தொகுதியில் மற்றொரு புதிய தொகுதிக்கு இப்போது வேலை ஏற்பட்டது, முந்திய தொகுதி ஓய்வு பெற்றது.

இவ்விதமாக நாங்கள் பேசிக் கொண்டிருந்தபோது, வீட்டின் பின்புறத்தில் உபாத்தியாயருடைய குழந்தை அழுதது. உடனே அவர் ஓடிக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு, 'இப்படி விருந்தினர் வீட்டில் வந்திருக்கிற சமயத்தில் குழந்தையை அழவிடலாமா?' என்று தம் மனைவியைக் கோபித்தார். இவ்வாறு அவர் சண்டைபோட்டுக் கொண்டிருந்த சமயத்தில் நான் எஞ்சினியரைப் பார்த்து, "பாருங்கள், இப்போது தம் வேலையிலிருந்து அவர் போதுமான ஓய்வும் பொழுதுபோக்கும் பெற்றுக் கொள்கிறார்" என்று கூறினேன்.

அவர் சிரித்துக்கொண்டு, "உங்களுடைய கருத்து இப்போது எனக்கு நன்ருய் விளங்குகிறது" என்று சொல்லிவிட்டுப் போக எழுந்தார்.

வாழ்க்கை தன் போக்கிலே நடைபெறும்படி விட்டால் பின்னர் நாமாக வேண்டுமென்று முயற்சிசெய்யாதபடி அதனுடைய தேவைகள் அனைத்துக்கும் வேண்டிய ஏற்பாடு செய்யும் திறமை அதனிடமே இருக்கிறது. உழைப்பும் வாழ்க்கையில் அதன் வேலையும் மேற் கூறியவை ஆகும். உழைப்புத்தான் மனிதன் தன் திறன்களை வளர்த்துக் கொள்ளவும், தன் வாழ்நாளிலேயே தன்னை அபிவிருத்தி செய்துகொண்டு தான் மறைந்த பிறகு தன் பெயரை நிலைநாட்டவும் அவனுக்கு உதவுகிறது. அவன் உழைப்பினுல் தோன்றுகிற பொருளே அவன் வாழ்க்கையில் சிறந்த அம்சமாகும். அந்தப் பொருளில் அவன் குணச் சிறப்பானது மறையாத முத்திரை இடப் பெற்றிருக்கிறது.

ஓவியன் ஒருவன் ஒரு சீலையில் தன் கலையுணர்ச்சியைப் பதித்து வைத்துப் பின் சந்ததிகள் பார்த்துப் போற்றவும் வியக்கவும் ஏற்ற அரியதோர் ஓவியத்தை எவ்வாறு விருத்திசெய்கிருன் என்பதை முன்னமே பார்த்தோம். அவன் சீலையில் வர்ணம் பூசிக் கொண்டிருக்கிற காலத்தில் பார்த்தால், நாட் கணக்காக செய்கின்ற கஷ்டமான பிழுக்கை வேலை என்றுதான் அந்த வேலை தோன்றும். ஆனுல், இணையற்ற ஓவியம் ஒன்று தயாராக வேண்டுமானுல் இந்த உழைப்பு இருந்தே தீரவேண்டும். 'லித்தோ' முறையில் அச்சு எடுக்கிற ஒரு படத்துக்கு அப்படிப்பட்ட கஷ்டமான பிழுக்கை வேலை தேவையில்லாது போகலாம். ஆனுல், உண்மையான கலையின் வேலையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, லித்தோ படமானது குப்பைக் காகிதத்துக்குச் சமம்.

படம் எழுதுகின்ற வேலை தொடங்குவதற்கு முன்னமே கூட, வர்ணங்கள் குழைப்பதிலும் கலப்பதிலும் பலநேரம் கஷ்டப்பட்டு வேலை செய்தாக வேண்டும். அஜந்தா குகையிலுள்ள சித்திரங்களின் வர்ணம் எத்தனையோ நூற்றுண்டுகளாக சிறிதும் மங்காமல் ஒளிவிடுகின்றன. இவற்றின் ரகசியத்தைக் கண்டறிய மிகப்பலவான ஆண்டுகள் செலவிட்டிருக்கவேண்டும். அக்காலத்திலிருந்த ஓவியர்கள் இவ்வர்ணங்களைக் கண்டறியப் பல ஆண்டுகள் உழைக்கத் தயங்கவில்லை. ஒப்பற்ற இந்த கலைக் கொடைக்கு அவர்களுடைய சந்ததியில் பின் வந்த மக்கட் சமூகம் தலைவணங்கி மரியாதை செய்கிறது. இயற்கையானது கஷ்டப்படுத்தி வேலை வாங்கும் எஜமானன். அரைமனதோடு செய்கிற வேலைக்கு இயற்கையானது ஒருபோதும் சிரஞ்சீவித்துவம் அளிப்பதில்லை.

அந்த ஓவியர்கள் தேவையான கடின உழைப்பைச் செலுத்தாமல் தங்கள் ஓவியம் சிறப்படைவதற்குக் குறுக்கு வழி துறைகளை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. சிரஞ்சீவித்துவம் அடைய நாம் விரும்பினல் பூரணமான உழைப்பைச் செய்யவேண்டும். அரைகுறையான உழைப்புப் போதாது. அரைகுறையான உழைப்பு தற்போதைக்கு மட்டும் பொருந்தும். இயற்கையை மற்றவர்கள் மருட்டவோ ஏமாற்றவோ முடியாது.

இதுபோல, எல்லோராவில் முழுமலையிலிருந்து குடைந்தெடுத்துக் குகைக் கோயில்களைச் சிருஷ்டித்த சிற்பிகள் எதிர்காலத்தில் தோன்றவிருக்கும் பல்லாயிரம் தலைமுறைக்கும் தங்களுடைய பக்தி பூர்வமான உழைப்பின் அற்புதச் சின்னமாக அச்சிற்பங்களை விட்டுச் சென்றிருக்கிருர்கள். அவர்களுடைய சிற்பங்களில் அமைந்துள்ள அளவும் அழகும் பொலிவும், உழைப்பிலிருந்து தப்பவேண்டுமென்ற முயற்சியினுலோ அல்லது உழைப்பைத் தவிர்க்கக் குறுக்கு வழி தேடச்செய்த முயற்சியினுலோ, விளைந்தவை அல்ல. கிடைத்த சந்தர்ப்பத்தை நேர்முகமாய்ப் பயன்படுத்தியதால் முடிந்தவையே அச்சிற்பங்கள். முறையாக உழைத்தால், அந்த உழைப்பானது, உழைப்பவருக்கும் அந்த உழைப்பினுல் விளைந்த பொருள்களுக்கும் பெரிய வரப்பிரசாதமாயிருக்கிறது.

விசுவாசத்தோடு நன்ருகச் செய்கின்ற வேலைக்கு மற்ருேர் உதாரணம் கூறுவோம். டெல்லியில் குதுப் மினுர் இருப்புத்தூண் புராதனமானது. அழியாதது. இந்தக் கம்பமானது பல நூற்ருண்டுகளாக வெய்யிலில் நின்று மழையிலும் காற்றிலும் வெப்பத்திலும் பனியிலும் நனைந்திருக்கிறது. ஆயினும் இதன்மேல் ஒரு துளி துருகூட ஏறவில்லை. இந்த இரும்பு செய்யப்பட்டுள்ள கலப்பு முறை தற்கால உலோக சாஸ்திரிகளுக்கு இன்னும் விளங்காத புதிராக இருக்கிறது. இந்த அற்புதமான கம்பத்தை முற்காலத்தில் அமைத்த இருப்புச் சிற்பிகள் இப்படிப்பட்ட அற்புதம் விளைவதற்குக் குறுக்கு வழி என்ன வென்று தேடவில்லை. இதற்கு அவசியமான கஷ்ட உழைப்பையோ ஒழுங்கையோ தவிர்க்க எண்ணவில்லை. உழைப்பு எப்படி இருக்கவேண்டுமென்று இயற்கை விதித்திருக்கிறதோ அப்படியே இவர்களும் மேற்கொண்டார்கள். இதன் பயனுகத்தான் இந்த ஆச்சரியகரமான நினைவுச் சின்னம் இவ்வுண்மையை நமக்கு எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கிறது.

செல்வம் சுகபோகம் என்று நாம் நினைத்தால், சுரங்கத்திலிருந்து தங்கம் எடுக்கும் தொழிலோடு சேர்ந்தே அது ஞாபகம் வரும். ஆனல், இந்தியாவில் மிகவும் பிரசித்தியான தங்கச் சுரங்கம்

அமைந்துள்ள ஜில்லாவானது, இந்தியாவிலேயே மிகவும் வறுமை பொருந்திய பிரதேசமாயுள்ளது. இதற்குக் காரணம், கஷ்டமான வேலையை ஒரு வகுப்பாருக்கு ஒதுக்கிவிட்டுச் சுகத்தை மட்டும் மற்றொரு வகுப்பார் அனுபவித்ததுதான். அந்த ஜில்லாவில் வாழும் குடியானவர் பசுவை பால் கொடுப்பதற்கும் பால் மரத்தபோது வயல் உழுவதற்கும் உபயோகிக்கிற அளவுக்கு அவ்வளவு கொடிய வறுமையில் ஆழ்ந்து விட்டார்கள்.

ஒரு சமயம் நான் அங்கே போயிருந்தபோது ஏழாயிரம் அடி அளவு மிகவும் ஆழமாயுள்ள ஒரு சுரங்கத்துக்கு என்னை அழைத்துச் சென்று காட்டினார்கள். அங்கு 'டேவி' விளக்கு என்று பெயர் உள்ள சிறு விளக்குகளின் துணைகொண்டு, மனிதர் பூமியைக் குடைந்து பாறையை உடைத்துத் தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காகச் சொற்ப ஊதியம் பெற்றுக் காலை முதல் மாலை முடிய தூசியிலும் அழுக்கிலும் அபாயத்திலும் உழைக்கிறார்கள். இந்த உழைப்பினால் வரும் துன்பம் மிகவும் அதிகமானது. இதன் பயனாய், சுரங்கத்தினுள் வேலை செய்த மனிதரை நல்ல காற்றும் வெளிச்சமும் உள்ள வெளியிடத்துக்குக் கொண்டுவந்தால் அவர்கள் பூரணமாய்ச்சோர்ந்து போய்க் காணப்படுகிறார்கள். அன்றியும், அந்த ராஜ்யத்துக்கு இந்த ஜில்லாதான் மிகவும் அதிகமான மது வருமானம் கொடுக்கிறது. ஆகவே இவ்வளவு சிரமப்பட்டு நரம்புகளெல்லாம் சோர்ந்து போயிருக்கிற சுரங்கத் தொழிலாளிகள் மிகவும் கருணையுடைய மதுவினிடம் அடைக்கலம் புகுவதில் வியப்புக்கு இடமேது? இவர்களிடையே மிகவும் கொடுமையான மேகரோக நோய்கள் அதிகம். நரம்பு அமைப்பு அதிகமாகத் துன்பமடைந்தபோது மக்கள் ஓய்வு தேடும்பொருட்டு மது இன்பத்திலும் பெண் போகத்திலும் சரண் அடைகிறார்கள். இது மனித அமைப்பிலுள்ள கோளாறான நிலைமை.

நான் பார்த்து முடித்ததும், அந்தச் சுரங்கத்தின் நிர்வாகியானவர், 'அந்தச் சுரங்கத் தொழிலாளரின் வாழ்க்கையை மேம்படுத்தக் கூடிய சமூக நலத்திட்டங்கள் எவையேனும் சொல்லமுடியுமா?' என்று என்னைக் கேட்டார். நான் இரண்டு திட்டங்களைக் கூறினேன். ஒன்று, அப்படிப்பட்ட தங்கச்சுரங்கத்தை மூடிவிடுவதே தொழிலாளருடைய உழைப்பையும் தொழிலாளரையும் பழைய உயர்ந்த நிலையில் அமைக்கவல்ல சிறந்த சமூக நலவேலை என்பது. இரண்டாவது, அந்தத் தொழிலாளர் தங்கள் துன்பங்களை எல்லாம் மறந்துவிடச் சௌகரியமாக அதிகமான கள்ளுக்கடைகள் நற்படுத்துவது. என்னுடைய யோசனைகள் சுரங்க நிர்வாகிக்கு

மிகுந்த மன அதிர்ச்சியை உண்டுபண்ணின என்பதில் சந்தேகமில்லை. என் திட்டங்களில் ஒன்றையும் கம்பெனியார் ஏற்றுக்கொள்ளவில்லை. காரணம் அந்தக் கம்பெனியார் தங்கள் பங்குதாரர்களுக்கு மிகவும் அதிகமான லாபம் கொடுத்துவந்தார்கள். ஆகவே அவர்களுக்கு மக்களைவிடப் பணமும் பொன்னுமே பிரதானம்.

இயற்கையானது அமைத்துள்ளபடி உழைப்பிலிருந்து நாம் முழு நன்மையையும் பெறவேண்டுமானால், உழைப்பை நன்மை தராத வெவ்வேறு பாகங்களாய்ப் பிரித்து விடாமல், அதனுடைய பூர்வமான எளிய தன்மையை ஒட்டியே நாம் செயலில் இறங்க வேண்டும்.

### கூலி

உழைப்பவர்களுக்கு நன்மைகள் விளைவிப்பதன் மூலம் உழைப்புக்குச் செம்மையான முறையில் இயற்கை பரிசளித்ததை நாம் பார்த்தோம். உழைப்பின்மூலம் கிடைத்த அந்த நன்மைகளே இயல்பான கூலி என்று சொல்லலாம்.

வாழ்க்கையானது சிக்கலாகி வரவர, மனிதன் உழைப்பைப் பங்கிடு செய்ய ஆரம்பித்தான். முழு உழைப்பினால் கிடைக்க வேண்டிய இயற்கையான நன்மையில் ஒரு பங்கு ஆகிய பணமாக உள்ள கூலி ரூபத்தில் பிரதி பலனும் கொடுத்தான். ஆனால் உழைப்பினுடைய உண்மையான காரியம் என்ன என்பதை நாம் மறவாது சதா நினைவில் இருத்துவோமானால், இப்படிப்பட்ட சிக்கல்களால் நம் பாதையை விட்டு நெடுந்தூரம் விலக நேராது.

துரதிர்ஷ்ட வசமாய், கூலிகொடுப்பது என்ற முறை ஏற்பட்ட பிறகு, உழைப்பின் காரியம் என்பதற்கிருந்த முதன்மை நீங்கி, உழைப்பினால் விளையும் பொருளுக்கு முதன்மை ஏற்பட்டு விட்டது. இதன் பயனாய் உழைப்பின் காரியத்தை விலக்கிவிட்டு, உற்பத்தியான பொருளே ஆதிக்கம் வகிக்கிறது. முதலாளி ஒருவன் சந்தையில் மிக அதிகமான லாபத்துக்கு எந்தப் பொருளை விற்பனை செய்யலாம் என்று சிந்திக்கிறான்: குறைந்த செலவில் அந்தப் பொருளைப் பிறகு உற்பத்தி செய்ய முற்படுகிறான். அதைச் செய்யக் கூலி தருகிறேன் என்றும் அழைக்கிறான். ஏற்கெனவே அதிகமாய்த் திரண்டுள்ள தொழிலாளி வர்க்கத்தார், கூலிக்காக அந்தப் பொருளை உற்பத்தி செய்ய நான், நீ என்று போட்டியிடுகிறார்கள். தர்ம ரீதியாக இதன் பலன் என்ன? உழைப்பதற்கான நிபந்தனைகள் யாவை? வேலையின் முறைகள் யாவை? பலன் யாது — என்று

அவர்கள் எண்ணுவது இல்லை. பணத்தைத் தவிர அதிக மான மதிப்புடையது எதுவும் இந்தப் பேரத்தில் சம்பந்தப்பட வில்லை. இவ்விதமாக உழைப்பை வியாபாரம் ஆக்கி, அதிகத் தொகைக்கு ஏலங்கேட்கக் கூடியவர் பயன்படுத்தத்தக்க சரக்கு என்ற அளவுக்குத் தொழிலாளர் தாழ்த்தப்பட்டு விட்டார்கள். முதலாளியோ, எவ்வளவுகுறைந்த வீதத்துக்குத் தொழிலாளரை அமர்த்திக்கொள்ளலாமோ அவ்வளவு குறைந்த வீதத்துக்கு அவர் களைத் தேடிக்கொள்கிறார்.

ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையில் அடிமைகளாகச் சிறை பிடித்தமக்களை அமெரிக்காவில்தோட்டங்களுக்குக்கொண்டுபோய்ச் சேர்க்கக் கப்பல்களை நடத்த அடிமை வியாபாரிகளுக்கு மாலு மிகள் தேவையாக இருக்கிறார்கள். அல்லது கஞ்சா தோட்டக்காரர் ஒருவருக்கு,சீனமக்கள் தொண்டையில்திணிப்பதற்காகத் தம் வயலில் அபினி உற்பத்தி செய்ய ஆள் தேவையாக இருக்கிறது. பணமாய்க் கொடுக்கிற கூலி ஒன்று நீங்கலாக, வேறு எவ்விதச் சமூக தர்மத் தையோ நீதி தர்மத்தையோ ஒன்றும் கருதாமல், மேற்குறிப்பிட்ட இருவருக்கும் தொழிலாளர் கிடைத்தாக வேண்டும். இவ்வாறாக, நீதி மதிப்புக்கள் போன்றவற்றின் ஜீவனைப் போக்கிவிடுகிறார்கள். ஒரு தாய் குழந்தைக்குப் பால் கொடுத்தாலும், தன் பிள்ளைகளுக்காக



அன்பும் மகிழ்ச்சியும் ததும்பப் பால் கொடுக்கிற தாய்

உணவு சமைத்தாலும், சேவை வாழ்க்கை முறையில் இயற்கை ஏற்படுத்தியுள்ள வழியில் அவள் வேலை செய்கிறாள். அவளுக்குக் கிடைக்கின்ற பிரதிபலன் எல்லாம், நல்ல சோறு உண்டு சந்தோஷ

மாய் வாழ்கிற தன் பிள்ளைகளைக் காண்பதில் வருகிற இன்பம்தான். இதுவே அவளுடைய கூலி.



தான்பெறுகிற பணத்துக்காகப் பிள்ளைக்குப் பால் கொடுக்கும் தாதி

முயற்சி வாழ்க்கை என்பது இதிலிருந்து மிகவும் தாழ்ந்த படி. இங்கு பால்காரி கூலிக்காகப் பால் கொடுக்கிறாள். அல்லது சம்பளத்துக்காகச் சமையல்காரி சோறு ஆக்குகிறாள். இரண்டு வகையிலும் தாய் செய்யும் வேலையும் அவளுடைய காரியமும் வியாபாரச் சரக்கு ஆகிவிட்டன. கூலிப் பால்காரிக்கும் சமையல்காரிக்கும், கிடைக்கிற சம்பளத்தில்தான் சந்தோஷம். குழந்தைகளின் நன்மை என்பது அடுத்தபடிதான்.

கொள்ளை வாழ்க்கை இதைவிட இன்னும் கீழ்த்தரமானது. இங்கு தாயினிடமுள்ள இயற்கையான பாலுக்குப் பதிலாகச் செயற்கைப் பால் கொடுக்க முயல்கிறார்கள். இதற்குக் காரணம் தாயிடம் பால் இல்லையே என்கிற கவலை அன்று. தாயின் அழகு குலையக் கூடாது என்கிற நினைப்பு! இது காரணமாய், பாவம், அந்தக் குழந்தைக்குச் செயற்கைப் பாலைப் புட்டியில் அடைத்துப் புகட்டுகிறார்கள். பால் உற்பத்தியாளனுக்குக் குழந்தையைப் பற்றிக் கவலையில்லை. தன் சரக்கைப் பலவிதத்திலும் விளம்பரம் பண்ணி, தாயின் அழகு கெடக்கூடாது என்ற நினைப்பையும் பயன்படுத்திக் கொண்டு, தன் சரக்கைக் கடையில் எப்படி அதிகமாக விற்பனை செய்யலாம் என்றே அவன் திட்டமிடுகிறான்.

இன்னும் கேவலமாக, புட்டிப் பாலுக்குக் கூறப்பட்டு வருகிற சிறந்த குணங்களெல்லாம் உண்மையில் ஒன்றுமில்லாதபோது, இதுவே கொலை வாழ்க்கை ஆகிறது. இங்குக் குழந்தைக்கு எவ்விதக்



தாயின் அழகைக் காப்பதற்காகக் குழந்தை புட்டிப்பால் குடித்தல்

கொடுமை நேர்ந்தபோதிலும் சரி, அதைக் கவனிக்காமல் லாபம் அடிப்பது ஒன்றே முக்கியமான நோக்கமாக இருக்கிறது. இவ்வாறு தாய்க்குரிய இயற்கையான வேலையைப் பணம் என்கிற பிரதிபலனுக்காக அனேக மனிதரும் கருவிகளும் செய்ய முற்படுகிறார்கள். இங்கு தாயின் உழைப்புக்கு உரிய கௌரவமும் அதனோடுகூட தன்னைச் சார்ந்துள்ள நன்மை பயக்கத் தக்க சகல அம்சங்களும் அழிந்து படுகின்றன. மிச்சம் உள்ளது எல்லாம், வெறும் வியாபாரப் பொருள். இது பணத்துக்கு விற்று வாங்கப்படுவது.

ஒரு காலத்தில் காஷ்மீரத்தில் செய்துவந்த ஒருவகையான வண்டிக் கம்பளம் மிகவும் பிரசித்தமாயிருந்தது பார்வைக்கு அது தேங்காய்ப்பூத் துவாலை என்று சொல்லுகிற துண்டுபோல மேற்புறம் மென்மையான ரோமமுடையதா யிருக்கும். அது மிகவும் மிருதுவானது, குளிருக்கு வெப்பம் தருவது. அதைச் செய்ய அதிக வினைத் திறமை வேண்டியிருந்தது. நாளும் அதிகம் பிடித்தது. ஆதலால் அவை மிக்க விலை உயர்ந்தனவாயும் இருந்தன. ஆனால் காலக்கிரமத்தில் மில்லில் செய்த கம்பளங்கள் வழக்கத்துக்கு வந்த பிறகு அவை குறைந்துபோய் விட்டன.

ஒரு சமயம் எளிய தொழிலாளர் சிலர் சாலை போடுவதற்காகக் கல் உடைத்துக் கொண்டிருந்ததைச் சர்க்கா சங்க ஊழியர் ஒருவர்

கண்டார். விசாரித்தால் அவர்கள் இவ்விதக் கம்பளம் நெய்தவர் என்றும், இவ்விதக் கம்பள நெசவுக் கலையில் அவர்கள் தேர்ந்த நிபுணர்கள் என்றும் தெரிய வந்தது. அவர்கள் நெய்த கம்பளத்துக்குக் கிராக்கி இல்லாமற் போனதும், அவர்கள் பிழைப்பிழந்தார்கள். கலையுலகமும் அவர்களுடைய தேர்ந்த திறன்களின் பலனை இழந்தது.

உழைப்பே பிரதானமென்று கருதாமல் விளைந்த பொருளே பிரதானமென்று கருதியதனுல், தொழிலில் தேர்ந்தவினைஞர்கள் கல் உடைப்பவர்களாக ஆகிவிட்டார்கள். இது மக்களின் திறன்களைச் சிக்கனமாகவும் இயற்கையானமுறையிலும் உபயோகிப்பது ஆகுமா? உழைப்பின் உண்மையான காரியத்தை மறந்துவிட்டு வெறும் பணக் கூலி முறையைக் கைக்கொண்டதனுல் விளைந்த இழிவு இத்தகையது.

ஆலை உற்பத்திப் பொருள்களை இறக்குமதி செய்ததனுல், தங்களை மேம்படுத்தவல்ல உழைப்பின் பயனை தொழில் வினைஞர் இழந்துவிட்டார்கள். முன்னமே இங்கிலாந்தில் சுதந்திரமாய் இருந்த குடியானவர்கள் தொழிற்சாலைகளுக்கு ஏற்ற அடிமைத் தொழிலாளர்களாக எப்படி ஆனுர்கள் என்பதை முன்பு நாம் பார்த்தோம். அப்படிப்பட்ட தொழிற்சாலைகளிலிருந்து இறக்குமதியாகி வந்த பொருள்கள் நம் நாட்டிலுள்ள மக்கள் தங்கள் ஜீவனத்துக்காக வேண்டி வாயில்லாப் பிராணிகளோடு போட்டி போடும்படி செய்துவிட்டன. பெரிய நகரங்கள் பலவற்றில் பாரவண்டி இழுக்கவும், ரிக்ஷா வண்டியிழுக்கவும் மாட்டுக்கும் குதிரைக்கும் பதிலாக மனிதரே பயன்பட்டு வருவதை நாம் சாதாரணமாய்ப் பார்க்கிருேம். யந்திர மயமான நாடுகளில் ஏற்பட்டுள்ள உழைப்பை மிச்சப்படுத்தும் சாதனங்களின் இந்திய அமைப்பே இந்த நிலைமை. இது இங்கிலாந்தில் பிழைப்பை மிச்சப்படுத்தலாம். ஆனுல், இந்தியாவில் இது மக்கள் வயிறு வளர்ப்பதற்காக எதையும் செய்யும்படி செய்து வருகிறது. ஒரு வட்டாரத்தில் அமோகத்தைத் தருகின்றது எதுவும் மற்ருெரு வட்டாரத்தில் பஞ்சத்தைத் தோற்றுவித்தல் ஆகாது. அந்த முறை சிக்கலான பிரசினைகளையும் புதிய கஷ்டங்களையும் தோற்றுவிக்காதபடி தீர்க்கவல்லது என்று கூறும் பட்சத்தில், தொழில் திறமை வாய்ந்த ஒரு வினைஞனைக் கல்லுடைப்பவனுகவும் ரிக்ஷா இழுப்பவனுகவும் ஆக்கி, வாயில்லாப் பிராணிகளோடு போட்டி போடும்படி செய்வது முன்னேற்றமாகுமா?

உழைப்பை நாம் அதற்குரிய உன்னத நிலையில் மீண்டும் ஏற்றி வைக்கவேண்டும். உன்னத நிலையாவது, நடையை உருவாக்குதலும் மனிதத் திறன்களில் உயர்ந்தவற்றை வளர்த்தலும் ஆகும். உழைப்புக்கு ஏற்பட்டுள்ள தளைகளிலிருந்து அதை விடுதலை

செய்து இயற்கையை யொட்டி வேலை செய்யத் தாராள சந்தர்ப்பம் அளிப்பதில்தான் இவை சாத்தியமாகும். மனிதன் வாழ்க்கையாகிய ஜோதி பெற்று ஒளி விடுவதற்கு உழைப்பு என்ற அக்கினி தேவையாக இருக்கின்றது. கிரமமான உழைப்பானது உழைப்பவனுக்கு மாத்திரமல்லாமல் சுற்றியிருப்பவனுக்கும் ஒளி தரவல்லது. அன்பு நிறைந்த தாயானவள் தன்பிள்ளைகளுக்காகக் கஷ்டப்பட்டு உழைக்கும் போது, அதில் தான் இன்பங் காணுவதோடல்லாமல், அந்தக் குடும்பம் முழுமையுமே அவளுடைய அன்பையும் ஆதரவையும் பெற்றுக்கொள்கிறது. குழந்தைகளின் உடலும் உள்ளமும் நன்ருய்ப் போஷிக்கப்பட்டுத் திடம் பொருந்திய பிரஜைகளாக அவர்கள் அங்கு வளர்வார்கள். ஆனால் ஒரு தாதியோ வேலைக்காரியோ எவ்வளவு திறமையாக இருந்தாலும், வீட்டிலுள்ள தாய்க்கு அவர்கள் ஈடுசெய்ய முடியாது.

இதேபோல, உழைப்பவனுடைய உண்மையான வேலையைப் பணக்கூலி என்று ஆசை காட்டி நடத்திவிட முடியாது. தாயின் அன்பை விலைக்கு வாங்கவோ விற்கவோ முடியாது. அதுபோல உழைப்பில் அடங்கிய தொழில் விணைஞனுடைய ஆர்வம், உழைப்பை வியாபாரச் சரக்காக ஆக்கும்போது, குன்றிவிடுகிறது.

வைத்தியர் ஒருவர் நோயாளியினிடத்திலும் நோயினிடத்திலும் அதிக ஆர்வம்கொண்டிருக்கிறுர். அவர் ஒவ்வொரு நோயையும் கூர்ந்து முயற்சியெடுத்துக் கவனிப்பதால் பணத்துக்காக மட்டும் நோயாளியைக் கவனிக்கிற வைத்தியர் பெறுகிற அனுபவத்தையும் அறிவையும் விட இவர் அதிகமாகவே பெறுகிறுர். முதல் வைத்தியர் உழைப்பில் ஆர்வம் இருப்பதனுல் வேலை செய்கிறுர். மற்றவர் பணத்தில் ஆசை கொண்டு வேலை செய்கிறுர். முந்தியவர் உண்மையில் தொழில்காரர்; பிந்தியவர் கேவலம் ஒரு மருந்து வியாபாரி; இன்னும், கம்பெனி மருந்துகளை அவர் எழுதிக்கொடுக்கிற வரையில், உற்பத்தியாளருக்குச் சாமான் விற்கிற ஆள். ஒருவனுக்கு உயிர் போகலாம்: ஆனுல் பணத்தை ஆதாரமாய்க்கொண்ட வாழ்க்கையில், ஒரு நல்ல வைத்தியருக்குரிய கட்டணம் கொடுக்க அவனுக்குப் பணம் இல்லாமற் போனுல் எந்த வைத்திய உதவியும் கிடைக்காது. மற்ருருவன் எந்தக் கொடுநோயும் இல்லாமலே நோய் இருப்பதாகப் பாவனை செய்கிருன். ஆனுல் அவனிடம் பணம் இருக்கும் பட்சத்தில், வைத்தியத் தொழிற்காரர் அனைவரும் அவன் சொன்னபடி ஆடுவார்கள்.

அதுபோல, தம்மிடம் வந்த வழக்கில் தர்மரீதியான கவலை எடுத்து அதேமாதிரி நடவடிக்கை நடத்துகிற வக்கீல் ஓர் உண்மையான தொழிற்காரர். மற்றவர் தமக்குக் கிடைக்கிற கட்டணத்துக்

காக வழக்கை நடத்துகிறவர் சட்டத்தை வியாபாரம் செய்பவர் ஆவார். இன்றைக்குச் சிறையில் இரும்புக் கம்பிகளை எண்ணிக் கொண்டு அனேகர் இருப்பதற்குக் காரணம், பேராசை பிடித்த தம்முடைய வக்கீலுக்குத் திருப்தியளிக்கக் கூடிய தொகை கொடுக்க இயலாமையே ஆகும்.

துரதிர்ஷ்ட வசமாக, வாழ்க்கையின் ஒவ்வொரு துறையும் சந்தைக் கடைக்கு வந்து பணமே பிரதானம் என்ற வாழ்வின் பிடியுள் அகப்பட்டுவிட்டது. அது காரணமாய் மனிதப் பண்புடைய தொழிற்காரர்களைக் காண்பது அரிதாக இருக்கிறது.

இப்போது நாம் பார்த்த சந்தர்ப்பங்களிலெல்லாம், முதன்மையானது உழைப்பை விட்டுக் கூலிக்கு மாறியிருக்கிறது. கூலியில் ஆக்கப் பண்பு எதுவும் இல்லாமையால் வளர்ச்சியும் பூஜ்யம். நம் நாட்டில் வைத்தியத் துறையில் குறிப்பிடத் தக்க திறமை வாய்ந்த ஆராய்ச்சியாளர் எவரும் தோன்றவில்லை என்று அனேகர் குறைகூறுகிருர்கள். இதற்குக் காரணம் காண்பது எளிது. வைத்தியர்கள் கொலை வாழ்க்கை அல்லது கொள்ளை வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்கிருர்கள். அவர்களில் மிகச் சிலரே முயற்சி வாழ்க்கையை எட்டிப் பிடித்தவர்கள். கூட்டு வாழ்க்கையோ சேவை வாழ்க்கையோ மிகவும் அபூர்வம்; அவர்களால் பயன் விளையவில்லை. காரணம் அவர்கள் வேலைத்துறை மிகவும் விரிவாய் இருப்பதும், அமைப்பான முறையில் வசதிகள் இல்லாதிருப்பதும் ஆகும்.

வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் நேர்மையான உண்மை ஊழியர் இல்லாத குறை தெரிகிறது. பணம் பிரதானமான வாழ்க்கையில், முதன்மையானது உழைப்பை விட்டுக் கிரமமாய்க் கூலியிடமும் பொருளிடமும் சென்றுவிட்டதால் இந்தக் குறை ஒரு வேளை தவிர்க்க முடியாதது ஆகலாம்.

உழைப்பின் தன்மையைச் செவ்வையாக உணர்ந்து உழைப்பை மேற்கொண்டால் நம் உடம்புக்கு உணவு எப்படியோ அப்படி நம் உயர்ந்த பண்புகளுக்கு உயர்வு இருந்துவரும். மனிதனுடைய சிறந்த திறன்களுக்கு அது போஷிப்பும் ஜீவனும் தந்து அவனுல் முடிந்தவற்றில் மிகச் சிறந்தவற்றைச் செய்யுமாறு அவனைத் தூண்டுகிறது. அவனுடைய சுயேச்சையை சரியான பாதையில் செலுத்தி அவனிடமுள்ள மிருக சுபாவத்தைக் கட்டுப்படுத்தி முன்னேற்றப் பாதையில் நடத்துகிறது. தனது வாழ்க்கை மதிப்புக்களை அவன் எடுத்துக் காட்டி தன் குணச்சிறப்பை மேம்படுத்திச் கொள்ள ஏற்றதொரு சிறந்த நிலைக்களனை அது அவனுக்கு வகுத்துத் தருகிறது.

# முடிவுரை

உழைப்பைப் பங்கீடு செய்யும் முயற்சியானது முதன்மையை உழைப்பின் காரியத்தினின்று மாற்றிவிட்டதென்றும், யந்திர உற்பத்தியாளன் சம்பந்தப்பட்ட வரையில் உற்பத்தியாகும் பொருளினிடமும், தொழிலாளர் சம்பந்தப்பட்ட வரையில் கூலியினிடமும் இந்த முதன்மை தங்கிற்றென்றும் நாம் கண்டோம். இதன் பலன் மிகவும் கேடானது. எப்படியெனில் உழைப்பினுல் உழைப்பவனுக்கு என்ன பலன் என்ற மிக முக்கியமான அம்சம் மறந்தே போய்விட்டது.

அன்றியும், இயற்கையில், உழைப்பவனுடைய சுயநலமே, அதாவது நேர்முகமாய்ப் பெற்ற நன்மையே, கூட்டுறவுக்குரிய நோக்கமாய் இருந்ததென்று கண்டோம். தேனீயானது தான் தேன் எடுக்கும் பூக்கள் யாவும் கருக்கொள்ளச் செய்வது முதற்கடமை என்று கருதியதில்லை. ஆனுல், மகரந்தமும் பூந்தேனும் பெறுவதுதான் அதனுடைய முக்கியமான வேலை. பிரகிருதி ரீதியாக இதைப் பார்த்தால், பூவுக்குத் தேனீ செய்த சேவைக்கு இவை அபின்னமான பூரண கூலியாகின்றன.

உழைப்பின் பங்கீட்டால் நன்மைகளும் பலவாகப் பங்கிடப்பட்டு விடுகின்றன. லாபம், சம்பளம் கூலி, வாடகை, வட்டி முதலியன உதாரணங்கள். இவற்ருல், உழைத்தவன் தன் உழைப்பால் பெற வேண்டிய நன்மையின் பெரும்பகுதி அவனுக்கு வராமல் போகின்றது. இடையிலே லாபத்தைச் சுரண்டிக் கொள்பவன் வந்துவிட்டான். வந்து, மிகவும் கஷ்டப்பட்டுத் தேனீயானது தன் அடையில் சேர்த்து வைத்துள்ள தேன் முதலிய பொருள்களைப் பெரிய அந்துப் பூச்சியானது திருடிக்கொண்டு போவதுபோல லாபத்தின் பெரும் பகுதியை இவன் கொண்டுபோகிருன்.

இயற்கையில் பிராணிகள் விரிவாக ஒத்துழைக்கும்படி செய்வதற்குள்ள ஒரே தூண்டுகோல் சுயநலம்தான் என்ற முடிவுக்கு நாம் வந்திருக்கிருேம். இந்த நன்மைகளைக் குறைத்துவிடுவதற்குச் செய்கின்ற முயற்சி[illegible]வும் அழிவற்ற வாழ்வுக்கு விரோதமானவை. இன[illegible]நிலோ நாள்கழித்தோ ஹிம்சையில் போய் முடியும். சமதர்ம வாதிகள் செல்வத்தைச் சமமாகப் பங்கிட வேண்டும் என்ற நோக்குடையவர்கள். அதனுல் இவர்கள் லாபத்தையெல்லாம் முதலில் சேகரித்துப் பின் அதை விநியோகம் செய்ய வேண்டுமென்று கருதுகிருர்கள். இவர்களுடைய முறையானது அமோக நன்மையைத் தருகின்ற பிரகிருதிக்கு மாருக இருக்கிறது. பிரகிருதி தன் நன்மையை நேரே தருகிறது. சமதர்மவாதிகளினுடைய முறையும் முடிவில் ஹிம்சையில்தான் போய் முடியும்.